# ஐரோப்பா வழியாக

ஏ. கே. செட்டியார்




குமரி மலர் காரியாலயம்
ஆள்வார்பேட்டை, சென்னை-18.

# நன்றி

'மலேயா முதல் கானடா வரை', 'அமெரிக்க நாட்டில்', 'கரிபியன் கடலும் கயானாவும்' என்ற தலைப்பில் ஏற்கெனவே வெளிவந்துள்ள புத்தகங்களைத் தொடர்ந்து நான்காவதாக வெளிவரும் புத்தகம் இது.

பிரயாணத்தின்போதும், பிரயாண நினைவுகளை எழுதியபோதும், அவற்றைப் புத்தகங்களாக உருவாக்கியபோதும் அரும் பெரும் உதவிகள் செய்த அன்பர்கள் அனைவருக்கும் நன்றிகூறக் கடப்பாடு உடையேன்.

உலக மகான்களில் ஒருவரான காந்தியடிகளின் படத் தயாரிப்புக்கு எளியேனை ஆளாக்கி, அப்பணியின் காரணமாகப் பல நாடுகளில் பிரயாணம் செய்ய வாய்ப்பருளிய ஆண்டவனின் திருவருளுக்கு, அவனடி மறவாதிருப்பதன்றி வேறொன்றும் செய்வதறியேன்.

தமிழ்ப் பெருமக்கள் அன்புக்கு நன்றியுடையேன்.

சென்னை – 18
13-4-1961

ஏ. கே. செட்டியார்

# பொருளடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | இங்கிலாந்து | ... | 1 |
| 2. | ஸ்காண்டிநேவியா | ... | 22 |
| 3. | ஹாலந்து | ... | 51 |
| 4. | ஜெர்மனி | ... | 103 |
| 5. | மலேயா | ... | 213 |
| 6. | தாய்லாந்து | ... | 235 |
| 7. | பர்மா | ... | 246 |
| 8. | முடிவுரை | ... | 253 |



லண்டன் - தேம்ஸ் நதிக்கரையில் பார்லிமெண்டு

# இங்கிலாந்து

டிரினிடாடிலிருந்து புறப்பட்ட எட்டாவது நாள் காலை ஏழு மணி சுமாருக்குக் கப்பல் இங்கிலாந்தில் பிளிமத் துறைமுகம் சேர்ந்தது. அக்டோபர் மாத ஆரம்பத்திலேயே குளிர் அதிகமாக இருந்தது; அதனுடன் மூடுபனியும்கூட. உஷ்ணப் பிரதேசமான டிரினிடாடிவிருந்து வந்ததால், குளிர் தாங்க முடியவில்லை

இங்கிலாந்தில் சுங்க அதிகாரிகள் பிரயாணிகளின் சாமான்களைப் பரிசோதித்த முறையும், பிரயாணிகளிடம் நடந்துகொண்ட முறையும் மிகவும் கண்ணியமானவை.

கப்பல் பிரயாணிகளைமட்டும் ஏற்றிச் செல்வதற்காகத் தனி ரயில் உண்டு. அந்த ரயிலில் லண்டனுக்குச் சென்றேன். ஒவ்வொரு முறையும் லண்டனுக்குச் செல்லும்பொழுது, தங்குவதற்கு இடம் கிடைக்காமல் அவதிப்படுவது எனக்கு வழக்கமாகிவிட்டது. எனவே, எனது சாமான்களை ரயில் நிலையத்திலே பத்திரப்படுத்தி வைத்துவிட்டு ஊருக்குள் சென்றேன்.

பிக்காடிலி சர்க்கஸ் என்னுமிடத்தில் ஒரு வீதியைக் கடப்பதற்காகக் காத்துக்கொண்டு நின்றேன். அவ்வழியாகச் சென்ற ஓர் இந்திய இளைஞர் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். சிறிது தூரம் சென்றதும், மீண்டும் என்னிடம் திரும்பி வந்தார். என் கையில் இருந்த சிறிய தோற்பையில் கப்பல் பெயருள்ள அடையாளச் சீட்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அதையே கூர்ந்து கவனித்தார்.

இந்தியாவிலிருந்து வந்திருப்பதாகக் கூறி, எனது பெயரைச் சொல்லி அறிமுகப்படுத்திக்கொண்டேன்.

“என்னுடைய பெயர் காமரான் கார்டிஸ். மேற்கு இந்தியத் தீவுகளில் ஒன்ருன செயிண்ட் வின்ஸென்ட் என்ற தீவில் பிறந்தேன். என் பெற்ருேர் இந்தியாவிலிருந்து வந்தவர்கள். நீங்கள் வைத்திருக்கும் பையில் உள்ள கப்பல் அடையாளச் சீட்டில் ‘டிரினிடாட்’ என்று காணப்பெற்றதால், உங்களோடு பேச வேண்டும் என்றும், உங்களுக்கு உதவி செய்யவேண்டும் என்றும் எனக்கு ஆசை உண்டாயிற்று” என்ருர்.

கப்பல் அடையாளச் சீட்டு, அவ்வளவு உபயோகமாக இருக்குமென்று எதிர்பார்க்கவில்லை.

“இப்பொழுதுதான் ரயிலிலிருந்து வருகிறேன். சாமான்கள் ரயில் நிலையத்திலேயே இருக்கின்றன. தங்குவதற்கு இடம் தேடுகிறேன்” என்றேன்.

“எந்த மாதிரி இடமாக இருக்க வேண்டும்?” என்ருர் காமரான்.

“சுத்தமான இடமாக இருக்க வேண்டும். படுக்கைக்கும், காலையாகாரத்துக்கும் சேர்ந்து பத்து அல்லது பன்னிரண்டு ரூபாய்க்குள் இருந்தால் நலம்” என்றேன.

“இங்கு நான் வந்து ஓர் ஆண்டுக்கு மேலாகிறது. ஆங்கிலேயர்கள் நல்லவர்கள்; ஆனலும் நிறவேற்றுமை போகவில்லை. வெளிப்படையாகக் காட்டிக் கொள்ள மாட்டார்கள்” என்ருர் காமரான்.

இருவரும் அரை மைல் தூரம் நடந்து சென்ருேம். மூன்று நடுத்தர ஹோட்டல்களிலும் கிறிஸ்துவ

இளைஞர் சங்கக் கட்டிடம் ஒன்றிலும் இடமில்லை என்று சொல்லிவிட்டார்கள்.

லண்டனில், ஏழைக் குடும்பங்களிலே இந்திய மாணவர் வசிப்பதற்குச் சுலபமாக இடம் கிடைக்கும். உயர்தரமான ஹோட்டல்களிலே இந்தியர்களுக்கு இடம் கொடுப்பார்கள். ஆனால் மத்திய வகுப்பார் வசிக்கும் நடுத்தரமான ஹோட்டல்களிலே இந்தியர்களுக்குச் சாதாரணமாக இடம் கிடைப்பதில்லை.

இந்தியர்களுக்காவது பாதகமில்லை; சில சமயங்களில் இடம் கிடைத்து விடும். ஆனால் நீக்ரோக்கள் நிலை மிகவும் கஷ்டமானது என்று கேள்வியுற்றேன்.

கில்போர்டு வீதியில் ஏராளமான ஹோட்டல்கள் இருப்பதாகவும், அங்கு நிறவேற்றுமை அதிகமாக இல்லை என்றும் காமரான் கூறினர். இருவரும் அங்கு சென்றோம்.

அங்கே ஒரு ஹோட்டலில் தினமொன்றுக்கு, பதினாலரை ஷில்லிங்—சுமார் பத்து ரூபாய்—என்று கூறினார்கள். இங்கிலாந்தில், தங்குவதற்கும், காலை உணவுக்கும் சேர்த்துத்தான் ஹோட்டல் வாடகை.

ஹோட்டல் கட்டிடம் பழையது. அறையைப் பார்த்ததுமே எனது உற்சாகமெல்லாம் போய்விட்டது. அறைக்குள் ஒரே குளிர். குளிர் காய்வதற்கு அங்கு ஓர் வாயு (Gas) அடுப்பு இருந்தது. அதில் ஒரு ஷில்லிங்—சுமார் பத்தே முக்காலணா—போட்டால்தான் அடுப்பு இயங்கும். தினந்தோறும் ஒரு ஷில்லிங் வீதம் போட வேண்டும்.

வேறு இடங்களைத் தேடி அலைவதைக்காட்டிலும் அதுவே மேலானது என்று முடிவு செய்தேன். காமரான்

என்னுடன் ரயில் நிலையத்துக்கு வந்து, சாமான்களை ஹோட்டலுக்குக் கொண்டுவர உதவி செய்தார். லண்டனிலே ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்துக்கு, பூமிக்குக் கீழே ஓடுகிற ரயில்களில் செல்வதுதான் சுலபமானது. அன்றியும் விரைவாகவும் செல்லலாம். காமரான் மறுநாள் வருவதாகச் சொல்லி, தமது விலாசத்தைக் கொடுத்துவிட்டு, விடைபெற்ருர்.

எனது ஹோட்டலில் சுமார் முப்பது பேர் இருந்தனர். பெரும்பாலோர் இந்தியர்கள். அவர்களில் சிலருடன் பேச முயன்றேன். ஆனுல் தோல்வியடைந்தேன். என்ருலும் ஒருவர் என்னுடன் பேசினுர். அவர் மலையாளத்தைச் சேர்ந்தவர். பத்திரிகை நிருபர் என்று கூறினுர்.

"மலையாளப் பத்திரிகைகளுக்கு எழுதுகிறீர்களா?" என்று கேட்டேன்.

"இல்லை, பாக்கிஸ்தான் பத்திரிகைகளுக்கு எழுதுகிறேன்" என்ருர்.

குளிக்கும் அறைக்குச் சென்றேன். அங்கும் குளிராக இருந்தது. குளிப்பதற்காக வைத்திருந்த தொட்டி பழைய காலத்துச் சாமான். அநேகமாக ஹோட்டலிலிருந்த நாற்காலிகள் முதலியன விக்டோரியா மகாராணி காலத்தில் வாங்கியவை என்று தோன்றிற்று.

மறுநாள் காலையில், ஹோட்டலில் சாப்பிடும் இடத்திற்குச் சென்றேன். அங்கே துர்நாற்றம் வீசிற்று. ஆடுகிற மேஜை, உடைந்து போன நாற்காலிகள். அவற்றில் பெரும்பாலானவற்றில் வில் மெத்தை வைத்திருந்தார்கள். வில் (Spring) கெட்டுப் போனதால் நமக்குச் சௌகரியத்தைக் கொடுப்பதற்குப் பதிலாக அவை மிகுந்த அசௌகரியத்தைக் கொடுத்தன.

கீழ் வீட்டில் சமையலறை. அங்கிருந்துதான் பலகாரம் மேல் வீட்டுக்கு வரவேண்டும். கீழ் வீட்டிலிருந்து மேல் வீட்டிற்குப் பலகாரம் கொண்டுவர கிணற்றில் தண்ணீர் இறைப்பதுபோல ஓர் ஏற்பாடு செய்திருந்தார்கள். கீழ் வீட்டில் ஒரு பெரிய மரப் பலகையில் பலகாரத்தை வைத்து உரக்கக் கத்திஞர்கள். மேல் வீட்டில் சாப்பிடும் இடத்திலுள்ள வேலைக்காரப் பெண், தண்ணீர் இறைப்பதுபோல் கயிற்றை இழுத்தாள். மேலே வந்த பலகாரங்களை எடுத்துப் பரிமாறிஞள். எச்சில் தட்டுக்களை அதே பலகையில் வைத்துக் கீழ் வீட்டுக்கு அனுப்பிஞள்.

மேலே இருந்தபடியே கீழே இருந்தவர்களிடம், யார் யாருக்கு என்னென்ன பலகாரம் வேண்டுமென்று அப்பெண் உரக்கக் கத்திஞள். நமது நாட்டில் சில காப்பிக் கிளப்புகளில் "இரண்டு பேர் நாலரையணு" என்று உரக்கக் கத்துகிருர்களே, அதுபோன்ற நாகரிகத்தையும், 'பண்பாட்டையும்' அந்த வேலைக்காரப் பெண்ணிடமும் கண்டேன்.

வேலைக்காரப் பெண், உணவுவகை கொண்டு வந்த தட்டுக்களைப் பார்த்ததுமே, அருவருப்பாக இருந்தது. அங்கு வைத்திருந்த கத்தி, கரண்டி, முள் முதலியவற்றில் எண்ணெய்ப்பசை இருந்தது. சுவையற்ற உணவுக்குப் பேர்பெற்றது இங்கிலாந்து.

கில்போர்டு வீதி ஹோட்டல் ஒன்று மட்டும் மட்டமானதன்று. அதைப் போல லண்டனில் ஏராளமான மட்டரக ஹோட்டல்கள் இருந்தன.

லண்டனில் தனிக் குடும்பங்களோடு மாணவர்கள் தங்குவதுண்டு. அங்கே பெரும்பாலும் இடமும், உணவும் சாமான்களும் சுத்தமாக இருந்தன.

ஐரோப்பாவிலிருந்து திரும்பி வந்தபொழுது லண்டனில், பிக்காடிலி ஹோட்டல் என்ற பிரபலமான ஹோட்டலில் தங்கினேன். அங்கு இருபத்தோரு ஷில்லிங் முதல் (பதினைன்கு ரூபாய்) வாடகை ஆரம்பமாயிற்று. பிக்காடிலி ஹோட்டலுக்கும், கில்போர்டு வீதி ஹோட்டலுக்குமுள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் உள்ளது போன்றது!

கில்போர்டு வீதி ஹோட்டலில் வசித்த இந்தியர்களில் சில டாக்டர்களும், பாரிஸ்டர்களும் இருந்தனர். அத்தகைய ஹோட்டல்களில் தங்கிய இந்தியர்களில் சிலர், தாய் நாடு திரும்பியதும், தாங்கள் லண்டனில் அனுபவித்த "வசதி"களைக் குறித்துப் பெருமையாகப் பேசுவதுண்டு.

அந்த ஹோட்டலிலேயே தங்கியிருந்த ஓர் ஆங்கிலேயரைச் சந்தித்தேன். அவர் விடாமல் பேசிக்கொண்டே இருந்தார். விஷயம் தெரிந்தவர்கள் அவரிடமிருந்து ஒதுங்கிவிடுவார்கள். அவரிடம் நான் தெரியாமல் அகப்பட்டுக்கொண்டேன். விடுதலை பெற அரை மணி நேரமாயிற்று.

அவர் இந்தியாவில் பஞ்சாப் மாகாணத்தில் பல ஆண்டுகள் உத்தியோகத்திலிருந்தாராம். "எவ்வளவு சௌகரியமாக இருந்தேன். பங்களா, மூன்று வேலைக்காரர்கள். இப்பொழுது லண்டனில் ரயில் இலாகாவில் வேலை செய்கிறேன். வாரம் ஐந்தரைப் பவுன் சம்பளம். அதனைக் கொண்டு சௌகரியமாக வாழ்க்கை நடத்த முடியவில்லை. தினந்தோறும் இரண்டு வேளைதான் சாப்பாடு. பகலிலே சிறுரொட்டியும் தேத் தண்ணீரும் தான் ஆகாரம். மாதத்துக்கு ஒரு முறைதான் படக்காட்சிக்குச் செல்ல முடியும். நல்ல உடை வாங்குவதற்கு ஆண்டு

முழுவதும் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் சேர்த்து வருகிறேன். ஆங்கிலேயர் தவறு செய்தனர். இந்தியாவை விட்டு வந்திருக்கக் கூடாது. இந்தியர்கள் சாந்தமானவர்கள். அவர்களுடன் சமாதானம் செய்துகொண்டு அங்கேயே தங்கி உதவி செய்திருக்க வேண்டும். இந்தியாவை விட்டு வந்ததால் என்னைப்போல எத்தனை ஆயிரக் கணக்கானவர்களுக்கு வேலை இல்லாமல் போய் விட்டது, பாருங்கள்" என்றார்.

* * *

சென்றமுறை சென்றபோது, லண்டன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தலைநகரமாயிருந்தது! ஆங்கிலேயர் நம்மை ஆளுவோராக இருந்தனர்.

பிரிட்டிஷார் தங்கள் ஏகாதிபத்தியத்தை இழந்தாலும், தங்கள் மன உறுதியையும் ஒழுங்கு முறையையும் இழக்கவில்லை.

யுத்தத்தின் போது பிரான்ஸ் சரணடைந்ததும், பிரிட்டன் தன்னந்தனியே நின்று போராடிய மன உறுதியை உலகம் வியக்காமல் இருக்க முடியாது.

அதைப் போலவே யுத்தத்துக்குப் பின்னர் பிரிட்டிஷார் எளிய வாழ்க்கைகூட நடத்த முடியாத நிலையில், தங்களின் மன உறுதியாலும், ஒழுங்கு முறையாலும், சமாளித்து வெற்றி பெற்றதையும் உலகம் வியக்காமல் இருக்க முடியாது.

* * *

யுத்தத்துக்குப் பிறகு உணவுக்குக் கஷ்டப்பட்ட நாடுகளில் முதன்மையானது இங்கிலாந்து. 1953-ஆம் ஆண்டில்தான் உணவுப் பங்கீட்டை நீக்கினார்கள்.

பிரிட்டனிலுள்ள மக்களின் பொருளாதார நெருக்கடி லண்டனில் நன்றாகத் தெரிந்தது. சாப்பிட்டபின்

பரிமாறினவர்களுக்கு இனும் கொடுக்கும் வழக்கம், பிரிட்டிஷாருக்கு உடன்பிறந்தது. ஆனால் பொருளாதார நிலையின் காரணமாக, அதை எல்லோரும் செய்ய முடியவில்லை. லண்டனில் மூலைக்கு மூலை காணப்பெற்ற எண்ணற்ற சிற்றுண்டிச்சாலைகளில், மக்கள் நின்றுகொண்டே உணவு முழுதும் வாங்கிச் சாப்பிட்டனர். அங்கு உணவு பரிமாறுவதில்லை; உணவு விற்கும் இடத்துக்குச் சென்று கையில் பணம் கொடுத்து வாங்கிக்கொண்டார்கள்.

நடுத்தரமான உணவுச்சாலைகளில், நாற்காலியில் உட்கார்ந்து சாப்பிட்டனர். அம்மாதிரியான உணவுச்சாலை யொன்றில் சாப்பிட்டேன். உணவின் விலை சுமார் ஒன்றரை ரூபாய். பரிமாறிய பெண்ணுக்கு மூன்று பென்ஸ்—மூன்றணுவுக்கும் குறைவான தொகை—இனுமாக மேஜையின்மீது வைத்துவிட்டு எழுந்தேன். அந்தப் பெண் என்னிடம் வந்து, "நான் உங்களுக்கு வந்தனம் செலுத்துகிறேன்" என்று கூறினுள். அங்கே சாப்பிட்டவர்களில் பலர் இனும் கொடுக்காமல் சென்றதையும் கவனித்தேன்.

வியாபார நாணயத்திலே, ஆங்கிலேயர் உலக மக்களில் சிறந்து விளங்குகிருர்கள். வியாபார நாணயம் தான் அவர்களின் உயிர் நாடி.

லண்டனிலுள்ள கடைகளுக்குச் சென்ருல் எத்தனை வகையான சாமான்கள்! அனைத்தும் பிரிட்டனில் தயாரிக்கப்பெற்றவை!

அமெரிக்காவில் தயாரிக்கப்பெறும் சிறிய சாமான் ஒன்றை வாங்குவதற்காக, லண்டனில் உள்ள பல பிரபலமான கடைகளுக்குச் சென்றேன். இரண்டு மணி நேரம் அலைந்தும் கிடைக்கவில்லை. ஒரு கடைக்காரர்,

"அமெரிக்காவிலிருந்து சாமான் வாங்க எங்கள் அரசாங்கம் அனுமதிப்பதில்லை. அமெரிக்காவிலிருந்து சாமான்கள் வரவழைத்து நான்கு ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது" என்றார்.

இங்கிலாந்தில் தயாராகி விற்பனையான சாமான்களுக்கு அரசாங்கத்தார் கணிசமான வரி விதித்தார்கள். ஆனால் அதே சாமானை வெளிநாட்டார் வாங்கினால், அதற்கு அரசாங்க வரி இல்லை. அம்மாதிரி வாங்கும் சாமான்களை நம்மிடம் நேரடியாகக் கொடுக்கமாட்டார்கள். நாம் செல்லும் விமானத்திற்குள்ளேயோ அல்லது கப்பலுக்குள்ளேயோ கொண்டுவந்து வைப்பார்கள்.

லண்டனிலுள்ள ஒரு பாங்குக்கு டிரினிடாடிலிருந்து ஒரு 'டிராப்ட்' வாங்கிவந்தேன். வேறு வேலையாக ஏதோ ஓர் இடத்திற்குச் சென்றபோது, வழியில் அந்த பாங்கியின் கிளையொன்றைப் பார்த்தேன். அங்கேயே டிராப்டை மாற்றிவிடக் கூடுமா என்று கேட்க நினைத்தேன்.

பாங்கிக் கட்டிடத்துக்குள் சென்று அங்குள்ள குமஸ்தாவிடம் அதனைக் கொடுத்தேன். அவர் என்னைப் பார்த்து, "இது எங்கள் பாங்கின் தலைமைக் காரியாலயத்தில் மாற்றவேண்டிய டிராப்டு. தலைமைக் காரியாலயம் ஒரு மைல் தூரத்திலிருக்கிறது" என்று கூறி, அங்கே செல்ல வேண்டிய வழியையும் கூறினார்.

"உங்களுடைய தலைமைக் காரியாலயத்துக்குத் தகவல் தெரிவித்துவிட்டு, இதற்குப் பணம் கொடுத்து உதவிசெய்ய முடியுமா? என்னைப்போன்ற பிரயாணிகளுக்குப் போதிய அவகாசம் கிடையாது. அதனால்தான் இந்த வேண்டுகோள்" என்றேன்.

குமஸ்தா அங்குள்ள நாற்காலியில் என்னை உட்காரும்படி கூறிவிட்டு, மேலதிகாரியைப் பார்க்கச் சென்றார். சில விநாடிகளில் மேலதிகாரி, நான் இருந்த இடத்துக்கு வந்து அன்புடனும், மரியாதையுடனும், "தயவு செய்து சிறிதுநேரம் பொறுத்திருங்கள். தலைமைக் காரியாலயத்துக்குத் தகவல் கொடுத்துவிட்டுப் பணம் தந்துவிடுகிறோம்" என்றார். அவ்வாறே சில நிமிஷங்களில் எனக்குப் பணம் கிடைத்தது.

பிஜித் தீவிலிருந்து பிரயாணம் செய்யுமுன், அங்கிருந்த "பாங்க் ஆப் நியூ சவுத் வேல்ஸ்" கிளைக் காரியாலயத்தில், சிறு தொகைக்கு 'டிராவலர்ஸ் செக்குகள்' வாங்கினேன். லண்டனுக்கு வரும்வரை அவற்றை மாற்ற வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை.

லண்டனில் ஒரு பாங்கியில் அந்தச் செக்குகளை மாற்றச் சென்றேன். அவர்கள் பணம் கொடுக்க மறுத்துவிட்டார்கள். அந்தச் செக்குகளில் அவற்றை வாங்கிய தேதியிலிருந்து ஓர் ஆண்டுக்குள் மாற்ற வேண்டுமென்று அச்சடித்திருந்தது. அதை நான் கவனிக்கவில்லை. அப்பொழுது அந்த ஓர் ஆண்டுத் தவணை தீர்ந்து, மேலும் சுமார் ஓர் ஆண்டு ஆகிவிட்டது!

லண்டனில் பாங்க் ஆப் நியூ சவுத் வேல்ஸ்க்கு ஒரு கிளை உண்டு. அங்கு சென்று விவரத்தைக் கூறினேன். ஓர் ஆண்டுக்குமேல் அமெரிக்காவிலும், கானடாவிலும் தங்கியதாலும், அவை டாலர் வழங்கும் தேசமாக இருப்பதாலும் இந்தச் செக்குகளை மாற்ற இயலாத நிலை ஏற்பட்டதென்று விளக்கினேன்.

அங்குள்ள குமஸ்தா, ஆஸ்திரேலியாவிலுள்ள தலைமைக் காரியாலயத்துக்குத் தகவல் தெரிவித்துப் பின்னர்தான் அதனை மாற்றக் கூடும் என்று சட்டப் படி சொல்லியிருக்கலாம். அவர் அப்படிச் சொல்ல வில்லை. தமது மேலதிகாரியிடம் சென்று, சில வினாடி பேசி விஷயத்தை விளக்கினார். திரும்பி வந்து செக்குக் குள்ள தொகை முழுவதையும் என்னிடம் கொடுத்தார்!

ஒரு முறை, லண்டனில் 'தாமஸ் குக்' நிலையத்துக் குச் சென்றேன். வியாபார முறையில் பிரயாணி களுக்கு உதவி செய்கிற நிலையம் அது. இங்கிலாந்தி லிருந்து நார்வே, ஸ்வீடன், டென்மார்க், ஜெர்மனி, ஹாலந்து முதலிய நாடுகளுக்குச் சென்றுவருவதற்கு, கப்பல், ரயில், பிரயாணச் சீட்டுக்களைத் தாமஸ்குக் கிடமே வாங்கினேன்.

ஒவ்வொரு நாட்டுக்கும் சென்று பிரயாணச்சீட்டு வாங்க வேண்டிய அவசியமில்லை. பிரயாணம் செய்கிற நாடுகளில், எந்த ரயிலில் அல்லது கப்பலில் பிரயாணம் செய்கிறோமோ, அதற்குள்ள பிரத்தியேகப் பதிவுச்சீட்டு மட்டும் வாங்கினால் போதும். அன்றியும் பிரயாணச் சீட்டுகளுக்கும், நாம் பவுன் நாணயமாகவே செலுத்தி விடலாம். நம்மைப்போன்ற பிரயாணிகளுக்குப் பவுன் நோட்டு கிடைப்பது சுலபம்; இதர அந்நிய நாட்டு நாணயங்கள் கிடைப்பது கஷ்டம். பிரயாணச்சீட்டுக்கள் அனைத்தையும் ஒரு புத்தகமாகத் தைத்துக் கொடுத்தார் கள். நமக்குக் கொடுத்த தேதியிலிருந்து இரண்டு மாதங் கள்வரைதான் அவை செல்லுபடியாகும். நாம் உப யோகிக்காவிட்டால், தக்க காரணத்துடன், உபயோகிக் காத சீட்டுக்களை, புத்தக உருவிலேயே திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்.

ஐரோப்பாவிலிருந்து இரண்டு மாதங்களுக்குள்ளாகத் திரும்ப முடியவில்லை. லண்டனுக்குத் திரும்பிய பொழுது குறிப்பிட்ட தேதியைவிட மேற்கொண்டு நான்கு தினங்களாகிவிட்டன. பிரயாணச்சீட்டுப் புத்தகத்தில், ஹாலந்திலிருந்து லண்டனுக்குத் திரும்பும் கப்பல்—ரயில் சீட்டைத் தவிர, மற்றவையெல்லாம் உபயோகித்துவிட்டேன். அந்தக் குறிப்பிட்ட கப்பல்–ரயில் சீட்டு செல்லாது என்று கூறினர். உடனே ஹாம்பர்க் நகரிலுள்ள தாமஸ் குக் கிளைக்காரியாலயத்தில் பணம் கொடுத்துப் புதுப் பிரயாணச்சீட்டு வாங்கி, அதற்கடையாளமாக அவர்கள் கொடுத்த ரசீதைப் பத்திரமாக வைத்திருந்தேன்.

ரசீதையும், உபயோகிக்க முடியாமற்போன கப்பல்—, ரயில் பிரயாணச்சீட்டுடன் கூடிய புத்தகத்தையும் லண்டனிலுள்ள தாமஸ் குக் அதிகாரி ஒருவரிடம் கொடுத்தேன். பெர்லினில் நான்கு நாள் மூடு பனியாக இருந்ததால், விமானப் போக்குவரத்தில் தடை ஏற்பட்டதுதான் தாமதத்துக்குக் காரணம் என்று விளக்கிக் கூறினேன்.

“இந்தக் குறிப்பிட்ட கப்பல் - ரயில் பிரயாணச் சீட்டு, ‘பிரிட்டிஷ் ரயில்வே’யாருடையது; அவர்கள் பணம் திரும்பிக் கொடுப்பார்களா என்பது சந்தேகம். இருந்தாலும் முயற்சி செய்கிறேன். உறுதி சொல்ல முடியாது” என்றார் அதிகாரி.

“ரயில்காரரிடம் செலுத்திய பணம் திரும்பி வருமா? அது யானை வாயில் சிக்கிய கரும்புதான்!” என்று நினைத்து அதை மறந்து விட்டேன்.

இங்கிலாந்திலிருந்து கப்பலில் மலேயா சென்றதும், அங்கு எனக்குக் கிடைத்த முதலாவது கடிதம் தாமஸ்

குக் சிங்கப்பூர் கிளைக் காரியாலயத்திலிருந்து. அக் கடிதத்தில், பிரிட்டிஷ் ரயில்வேக்காரர்கள் உபயோகிக் காத எனது பிரயாணச் சீட்டின் பணத்தைக் கொடுத்து விட்டதாகக் குறிப்பிட்டு அத்தொகைக்கு ஒரு செக் அனுப்பியிருந்தனர்.

நியாயமாகவும், நேர்மையாகவும் நடக்கிறவர்களைப் பார்க்கும் பொழுது, நமக்கு மகிழ்ச்சி யுண்டாகிறது. அவர்கள் மீது நமக்கு ஒரு மதிப்பும் உண்டாகிறது. அன்றியும் அத்தகையவர்களோடு எதிர்காலத்தில் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆவலும் நம்மையறியாமலே உண்டாகிறது.

* * *

சில புத்தகங்கள் விலைக்கு வாங்க எண்ணினேன். சென்றமுறை லண்டனில் எனக்கு ஏற்பட்ட அனுபவம் நினைவுக்கு வந்தது.

குறிப்பிட்ட புத்தகமொன்றை—அதன் விலை இருபத் தைந்து ரூபாய் — வாங்குவதற்காகச் சென்றேன். நமது நாட்டில் புத்தக வியாபாரிகள் கழிவு கொடுப்பது வழக்கம். எனவே லண்டனிலும் இந்த வழக்கத்தை ஆரம்பித்தேன். பல கடைகளுக்குச் சென்றேன். எல்லாக் கடைகளிலும் அந்தப் புத்தகம் இருந்தது. ஆனால் கழிவுதர எவரும் முன்வரவில்லை. அரை நாள் முழுதும் அலைந்ததுதான் மிச்சம். முழுவிலை கொடுத்துத் தான் புத்தகம் வாங்கினேன். இந்தமுறை, பழைய அனுப வத்தின் காரணமாக அரை நாள் அலைச்சல் மீதமாயிற்று.

லண்டனிலுள்ள பெரிய புத்தகக்கடையின் பெயர் பாயில்ஸ் (Foyles). இது புத்தகக்கடை மட்டுமன்று. புத்தகசாலை என்றுகூடச் சொல்லலாம். நீங்கள்

எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும் எடுத்துப் படிக்க லாம். யாருமே, "ஏன் படிக்கிறாய்?" என்று கேட்க மாட்டார்கள். அந்தப் புத்தகக்கடை ஒரே கட்டிடமன்று; பல கட்டிடங்கள் கொண்டது. லட்சக் கணக்கான புத்தகங்கள் அங்கே இருந்தன. அபூர்வமான கிடைத் தற்கரிய புத்தகங்களைத் தனிப்பகுதியில் வைத்திருந் தார்கள். உலகத்திலேயே அதுதான் சிறந்த பெரிய புத்தகக்கடை என்று சொல்லுகிறார்கள்.

* * *

இரண்டு நாட்களாகச் சந்திக்க முடியாமலிருந்த காமரான் கார்டிஸை மீண்டும் சந்தித்தேன். காமரா னுக்கு முப்பது வயதிருக்கும். நல்ல கறுப்பு. ஒல்லியான சரீரம். சிறிது சுருண்ட மயிர். அவர் வட அமெரிக்கா விலும், தென் அமெரிக்காவிலும் சாவகாசமாய்ப் பிரயா ணம் செய்திருக்கிறார். ஓவியத்தில் அவருக்குப் பயிற்சி யுண்டு. அதை விருத்தி செய்து கொள்ளவே இங்கிலாந் துக்கு வந்திருந்தார். அவர் கதை அவரே கூறியது:—

"என்னுடைய தகப்பனார் செண்ட் வின்ஸெண்ட் தீவில் ஒரு வியாபாரி. நாங்கள் இருக்கும் ஊரின்பெயர் ஜார்ஜ் டவுன். அந்தத் தீவில் எங்கள் ஊர்தான் இரண்டாவது பெரிய நகரம். என் தகப்பனாருக்குப் போதிய நிலம் இருக்கிறது. என் மூத்த சகோதரி ஒரு டாக்டர். மூத்த சகோதரர் பள்ளிக்கூட ஆசிரியர். இளைய சகோதரர்கள் பள்ளியில் படிக்கிறார்கள்.

"எனக்கு ஓவியத்திலும், வேதாந்தத்திலும் ஆவல். பணம் சம்பாதிக்க இவை இரண்டும் ஏற்றதல்ல! எனவே எங்கள் தீவிலுள்ள பலர் என்னைப் பைத்தியக்காரன் என்று நினைக்கிறார்கள்.

" சில மாதங்களுக்கு முன் இத்தாலி, பிரான்ஸ், ஜெர்மனி முதலிய நாடுகளுக்குச் சென்றேன். இத்தாலியில் என்னிடமிருந்த எழுபத்தைந்து பவுன் நோட்டுக்களைத் திருடிக்கொண்டுவிட்டார்கள். இங்கிலாந்திலிருந்து வெளிநாட்டுக்குக் குறிப்பிட்ட தொகைதான் சட்டப்படி எடுத்துச் செல்லலாம். திருட்டுத்தனமாக அதிகத் தொகை எடுத்துச் சென்றேன். அதற்கு ஆண்டவன் விதித்த தண்டனையே அது. நல்ல காலமாக இங்கிலாந்தில் சிறிது பணம் விட்டுச் சென்றேன். எப்பொழுது தந்தி கொடுத்தாலும், ஊருக்குச் செல்ல என் தகப்பனார் பணம் அனுப்புவார். ஆனால் லண்டனிலே ஏதாவது வேலை செய்துகொண்டு சிறிது காலம் தங்க எண்ணுகிறேன்."

காமரான் மணமாகாதவர்; மதுபானம் அருந்த மாட்டார்; சிகரெட் குடிப்பதும் கிடையாது; சத்துள்ள சைவ உணவான பாலும் பழமும்தான் அவர் ஆகாரம். மேற்கிந்தியத் தீவிலுள்ள ஒரு மாணவர் அவ்வாறு இருந்தது அதிசயமே யாகும்.

லண்டனிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்திலுள்ள சுவாமிஜிக்கு அவரை அறிமுகப்படுத்தி வைத்தேன். ஜெர்மனியில் தங்கியிருந்தபொழுது காமரான் கடிதம் வந்தது. அக்கடிதத்தின் சுருக்கம் இது:—

" ராமகிருஷ்ண ஆசிரமப் பிரசங்கங்களுக்குத் தவறாமல் சென்று வருகிறேன். இம்மாதிரி ஒரு ஸ்தாபனம் இருப்பது எனக்கு முன்னரே தெரியாமல் போய்விட்டதே என்று வருந்துகிறேன். வேலை தேடித் தேடி அலுத்துவிட்டது. எந்த வேலையும்—காலியிருந்தால் கூட — கறுப்பு நிறத்தவருக்குக் கிடைப்பதில்லை.

ஒரு கடைக்காரர் இந்தக் கசப்பான உண்மையை எனக்குக் கூறினார்.''

மீண்டும் லண்டனுக்கு வந்தபொழுது, காமரான் லண்டனில் இல்லை. 1957 ஆம் ஆண்டில் அவர் இந்தியாவுக்கு வந்து சுற்றுப் பிரயாணம் செய்தபொழுது அவர் என்னைச் சந்தித்தார்.

* * * *

இங்கிலாந்திலுள்ள இந்திய அரசாங்கப் பிரதிநிதிக்கு ஹைகமிஷனர் என்று பெயர். அவருடைய காரியாலயம் இருக்குமிடத்திற்குப் பெயர் "இந்தியா ஹவுஸ்''.

அங்கே சமீப காலம்வரை, ஆயிரத்து அறுநூறு பேருக்குமேல் வேலை செய்ததாகவும், தற்பொழுது மிகச் சிக்கனத்தின் காரணமாக அவர்களின் எண்ணிக்கையை ஆயிரத்து நூருகக் குறைத்துவிட்டதாகவும் கேள்விப் பட்டேன்.

ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்ட இரு நாடுகள் என்று அமெரிக்காவும், இங்கிலாந்தும் பெருமை கொள்கின்றன. இன்று உலகத்திலேயே பணக்கார நாடு அமெரிக்கா. அவர்களுடைய அரசாங்கப் பிரதிநிதிகளில் முக்கியமானவர் இங்கிலாந்துக்கு அனுப்பப்பெறுகிறார். அப்படியிருந்தும் இங்கிலாந்திலுள்ள அமெரிக்கக் காரியாலயங்களில் வேலை செய்தவர்களின் எண்ணிக்கையைவிட இந்தியா ஹவுஸில் வேலை செய்தவர்களின் எண்ணிக்கை அதிகமென்று கேள்விப்பட்டேன்.

இந்தியா சுதந்திரமடைவதற்கு முன், இங்கிலாந்திலிருந்த ஒரு மந்திரி இந்தியா சம்பந்தமான காரியங்களைக் கவனித்து வந்தார். இப்பொழுது இந்தியா சுதந்திர

நாடு. ஆங்கிலேய மந்திரி காலத்தில் இந்தியா ஹவுஸில் இருந்த டாம்பீகமும், ஆடம்பரமும் இன்றும் காணப்பட்டன.

லண்டனில் தங்கியிருந்தபொழுது இந்தியா ஹவுஸ் செல்லவேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டது. மேற்கு இந்தியத் தீவுகளில் இந்திய அரசாங்கப் பிரதிநிதியாக இருந்த ஸ்ரீ ஆனந்த மோகன் ஷகாயை, மோரீஸஸ் தீவுக்கு மாற்றிவிட்டார்கள். ஸ்ரீ ஷகாயும் அவருடைய குமாரத்தியும் விமானத்தில் மோரீஸஸ் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது. தம்முடைய சாமான்களை லண்டனுக்குக் கப்பலில் அனுப்ப விரும்பினுர் ஷகாய். சாமான்களைத் தனியாக அனுப்ப முடியாதென்றும், யாராவது பிரயாணிகளுடன்தான் சாமான்களை அனுப்ப இயலும் என்றும் கப்பல்காரர்கள் கூறிவிட்டனர். ஷகாய் என்னிடம், “ இந்தச் சாமான்கள் மொத்தம் எட்டு. இங்குள்ள வேலைக்காரர் இவற்றைக் கப்பலில் ஏற்றி, அதன் அடையாளச் சீட்டுக்களை உங்களிடம் கொடுத்துவிடுவார்கள். லண்டனிலுள்ள இந்திய ஹைகமிஷனர் காரியாலயத்துக்கு விவரமாக, விமானத் தபால் எழுதி, தந்தியும் கொடுத்திருக்கிறோம். அந்தக் காரியாலயத்தைச் சேர்ந்த ஒருவர் கப்பலில் உங்களைச் சந்தித்து அடையாளச் சீட்டுக்களைப் பெற்றுக்கொள்வார் ” என்று கூறினுர். அதற்கு நான் சம்மதித்தேன்.

கப்பல் இங்கிலாந்தை அடைந்தது. ஆனுல் ஹைகமிஷனர் காரியாலயப் பிரதிநிதி யாரையும் காணேம். கப்பல் சில மணி நேரத்துக்குப் பிறகு பிரான்ஸ் தேசத்துக்குப் புறப்பட்டுவிடும். எனவே, எட்டு சாமான்களும் கப்பலடியில் உள்ள கொட்டகைக்கு வந்துவிட்டனவா என்றுமட்டும் கவனித்துக்கொண்டேன்.

2

மறுநாள் காலையில், இந்தியா ஹவுஸுக்குச் சென்றேன். வாயிலில் நுழைந்தவுடன் வரவேற்பாளர் ஒருவர் இருந்தார். அவரிடம் விவரங்களைக் கூறினேன். அவருக்கு ஒன்றும் புரியவில்லை.

பல முறை மூன்று மாடிகள் ஏறி இறங்கினேன். ஒவ்வொருவரும் இது தமக்குச் சம்பந்தமில்லை என்று சொன்னாரே தவிர, இது சம்பந்தமாக யாரைப் பார்க்க வேண்டுமென்று சொல்லவில்லை. அப்படிச் சொல்லிய இரண்டொருவரும் தவறுதலாகச் சொன்னார்கள்.

கால் மணி நேரத்திற்குப் பின்னர் பொதுநலத் தொடர்பு அதிகாரியைப் (Public Relations Officer) பார்த்தேன். அவர் ஓர் இந்தியர். பெயரிலிருந்து வங்காளத்தைச் சேர்ந்தவர் என்று தெரிந்தது. தாடி வைத்திருந்தார். ஆங்கிலேயரைப்போலக் குழாய் (Pipe) மூலம் புகைத்துக்கொண்டிருந்தார்.

அவர், என்னை உட்காரும்படி கூறவில்லை. நானே ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன். விவரங்களை நிதானமாகக் கூறினேன். அவர் தமது தாய்மொழியல்லாத ஆங்கிலமொழியை, இயற்கையாகப் பேசாமல், ஆங்கிலேயரைப்போல, பேசுவதற்குக் கஷ்டப்பட்டதைப் பார்த்த பொழுது எனக்குப் பரிதாபமாக இருந்தது.

இந்தியா ஹவுஸ் இடம் கொள்ளாததால், அதன் அலுவல்களுக்காக, லண்டனில் இன்னும் ஐந்தாறு இடங்களில் கட்டிடங்களை வாடகைக்கு எடுத்துக்கொண்டிருந்தார்கள். 'கில்போர்டு' வீதியில் உள்ள காரியாலயத்துக்கு அந்த அதிகாரி டெலிபோன் செய்தார்.

பிறகு அவர் என்னைப் பார்த்து, "டிரினிடாடிலிருந்து தந்தி கிடைத்ததாக அவர்கள் கூறுகிறார்கள்.

நீங்கள் 'கில்போர்டு' காரியாலயத்துக்குச் சென்று அவர்களை நேரில் சந்தித்துப் பேசுங்கள்" என்றார்.

எனக்கு ஆத்திரமாக இருந்தது. "உங்கள் தவறுதல்களைக் குறித்து நீங்கள் யாரும் வருத்தப்படுவதாகத் தெரியவில்லை. அதுமட்டுமல்லாமல் கில்போர்டு வீதிக்கு என்னைப் போகச் சொல்லுகிறீர்கள். உங்கள் காரியாலயச் செய்கையைக் குறித்து நீங்கள் வெட்கப்பட வேண்டும். இந்தியா ஹவுஸ் ஊழல்களைக் குறித்து நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இதுவரை நம்பவில்லை. இப்பொழுதுதான் நேரில் பார்க்கிறேன். இந்திய மக்களின் பணம் இப்படி வீணாகிறது. என்னிடமுள்ள எட்டு அடையாளச் சீட்டுக்களை உடனே வாங்கிக் கொண்டு, எனக்கு ரசீது கொடுக்கிறீர்களா? அல்லது இவற்றை ஸ்ரீ ஷகாய்க்கே திருப்பி அனுப்பிவிடட்டுமா?" என்று சொல்லிக்கொண்டே எழுந்தேன்.

அதனை அந்த அதிகாரி எதிர்பார்க்கவில்லை. உடனே அவர், அவசர அவசரமாக ஒரு ரசீது எழுதி என்னிடம் கொடுத்துவிட்டு, அடையாளச் சீட்டுக்களைப் பெற்றுக் கொண்டார்.

அரசாங்க சம்பந்தமாக அவர்களுக்கு உதவிசெய்யச் சென்றபொழுதே இப்படி நடந்துகொண்டார்களானால், சொந்த விஷயமாக உதவிக்குச் சென்றால் என் நிலைமை என்னவாகியிருக்கும் என்று என்னால் எண்ணவும் முடியவில்லை.

லண்டனிலே இந்தியா ஹவுஸ் சிப்பந்திகளான இந்தியர்களின் இத்தகைய திறமையையும், ஊதாரித் தனத்தையும் கண்டு மன வேதனை அடைந்தேன்.

* * * *

லண்டனிலுள்ள இந்திய உணவுச்சாலைகள் மகிழ்ச்சியைக் கொடுத்தன.

பிரபலமான வீராசாமி ஹோட்டல் தற்பொழுது ஐரோப்பியர்களுக்குச் சொந்தமானது என்று கேள்விப் பட்டேன்.

பெரும்பாலான உணவுச்சாலைகள், சிறு சந்துகளி லும், மூலைமுடுக்குகளிலும் இருந்தன. கடல் கடந்த நாட்டிலே, சுவையான நம் நாட்டு உணவு கிடைக்கும் பொழுது, நாம் மகிழ்ச்சியடைகிறோம். உணவின் விலை அதிகமாகத் தோன்றினாலும் நாம் பொருட்படுத்துவ தில்லை. ஆனால் ஒரு ஹோட்டலில் சாப்பிட்டுக்கொண் டிருந்தபொழுது, அந்த ஹோட்டலின் சொந்தக்காரரான இந்தியர் என்னிடம் வந்து, "உங்களுக்கு மாங்காய் ஊறுகாய் வேண்டுமா? கொஞ்சம் எலுமிச்ச ஊறுகாய் வைத்துக்கொள்ளுங்கள்" என்று கூறி விதவிதமான ஊறுகாய்களைக் கொண்டுவந்து வைத்தார். அவர் காட்டிய அன்பையும், உபசாரத்தையும் கண்டு மகிழ்ந் தேன். சாப்பிட்டு முடிந்ததும் பட்டியல் கொடுத்த பொழுது ஒவ்வொரு வகை ஊறுகாய்க்கும் சுமார் நான்கணா வீதம் தொகை சேர்ந்திருந்ததைப் பார்த்ததும் அதிர்ச்சியடைந்தேன்.

உலகத்திலுள்ள பல நாட்டு உணவு வகைகளும் லண்டனில் கிடைத்தன.

* * * *

யுத்தத்தால் லண்டன் நகரம் சேதமடைந்ததென்று இப்பொழுது யாருமே சொல்லமுடியாது.

லண்டனில் கேளிக்கைகள் அதிகமாகிவிட்டன. அவை யுத்த காலத் தேவையாக இருந்திருக்கலாம். இப் பொழுது நிரந்தரமாகிவிட்டன.

திரைப்படக் காட்சிகளும், நாடகங்களும் லண்டனில் அதிகம். நாடகக் கலை லண்டன் நகருக்குத் தனிச் சிறப்பு. சில நாடகங்கள் மாதக் கணக்கில் நடைபெற்றன. நாடகக் கட்டணம் இரண்டரை ரூபாய் முதல் பதினைந்து ரூபாய் வரை. சில நாடகங்களுக்குப் பல தினங்களுக்கு முன் கூட்டியே அனுமதிச்சீட்டு வாங்கினார்கள்.

பிரிட்டிஷார் காலத்துக்கேற்ப நடந்து கொள்வதில் நிபுணர்கள். உலகத்திலுள்ள எல்லா முக்கிய நாடுகளுக்கும், அவை கம்யூனிஸ்டு நாடாக இருந்தாலும் சரி, இல்லையானாலும் சரி, பிரிட்டிஷ் நல்லெண்ணத் தூது கோஷ்டிகள் சென்று வருவதை நாம் பார்க்கிறோம். சமீபத்தில், முன்னாள் பிரிட்டிஷ் பிரதமர் அட்லியின் தலைமையில், ஒரு நல்லெண்ணத் தூதுகோஷ்டி கம்யூனிஸ்டு சீனாவுக்குச் சென்று திரும்பிற்று.

சீனாவைப்பற்றிய தங்கள் அபிப்பிராயங்களை அட்லியும், மற்றவர்களும் பத்திரிகைகளில் எழுதினார்கள்.

ஆனால் பிரிட்டிஷ் நல்லெண்ணத் தூதுகோஷ்டியைப் பற்றிச் சீனர்களின் அபிப்பிராயம் என்ன என்பதைக் குறித்து, அந்தச் சமயத்தில், சீனாவிலிருந்த இந்தியப் பத்திரிகை நிருபர் ஒருவர் பின்வருமாறு எழுதியிருந்தார் :—

“சீனர்கள் தங்களுக்குள்ளாகப் பேசிக்கொள்ளும் போது, பிரிட்டிஷ் நல்லெண்ணத் தூதுகோஷ்டியைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் தெரியுமா? பிரிட்டிஷாருக்கு நிரந்தரமான சிநேகிதர்களும் கிடையாது; நிரந்தரமான விரோதிகளும் கிடையாது; நிரந்தரமான வியாபாரம் ஒன்றுதான் அவர்கள் நோக்கம்”.

---

# ஸ்காண்டிநேவியா

## நார்வே

**நா**ர்வே, ஸ்வீடன், பின்லந்து, டென்மார்க் ஆகிய நாடுகள் கொண்டது ஸ்காண்டிநேவியா.

இங்கிலாந்தில் நியூகாஸில்—ஆன்–டைன் என்ற துறைமுகத்திலிருந்து, நார்வேயில் பெர்கன் என்ற துறைமுகத்துக்குக் கப்பலில் சென்றேன். இருபத்திரண்டு மணி நேரத்தில் பெர்கனை அடைந்தேன்; பொழுதுபோனதே தெரியவில்லை.

கப்பலின் பெயர் லிடா (Lida). சுமார் ஆறுயிரம் டன் எடை உள்ள புதிய கப்பல்; சுத்தமாகவும் அழகாகவும் இருந்தது. கப்பல் ஆட்டத்தைக் குறைப்பதற்கு 'ஸ்டெபிலைசர்' என்ற சாதனம் இருந்தது. கப்பலுக்கு நடுவே 'கபேட்டேரியா' முறையில் அருமையான உணவுச்சாலை இருந்தது. அதாவது, நாம் விரும்பும் உணவை வாங்கிக்கொண்டு அதற்குள்ள விலையைக் கொடுத்துவிட வேண்டும். நமது சாப்பாட்டை, நாமே எடுத்து வந்து, நாம் விரும்புகிற இடத்தில் வைத்துச் சாப்பிடலாம். சுமார் இருநூறு பேர் ஒரே சமயத்தில் சாப்பிடுவதற்கு வேண்டிய வசதிகள் இருந்தன. அந்தக் கப்பல் நார்வீஜியருக்குச் சொந்தம்.

கப்பலிலேயே சிறிய கடை ஒன்று இருந்தது. ஆனால் அங்கு நடந்த வியாபாரம் பெரிது. கப்பல் செல்லும்பொழுது விற்கப்பெறும் சாமான்களுக்குத் தீர்வை கிடையாது. ஆகையால், சாமான்களின் விலை

மிக மலிவு. நார்வேக்கு வருபவர்கள் குறிப்பிட்ட அளவு சாமான்களைத் தீர்வையில்லாமல் கொண்டு வரலாம். உதாரணமாக ஆள் ஒன்றுக்கு இருநூறு சிகரெட்டுகள், ஒரு போத்தல் மதுவகை முதலியன. இது ஐரோப்பியருக்குத்தான். ஐரோப்பியரல்லாத பிரயாணிகளுக்கு இரட்டிப்புச் சலுகை. அதாவது நானூறு சிகரெட்; மதுவகை இரு போத்தல்கள். ஐரோப் பியரல்லாதவரில், அமெரிக்கர், ஆஸ்திரேலியர் முதலிய எல்லோரும் சேர்ந்தவர்கள்; அதாவது, ஐரோப்பிய நாடுகளைச் சேராதவர்கள்.

சாமான்களுக்குக் கப்பலில் கொடுக்கும் விலையைக் காட்டிலும், நார்வேயில் வாங்கினால் ஒன்றுக்கு இரண் டரை அல்லது மூன்று பங்கு அதிக விலை கொடுக்க வேண்டும். கப்பலில் மதுப்போத்தல் சுமார் இருபத் தைந்து குரோனர். அதே போத்தலுக்கு நார்வேயில் எழுபத்தைந்து குரோனர். ஒரு குரோனர் என்பது சுமார் பத்தரையணா. சிகரெட், மதுவகைகளாவது அன் னிய நாட்டுச் சாமான்கள். ஆனால் நார்வேயில் செய்த பொருளையே, கப்பலில் பாதி விலைக்கு விற்றனர். உதாரணமாக, நார்வேயில் தயாரிக்கப்பெற்ற மிட்டாய் தினுசுகள், போட்டோ காமிராக்கள், பவுண்டன் பேனா, கடிகாரம் முதலிய பல சாமான்கள் அந்தக் கப்பலிலே குறைந்த விலைக்குக் கிடைத்தன.

நார்வேயின் தலைநகரம் ஒஸ்லோ. இரண்டாவது பெரிய நகரம் பெர்கன். இது மலையடிவாரத்தில் உள்ளது. மலையின்மீது பல வீடுகள் இருந்தன.

பெர்கனை அடைந்தபொழுது இரவு மணி எட்டு. ஏராளமான மின்சார விளக்குகள் பிரகாசித்தன. சிறிது மழை தூறிற்று. வழக்கமான சடங்குகள் விரைவில்

முடிந்தன. சுங்க அதிகாரி எனது பெட்டியைத் திறக்கும்படி கூறவே இல்லை. ஐரோப்பியப் பிரயாணம் முழுவதும் எனது பெட்டியைத் திறக்கும்படி சுங்க அதிகாரிகள் கூறியதே கிடையாது.

நண்பர்களான ஜான் ஹோயமும் அவர் மனைவி எல்ஸியும் கப்பலடியில் காத்திருந்தனர். அவர்களைச் சந்தித்துப் பதினன்கு ஆண்டுகள் ஆயின.

1937ஆம் ஆண்டில் நான்கு மாணவர்கள் சேர்ந்து அமெரிக்காவில், மோட்டாரில் சுமார் பதினையாயிரம் மைல் சுற்றுப் பிரயாணம் செய்தோம். ஜான்தான் அதற்கு மூல காரணம். அவருடைய மோட்டாரில்தான் பிரயாணம் செய்தோம். எங்களுடன் வந்த மற்ற இருவர், வால்ட் என்ற டச்சுக்காரரும், வால்த்தர் என்ற ஜெர்மானியரும்.

பக்குவம் செய்த மீன்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பெரிய வியாபாரிகளில் ஒருவர் ஜான். 1939ஆம் ஆண்டில் அவரையும் அவர் மனைவி எல்ஸியையும் நார்வேயில் சந்தித்தேன். அப்பொழுது ஒரு வயதுப் பையனாக இருந்த அவர்களுடைய குமாரனுக்கு இப்பொழுது வயது பதினைந்து.

பெர்கனிலிருந்து பத்து மைல் தூரத்தில் ஜான் வசித்தார். சிறிய வீடு; ஆனால் மிக வசதியானது. அவர்களுடைய இரு பெண்களையும் அறிமுகம் செய்து வைத்தனர். குழந்தைகளை விரைவில் படுக்கைக்கு அனுப்பிவிட்டு நாங்கள் மூவரும் இரவில் நெடுநேரம் வரை பேசிக்கொண்டிருந்தோம். பதினன்கு ஆண்டுக் காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளை ஜானும் நானும் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டோம்.

மறுநாள் காலை ஜான் தமது காரியாலயம் சென்றார். எல்ஸி, பெர்கன் நகரத்தைச் சுற்றிக் காட்டினார். எல்லோரும் சிறந்த உணவுச்சாலை ஒன்றில் சந்தித்துச் சாப்பிட்டோம். அப்பொழுது எல்ஸி என்னைப் பார்த்து, "தாங்கள் சென்றமுறை வந்தபொழுது மசாலாப்பொடிக் குப்பி (Curry Powder) ஒன்று கொடுத்தீர்கள் அல்லவா? யுத்த காலத்தில் அது எவ்வளவு பயன்பட்டது தெரியுமா? சுவையற்ற - சில சமயங்களில் துர்நாற்றமுள்ள கிழங்குகளையெல்லாம் சாப்பிட நேர்ந்தது. அப்பொழுது அந்த மசாலாப் பொடியைக் கொஞ்சம் கொஞ்சமாக உபயோகப்படுத்தினோம். அந்தப் பொடி தீரும்வரை அந்தக் குப்பியை ஜாக்கிரதையாகப் பொன்னேபோலப் பாதுகாத்தோம்" என்றார்.

சாப்பிட்டபின் எல்லோரும் வீட்டுக்குச் சென்றோம். அன்றிரவு எனக்கு விருந்து என்றும், சில நண்பர்களை விருந்துக்கு அழைத்திருப்பதாகவும் ஜான் கூறினார்.

எல்ஸி விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். அங்கு வேலைக்காரர்கள் கிடையாது. எல்ஸியே தான் எல்லாம் சமைக்க வேண்டும்.

சமையல் செய்து கொண்டிருந்தபோதே, அன்றிரவு விருந்துக்குச் சாப்பிட வரப்போகும் நண்பர்களைப்பற்றி எல்லாம், எல்ஸி சொல்லிக் கொண்டே வந்தார். "ஒருவரைப்பற்றி மட்டும் முன்னதாகவே எச்சரித்து விடுகிறேன். அவர், யுத்தகாலத்தில் ஜெர்மானியர்களுடன் சேர்ந்திருந்தார். ஜெர்மனி நிச்சயம் ஜயித்து விடும் என்று நம்பினார். இப்பொழுது நாங்கள் அவரை மன்னித்து விட்டோம். அவர் மனைவி மிக நல்லவள்.

"யுத்தத்தில் ஜெர்மானியர் செய்த அக்கிரமங்களை நினைத்தாலே பயமாகவிருக்கிறது. அதிலும் அவர்கள் யூதர்களை நடத்திய கொடுமை சொல்லி முடியாது. யூதர்களுக்கெல்லாம் அவர்கள் கழுத்தில் ஓர் அட்டையை மாட்டிவிட்டார்கள்.

"எங்கள் ஊரில், எங்களுக்கு நன்ருகத் தெரிந்த பல யூதர்களைக் குடும்பத்தோடு எரித்து விட்டார்கள். எங்கள் கண்ணெதிரே நடந்ததைப் பார்த்திருக்கிரேம். ஜெர்மன் ராணுவச் சிப்பாய்கள் இந்த யூதர்களைப் பாதுகாப்புடன் வாயு குண்டத்துக்கு (Gas chamber) அழைத்துச் சென்று உயிருடன் எரித்தனர். அவர்களுடைய குடும்பத்தினர் ஏங்கி நின்றனர்."

இரவு விருந்துக்கு நான்குபேர் வந்தார்கள். அரை குறையாக எங்களுக்குத் தெரிந்த உலக விஷயங்களைப் பற்றி எல்லாம் பேசிக்கொண்டிருந்தோம். அருமையான சாப்பாடு. ஐந்து 'கோர்ஸ்' 'டின்னர்'. சூப், ஒரு தட்டில் உணவு, பின்னர் வேருெரு வகையான உணவு, ஐஸ்கிரீம் அல்லது ஏதேனும் இனிப்பானவை, கடைசியாக காப்பி. ஒவ்வொன்றுக்கும் ஒரு கோர்ஸ் என்று சொல்லுவார்கள். ஏழு கோர்ஸ், ஒன்பது கோர்ஸ் டின்னர்களும் உண்டு.

ஜானுடைய குமாரன் மைக்கேலுக்கு நாங்கள் பேசிக்கொண்டிருந்த உலக விவகாரங்களில் ஒன்றும் சிரத்தை இல்லை. அவன், "உங்கள் ஊரில் எந்தவிதமான சாப்பாடு? எத்தனை கோர்ஸ்?" என்று என்னைக் கேட்டான்.

"எங்கள் ஊரில் மூன்று 'கோர்ஸ்'கள்.
முதலாவது கோர்ஸ் சோறு
இரண்டாவது கோர்ஸ் சோறு
மூன்ருவது கோர்ஸ் சோறு" என்றேன்.

அவன் வயிறு குலுங்கச் சிரித்தான். நெய், சாம்பார், மோர், காய்கறி முதலியவற்றை அவனுக்கு விவரித்துக் கூறினேன்.

மறுநாள் காலை ஓஸ்லோவுக்குப் பிரயாணமானேன். மூன்றுவது வகுப்புத்தான். எக்ஸ்பிரஸ் ரயில், மிகவும் வசதியாக இருந்தது. கூட இருந்த பிரயாணிகள் மிக அன்பாக நடந்துகொண்டனர்.

மாலையில் ஓஸ்லோ சேர்ந்தேன். ஓஸ்லோ அமைதியான நகரம். ஜனத்தொகை சுமார் நாலரை லட்சம். அங்கு சென்றதும் பழைய நண்பர்களின் பெயர்கள் எல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. ஆனால் அவர்கள் விலாசம் ஞாபகமில்லை. டெலிபோன் அட்டவணையின் உதவியால் இருவரின் விலாசங்கள் கிடைத்தன. எனவே மற்றவர்களையும் சந்திப்பது சுலபமாயிற்று.

'விசா' இல்லாமல் ஒரு நாட்டுக்கும் செல்ல முடியாது. ஓஸ்லோவில் எனக்கு முக்கியமான வேலை விசா பெறுவது. விசா என்பது அந்தந்த நாட்டு அரசாங்கத்தார் கொடுக்கும் அனுமதி. எந்தெந்த நாடுகளுக்குச் செல்ல விரும்புகிறோமோ, அந்தந்த நாடுகளின் பெயரை நாம் பாஸ்போர்ட் வாங்கும்போதே அதில் எழுதி வாங்கவேண்டும்.

ஹாலந்திலிருந்து வால்ட் உடனே வரும்படி எழுதியிருந்தார். ஹாலந்துக்கு ரயிலில் செல்வதானால் ஸ்வீடன், டென்மார்க், ஜெர்மனி முதலிய நாடுகள் வழியாகச் செல்லவேண்டும். முதலில் ஹாலந்துக்கு விசா பெறவேண்டும். பின்னர் ஜெர்மனி, டென்மார்க், ஸ்வீடன் முதலிய நாடுகளின் வழியே செல்ல விசா பெறவேண்டும். இதற்கு 'டிரான்ஸிட் விசா' என்று பெயர். ஹாலந்து தேசத்து விசா வாங்கினால்தான்

ஜெர்மனி விசா கொடுப்பார்கள். ஜெர்மனி விசா வாங்கினுல்தான் டென்மார்க் விசா கிடைக்கும். அதைப் போலவே டென்மார்க் விசா வாங்கினுல் தான் ஸ்வீடன் விசா கிடைக்கும். ஹாலந்து தேசத்து விசா வாங்கிய பின்னர் டென்மார்க் விசா கேட்டால் கிடைக்காது. முறைப்படிதான் வாங்கவேண்டும். இந்த விதி டிரான்ஸிட் விசாவுக்கு மட்டும்தான். சாதாரண விசா இந்த நாடுகளில் சுலபமாகக் கிடைக்கும். டிரான் ஸிட் விசா அந்தந்த நாடுகளின் வழியே செல்வதற்குத் தான். 48 அல்லது 72 மணி நேரம் அந்த நாடுகளில் தங்கலாம். சில நாடுகளில் டிரான்ஸிட் விசாவுக்குப் பணம் கிடையாது. சில நாடுகளில் மிகச் சொற்பமான தொகை வசூலித்தனர். சாதாரண விசாவுக்கு அந்தந்த நாட்டுச் சட்டங்களுக்குத் தக்கபடி கட்டணம் செலுத்த வேண்டும்.

பிரயாணத்தில் உள்ள சிரமங்களில் ஒன்று இந்த விசா பெறுவது. சில நாடுகளில் விசா வாங்க நமூ ஞவை ஆறு பிரதிகள் பூர்த்தி செய்து நமது போட்டோ பிரதிகள் ஆறு கொடுக்கவேண்டும். விசாவுக்கு வாங் கும் பணம் எல்லா நாட்டினருக்கும் ஒரே மாதிரியல்ல. ஒவ்வொரு நாட்டு அரசாங்கமும் மற்ற நாடுகளுடன் எப்படி ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறதோ அதைப் பொறுத்துத்தான் கட்டண விகிதங்கள். சில நாடுகளில் விசாவுக்காகக் கேட்கும் தொகையைப் பார்த்தால் மூர்ச் சையாக வேண்டி நேரும். யாத்ரிகர்களின் விசா வரு மானம் ஒன்றைக்கொண்டுதான், அந்த நாட்டு அரசாங் கங்கள் நடக்கின்றனவோ என்றுகூடத் தோன்றும்.

விசா பெறும் இடங்களுக்கு 'கான்சலேட்' (consulate) என்று பெயர். அதிகாரிக்கு 'கான்சல்' (consul) என்று பெயர். சில கான்சலேட்டுகளில், ஒவ்வொரு நாளும்

இரண்டு மணி நேரம் விசா கொடுப்பதற்கென ஒதுக்கி யிருப்பார்கள். சில இடங்களில் மறுநாள் வரச்சொல்லு வார்கள். மாதக் கணக்காக் காத்திருக்கவேண்டிய சந்தர்ப்பங்களும் உண்டு.

ஓஸ்லோ நகரத்தில் நான் விசா வாங்கவேண்டிய நான்கு கான்சலேட்டுகளும், நகரத்தின் வெவ்வேறு பகுதிகளில் இருந்தன. அவற்றிற்குச் சென்று வந்தாலே, அந்த நகரத்தில் பாதியைச் சுற்றிப்பார்த்த மாதிரி.

ஜெர்மன் கான்சலேட்டிலிருந்த பெண், மிக விரை வில் விசா எழுதிக் கொடுத்தாள். அதற்குக் கட்ட ணம் கிடையாது என்ருள். ஹாலந்திற்குச் செல்லும் போதும், ஹாலந்திலிருந்து நார்வேக்குத் திரும்ப எண் ணினுல், அவ்வாறு திரும்பி வரும்பொழுதும், ஜெர் மனியை இரு முறை கடப்பதற்கு அந்த ஒரே விசா போதுமென்றும், அதில் இருமுறை கடக்க அனுமதி யிருப்பதாகவும் கூறினுள். அவளுடைய முன்யோச னைக்கும், அன்புடன் செய்த உதவிக்கும் நன்றி கூறினேன்.

காலை நேரமெல்லாம் விசாவுக்கு அலைந்தபடியால் மாலை நேரம் எல்லாம், பழைய நண்பர்களைத் தேடுவதில் செலவிட்டேன்.

முதன் முதலாகச் சந்தித்த பழைய நண்பர் ஸ்ரீமதி பொக்கன் லாஸன். அவருக்கு வயது எண்பது இருக் கும். நார்வேயில் மிகப் பிரசித்திபெற்ற சங்கீத வித்து வான். அந்த வயதிலும் அவர் வானெலியில் பாடினுர். அம்மையார் புத்தக ஆசிரியையும் கூட. இந்தியாவி னிடத்தும், காந்தியடிகளிடத்தும் மாருத அன்பு கொண் டவர். 1930ஆம் ஆண்டில் சத்தியாக்கிரகப் போர்

நடந்த சமயத்தில் இந்தியாவுக்கு வந்து சில மாதங்கள் தங்கினர். காந்தியடிகளைப் பலமுறை சந்தித்துப் பேசினர். தமது இந்திய யாத்திரையைப்பற்றி நார்வீஜிய மொழியில் சிறந்த நூலொன்று வெளியிட்டார். கடந்த முறை ஓஸ்லோ சென்றபொழுது அம்மையாரின் விருந்தினனுகத் தங்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

ஓஸ்லோவிலுள்ள இந்திய நண்பர்கள் சங்கத்தின் காரியதரிசி, முன்னரே இருந்த ஹீபர் அம்மையார்தான். அவர் எனக்குப் பலரை அறிமுகம் செய்துவைத்தார்.

நார்வீஜியப் பெண் ஒருத்தியை மணந்திருக்கும் இந்திய மாணவர் ஒருவரைச் சந்தித்தேன். அவரை, “இந்தியாவில் எந்தப் பகுதியிலிருந்து வருகிறீர்கள்” என்று கேட்டேன்.

“ஆக்ராவுக்குப் பக்கத்திலே சிறிய ஊர்” என்ருர்.

ஊரைவிட்டு வந்து எவ்வளவு காலமாயிற்று என்று கேட்டபொழுது, தாம் இந்தியாவைப் பார்த்ததே இல்லை என்று கூறினர். அவர், தென் அமெரிக்காவில், சூரிநாமில் குடியேறியுள்ள ஓர் இந்தியரின் புதல்வர். அமெரிக்காவில் படித்துக்கொண்டிருந்தபொழுது சக மாணவியான ஒரு நார்வீஜியப் பெண்ணைச் சந்தித்து மணம் செய்துகொண்டார். பின்னர் நார்வேக்கு வந்து நார்வீஜிய சர்வகலாசாலை ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டிருந்தார்.

சூரிநாமில் பிறந்த இந்திய மாணவ மாணவிகள் பலர் ஹாலந்து தேசத்தில் படித்தார்கள். அதைப் போலவே பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் பிறந்த இந்திய மாணவ, மாணவிகள் இங்கிலாந்தில் படித்தார்கள்.

பம்பாயில் நார்வீஜியப் பிரதிநிதியாக இருந்த அன்பரைச் சந்தித்தேன். பம்பாயில் பிரபலமான பேப்பர் வியாபாரிகளில் அவர் ஒருவர். அதனுடன் நார்வே தேசத்தின் பிரதிநிதியாகவும் இருந்தார். ஓஸ்லோவிலிருந்து சில மைல் தூரத்தில் அவர் வசித்தார். அழகான தோட்டத்தின் மத்தியில் சிறு வீடு; வீட்டுக்குள்ளே முழுதும் இந்தியச் சாமான்கள். மிக அன்போடு உபசரித்தார். இந்தியாவின் நல்ல நண்பர்களில் அவர் ஒருவர். சில மணி நேரம் பொது விஷயங்களைக் குறித்துப் பேசினோம். வீட்டுக்குள் நுழையும் வழியில் அழகான பெரிய விக்கிரகம் ஒன்று இருந்தது. அது ஆனந்த நடராஜர்!

நார்வீஜியர் நல்ல மக்கள். அந்நாட்டில் ஏழைக்கும் பணக்காரருக்குமுள்ள வித்தியாசம் மிகக் குறைவு. பெரும்பாலான மக்கள் நடுத்தர வகுப்பினர். நல்ல உழைப்பாளிகள். உதவி செய்யும் மனப்பான்மை உள்ளவர்கள். சமீபத்தில் நார்வீஜியப் பொதுமக்கள் சுமார் பத்து லட்சம் ரூபாய் வசூல் செய்து, மீன் பிடிக்கும் தொழிலில் தேர்ச்சிபெற்ற நிபுணர்களை இந்தியாவுக்கு அனுப்பினார்கள். நார்வீஜிய நாட்டு மன்னரே முன்னின்று அவ்வுதவியைச் செய்தார்.

மீன் பிடிப்பதிலே, அதுவும் ஆழ்கடலிலே மீன் பிடிப்பதிலே, மிகவும் கெட்டிக்காரர்கள் நார்வீஜியர்கள். அவர்களின் அறிவும், அனுபவமும் இந்த விஷயத்திலே நமது நாட்டுக்கு மிகவும் பயன்படும். முப்பத்திரண்டு லட்சம் ஜனத்தொகையுள்ள நார்வே, முப்பத்தாறு கோடி மக்களுள்ள நாட்டுக்குச் செய்த, பிரதிப்பயன் கருதாத இந்த உதவிக்கு நமது நாடு என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

இந்தியாவைப்பற்றிச் சரியாகப் புரிந்துகொள்ளாத நார்வீஜியர் சிலரும் இருந்தார்கள். ஒருவர் என்னிடம், "உங்கள் நாட்டில் ஆகாகான் என்ற ராஜாவைப்பற்றிப் படிக்கிறோம். ஏராளமான செல்வத்தைக் குதிரைப் பந்தயங்களிலும், ஹாலிவுட் நடிகைகளிலும் ஊதாரித்தனமாகச் செலவிடும் அவர், ஏன் இந்தியாவுக்கு நன்மை செய்யக்கூடாது? நார்வேயின் சாதாரணப் பொது மக்களிடம் ஏன் பண வசூல் செய்யவேண்டும்?" என்று கேட்டார்.

ஆகாகானைப் பற்றிய செய்திகளும், அவர் மகன் அலிகானின் நடிகை ரிட்டா ஹேவொர்த் விவாகம், விவாக ரத்து முதலிய செய்திகளும் ஆகாகானின் நிறைக்குச் சமமாக தங்கத்தையும், பிளாட்டினத்தையும் நிறைபோடும் செய்திகளும் வெளிநாட்டுப் பத்திரிகைகளில் மிகப் பிரபலமாகவும், பரிகசிக்கும் தொனியிலும், அடிக்கடி வெளியாகி வந்தன. அவற்றின் விளைவு அவரது கேள்வி.

ஆகாகான் எந்தக் காலத்திலும் மகாராஜாவாக இருந்ததில்லை என்றும், கத்தோலிக்கர்களுக்கு போப் பாண்டவர் மாதிரி, அவர் பாக்கிஸ்தான், கிழக்காப்பிரிக்கா, இந்தியா முதலிய இடங்களில் வசிக்கும் முஸ்லிம்களில் ஒரு சிறு பகுதியினரின் மதகுரு என்றும் விளக்கிக் கூறினேன்.

* * *

நார்வே தேசத்தின் நிலப்பரப்பு சுமார் ஒன்றே கால் லட்சம் சதுரமைல். அத்தேசத்தில் உள்ள ஏரிகளின் எண்ணிக்கை சுமார் இரண்டு லட்சம். நள்ளிரவில் சூரியனைக் காண்பது அந்நாட்டின் தனிச் சிறப்பு.



கோப்பன்ஹாவன் வீதியில் சைக்கிள்கள்

சென்றமுறை நார்வே சென்றபொழுது ட்ரோ ணியம் என்ற ஊரில் ஜுன் மாதம் இருபத்து நான்காம் தேதி நள்ளிரவில் சூரியனைக் கண்டு மகிழ்ந்தேன். அங்கிருந்து வடக்கே சென்றால் பாடோ (Bado) என்னு மிடத்தில் ஒவ்வோர் ஆண்டும் ஜுன் மாதம் நாலாந் தேதியிலிருந்து ஜுலை மாதம் ஒன்பதாந் தேதிவரை சூரியன் மறைவதே இல்லை என்றும் அறிந்தேன்.

கப்பலோட்டுவதில் நார்வீஜியர்கள் நிபுணர்கள். ஒன்பதாவது, பத்தாவது நூற்றாண்டுகளில் அவர்கள் துணிவுடன் பல நாடுகளுக்குச் சென்றனர்.

கடல் வீரர்களான அவர்களுக்கு வைக்கிங்ஸ் (Vikings) என்று பெயர். சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பெற்ற வைக்கிங் கப்பல்களில் ஒன்று இன்றும் பொருட் காட்சிச்சாலையில் உள்ளது. அந்தக் கப்பலின் நீளம் எண்பது அடி.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் லீப் எரிக்ஸன் (Leif Ericson) என்ற நார்வீஜியர்தான் அமெரிக்காவை முதலில் கண்டுபிடித்தார் என்பதும், கொலம்பஸ் அமெ ரிக்காவை முதலில் கண்டுபிடிக்கவில்லை என்பதும் நார் வீஜியர் கூற்று. அதை நிரூபிப்பதற்காக 1813 ஆம் ஆண்டில் பழைய வைக்கிங் கப்பல் மாதிரி ஒன்றை அமைத்து, சிகாகோவில் நடந்த பொருட்காட்சிக்கு அக்கப்பலை அட்லாண்டிக் சமுத்திரம் வழியாகக் கொண்டு சென்றனர்.

வியாபாரக் கப்பல்கள் ஓட்டுவதில் நார்வே இன்று உலகில் மூன்றாவது இடம் வகிக்கிறது.

பிரபல விஞ்ஞானியும், புது இடங்களைக் கண்டு பிடித் தவருமான நான்ஸென் (Nansen) ஒரு நார்வீஜியர்.

வடதுருவத்தைக் கண்டுபிடித்த ரோல்டு அமுண்ட்சென் (Roald Amundsen) மற்ருெரு நார்வீஜியர். இந்த நூற்ருண்டில் நாடகாசிரியர்களில் தலைசிறந்து விளங்கும் ஹென்ரிக் இப்ஸன் (Henrik Ibsen) ஒரு நார்வீஜியர்.

உலகிலயே அதிகமாகப் புத்தகம் படிக்கும் மக்களைக் கொண்ட நாடுகளில் ஒன்று நார்வே. நார்வே தேசம் பதிஞன்காவது நூற்ருண்டு முதல் 1814 ஆம் ஆண்டு வரை டேனிஷ் ஆட்சியிலிருந்தது. 1905 ஆம் ஆண்டு வரை ஸ்வீடனுடன் கட்டாயக் கூட்டுறவு ஆட்சியில் இருந்தது. பின்னர் நார்வீஜிய மன்னர் ஆட்சியின்கீழ் சுதந்திர நாடாயிற்று.

நார்வீஜியர்களில் இப்பொழுது உலகப் பிரசித்தி பெற்ற சிலர் இருக்கிருர்கள். அவர்களில் ஐக்கிய நாடுகள் சங்கத்தின் பொதுக் காரியதரிசியாகப் பல ஆண்டுகள் பணிபுரிந்த டிரிக்வி லை ஒருவர். மற்ருெருவர் தோர் ஹையர்டால் (Thorheyerdahl) என்பவர். அவர் தலைமையில் ஆறு பேர்—பெரும்பாலும் நார்வீஜியர்—மிகச் சிறிய கோண்டிக்கி என்ற கட்டுமரத்தில் (Raft) பசிபிக் மகாசமுத்திரத்தில் நாலாயிரத்து முந்நூறு மைல் பிரயாணம் செய்தார்கள்.

பசிபிக் மகாசமுத்திரத்தில், தஹித்தி போன்ற தீவுகளில் வசிக்கும் போலினேஷ்யர் என்ற இனத்தவர் தென்னமெரிக்காவில் பெரு என்ற தேசத்திலிருந்து தான் குடியேறிஞர்கள் என்பது ஹையர்டாலின் சித்தாந்தம். அதை நிரூபிப்பதற்காக, அவர்கள் குடியேறியதாகக் கருதிய காலத்தில், எப்படிச் சிறு கட்டு மரம் இருந்ததாகக் கருதப் பெற்றதோ அதே மாதிரி ஒன்றைத் தயார் செய்து பிரயாணமாயினர். பல நாட்களுக்கு

வேண்டிய ஆகார வகைகளையும் ஐம்பத்தாறு தகரப் பெட்டிகளில் இரு நூற்றைம்பது காலன் குடி தண்ணீரையும் எடுத்துச் சென்றனர். கம்பியில்லாத் தந்திக் கருவி (Wireless) ஒன்றும் காமிராக்களும் எடுத்துச் சென்றனர். அது ஒன்பது பெரிய மரக் கட்டைகளைக் கொண்டு கட்டப்பெற்றது. நடுவிலிருந்த மரக்கட்டையின் நீளம் நாற்பத்தைந்து அடி. ஓரங்களில் கட்டப் பெற்ற மரக் கட்டைகளின் நீளம் முப்பது அடி. ஒவ்வொன்றும் இரண்டடி அகலம். அதன் மொத்த நீளம் நாற்பத்தைந்து அடி; அகலம் பதினெட்டடி. மரக் கட்டைகளைக் கயிற்றால் கட்டினர். ஓர் ஆணிகூட உபயோகப்படுத்தவில்லை. தளத்தில் மூங்கிற் கம்புகளைப் பரப்பி, அதன்மீது பாய்விரித்தனர். மத்தியில் மூங்கிலாலேயே ஓர் அறை (Cabin) அமைத்தனர். அவ்வறைக்கு வாழை இலைகளைக் கொண்ட கூரை ஒன்று அமைத்தனர். அறையின் அகலம் எட்டடி; உயரம் பதினான்கடி.

அக் கட்டுமரம் பசிபிக் மகாசமுத்திரத்தின் பேரலைகளைத் தாங்காதென்றும், சமுத்திரத்தில் திமிங்கலங்களால் ஆபத்து உண்டாகும் என்றும் பலர் கருதினர்.

சமுத்திர நீரில் ஒருவிதமான நீரோட்டம் (Current) இருக்கிறதென்றும், அதன் காரணமாக அது தானாகவே தஹித்தித் தீவுகளை அடைந்து விடுமென்றும், அவ்வாறு வெற்றிபெற்றால் தங்கள் கொள்கை நிரூபிக்கப் பெறும் என்றும் ஹையர்டால் கருதினார். நூற்றிரண்டு நாட்கள் தொடர்ந்து பிரயாணம் செய்தனர். அவர்களுக்கு நேர்ந்த ஆபத்துக்கள் கூறும் தரத்ததல்ல. தஹித்தியை அடைவதற்குமுன் ஒரு சிறு தீவின் அருகில் வந்ததும் அவர்களுடைய கட்டு மரம் புயலால் சேதமடைந்தது. நல்ல காலமாகக் கரையோரத்திலிருந்தபடியால் தப்பிப்

பிழைத்தார்கள். அருகிலிருந்த மனித சஞ்சாரமற்ற ஒரு தீவில் இரண்டொரு நாள் தங்கினர். உணவு தயாரிப்பதற்காகத் தீ மூட்டினர். அடுத்த தீவிலிருந்து மீன் பிடிக்க வந்தவர்கள், அந்தப் புகையைக் கண்டு, அங்கு வந்து அவர்களைக் காப்பாற்றித் தங்கள் தீவுக்கு அழைத்துச் சென்றனர். பின்னர் அருகிலுள்ள தஹித்தித் தீவின் கவர்னருக்குத் தகவல் எட்டவே அவர் சிறிய கப்பல் ஒன்றை அனுப்பி, அவர்களைத் தஹித்தித் தீவுக்கு வரவழைத்தார். பின்னர் எல்லோரும் ஒரு பெரிய கப்பலில் அமெரிக்கா சேர்ந்தனர்.

அவர்களின் வீரச் செயல்களைக் கண்டு உலகமே வியந்து கொண்டாடிற்று. அமெரிக்க ஜனாதிபதி அவர்களைக் கௌரவித்தார். அவர்கள் தங்கள் அனுபவங்களைப்பற்றிப் புத்தகங்கள் எழுதியுள்ளனர். திரைப் படமும் தயாரித்துள்ளனர். இரண்டுக்கும் கோண்டிக்கி (Kontiki) என்று பெயர். அவை படிக்கவும், பார்க்கவும் பெரிதும் தகுதியுள்ளவை. அவர்கள் பிரயாணம் செய்த கட்டு மரத்தை ஓஸ்லோ நகரப் பொருட் காட்சிச்சாலையில் வைத்திருந்தார்கள். அந்த அபாரமான சாதனையைக் குறித்து, நார்வீஜிய மக்கள் பெருமை யடைந்தார்கள்.

கப்பலோட்டுவதில் மட்டுமன்று, பனிக்கட்டி மீது சறுக்கி விளையாடுவதிலும் (Skating) நடப்பதிலும் நார்வீஜியர்கள் பேர்பெற்றவர்கள்.

* * *

நார்வேயும் ஸ்வீடனும் ஒரே நிலப்பரப்பில் உள்ளவை. ஆனால் அவை பிரிந்து விட்டன. சென்ற யுத்தத்தில் நார்வே ஜெர்மானியர் வசமாகித் துன்பமடைந்தது. ஸ்வீடன் நடுநிலைமை வகித்தது. தங்களைக்

காட்டிக்கொடுத்ததன்மூலம் ஸ்வீடிஷ்காரர்கள் தங்கள் நடுநிலைமையைக் காப்பாற்றிக் கொண்டார்கள் என்று நார்வீஜியர் குற்றம் சாட்டினர். யுத்தம் ஆரம்பித்த பொழுது, ஸ்வீடன் நடுநிலைமை வகிக்கப் போவதாக அறிவித்தது. ஆனால் ஜெர்மானியர் தங்கள் படைகளை ஸ்வீடன் வழியாகத்தான் நார்வேக்கு ரயிலில் கொண்டு சென்றனர். ஸ்வீடிஷ்காரர்களைக் கேட்டால், மூடிய ரயில் பெட்டிகளில் ஜெர்மானியர் சாமான்களை அனுப்பியதாகக் கருதியதாகவும் யுத்த வீரர்களை ஏற்றிச் சென்றது தங்களுக்குத் தெரியாது என்றும் கூறினர். அந்தக் கூற்றை நார்வீஜியர் சிறிதும் நம்பவே இல்லை.

நடுநிலைமை வகித்ததன் காரணமாக ஸ்வீடன், ஏற்கனவே நல்ல நிலைமையிலிருந்த கைத்தொழில் களைப் பெருக்கி கொள்ளை லாபம் சம்பாதித்தது. ஐரோப் பாவிலேயே பணக்கார தேசம் ஸ்வீடன்தான். அதனை 'ஐரோப்பாவின் அமெரிக்கா' என்றும் சிலர் கூறினர்.

யுத்த காலத்தில் ஸ்வீடிஷ்காரர் தங்கள் சகோதரர் களான நார்வீஜியருக்கு மறைமுகமாகச் சில உதவிகள் செய்தனர். ரகசியமாக உணவுப் பொருள்கள் சில வற்றை அனுப்பினர். என்றாலும் அவ்வுதவிகள் மிக அற்பமானவை என்றும், ஸ்வீடிஷ்காரர் செய்த உதவி களைவிட அவர்கள் செய்த துரோகமே மிகப் பெரி தென்றும் நார்வீஜியர் பலர் கருதினர்.

ஒருநாள் இரவுச் சாப்பாட்டுக்குப் பின்னர் நகரின் மத்தியில் உலவிக் கொண்டிருந்தேன். இளைஞர் ஒருவர் என்னிடம் வந்து ஆங்கிலத்தில் பேசினார். சிறிது நேரம் இருவரும் உரையாடினோம். பின்னர் அவரைப் பார்த்து, "நல்ல காப்பி எங்கு கிடைக்கும்?" என்றேன்.

“ நல்ல காப்பி மட்டும் வேண்டுமா ? அல்லது நல்ல இடமும் வேண்டுமா ?” என்ருர்.

“ இரண்டும் இருந்தால் நலம் ” என்றேன்.

சிறிது தூரம் நடந்து சென்றதும், ஒரு பழைய கட்டிடத்துள் நுழைந்தோம். சில இடங்களில் தலைகுனிந்து தான் செல்ல வேண்டும். ஆனல் கட்டிடம் பெரிது. அந்த நேரத்தில் உட்காருவதற்குக்கூட இடமில்லாமல் ஒரே கூட்டம். ஒரு மூலையில் இடம் கிடைத்தது.

“ இந்தக் கட்டிடம் பழமையானது ; ஆனல் சரித்திரப் பிரசித்தி பெற்றது. அதோ சுவர்களின்மீது தீட்டியுள்ள உருவங்களையும் பெயர்களையும் பாருங்கள். அவர்கள் எல்லோரும், இந்த நாட்டில் பிறந்த சிறந்த கவிகளும், ஓவியர்களும், பாடகர்களும், நடிகர்களுமாவார்கள். அவர்கள் அனைவரும் இந்த இடத்திலே வருஷக் கணக்காக வந்து சாப்பிட்டிருக்கிருர்கள். வெளியூரிலிருந்து வரும் நார்வீஜியர் அனைவரும் இங்கு வருவது வழக்கம். இது கலைமணம் கமழ்ந்த இடம்; கமழும் இடம் ” என்ருர் இளைஞர்.

பணிவுடன் வந்த வேலைக்காரப் பெண்ணிடம், இரண்டு கோப்பைக் காப்பி கொண்டுவரும்படிக் கூறினேம்.

நார்வீஜியர்கள் பொதுவாகக் காப்பியில் சர்க்கரை போடுவதில்லை. காப்பியைச் சிறிது வாயில் ஊற்றிக் கொண்டதும் அதைக் குடிப்பதற்குமுன் சர்க்கரையையோ அல்லது சர்க்கரைக் கட்டியையோ எடுத்து வாயில் போட்டுக் கொள்வார்கள். அம்மாதிரி அடிக்கடி செய்வார்கள். ஒவ்வொரு முறையும் நம்மைப் பார்த்து, “ இந்த நார்வீஜியப் பழக்கத்தை மன்னித்துவிடுங்கள் ” என்று சொல்லுவார்கள்.

## டென்மார்க்

நார்வேயிலிருந்து ஸ்வீடன் வழியாக டென்மார்க்குக்கு ரயிலில் சென்றேன். ஸ்வீடனுக்கும் டென்மார்க்குக்கும் இடையே சிறுகடல் ஒன்று உண்டு. ஆனால் நாங்கள் ரயிலைவிட்டு இறங்கவில்லை. ரயிலையே கப்பலில் ஏற்றிவிட்டார்கள்.

ஒரு தேசத்தின் எல்லையிலிருந்து மறு தேசத்து எல்லைக்கு மாறும்பொழுது இரண்டு தேசத்து அதிகாரிகளும் பாஸ்போர்ட், சாமான்கள் முதலியவற்றைப் பரிசோதிப்பார்கள். டென்மார்க் சேர்வதற்குள் நான்கு முறை சோதனையிட்டார்கள். பிரயாணிகளைச் சிரமப் படுத்தாமல், ரயில் ஓடிக் கொண்டிருந்தபொழுதே, தங்கள் கடமைகளைக் கண்ணியமாகச் செய்தார்கள்.

'தேசங்கள் தோறும் பாஷைகள் வேறு'. அதைப் போல நாணயமும் வேறு. ஒவ்வொரு நாட்டு எல்லையிலும், நாணயமாற்று வியாபாரிகள் ரயிலிலேயே பிரயாணம் செய்து நாணயங்களை மாற்றிக் கொடுத்தார்கள். எல்லைப்புறங்களிலுள்ள ரயில் நிலயங்களில் பாங்குகள் இருந்தன. ரயில் வரும் நேரங்களில் அவற்றைத் திறந்தார்கள். அம்மாதிரி நாணயமாற்றுதலில் முக்கியமான விஷயம்—ஒரு நாட்டுக் 'காசு' நாணயத்தைவிட அந்த நாட்டு 'நோட்டு' நாணயத்துக்கு மதிப்பு அதிகம். நோட்டைக் காட்டிலும், அதே பெறுமானமுள்ள 'டிராவலர் செக்'குகளுக்கு நாணயமாற்றத்தில் சிறிது அதிகமான தொகை கிடைத்தது.

மாலை எட்டு மணிக்கு டென்மார்க்கின் தலைநகரான கோப்பன்ஹாவன் சேர்ந்தேன். ஏற்கெனவே தெரிவித்திருந்ததால் ஜார்நவ் ரயில்நிலையத்துக்கு வந்திருந்தார்.

ஜார்நவைச் சந்தித்துப் பதினுன்கு ஆண்டுகள் ஆயின.

டென்மார்க் தேசத்துக்குச் சென்றது மூன்ருவது முறை. ஒவ்வொரு முறையும், ஜார்நவின் விருந்தினனுகத் தங்கியிருந்தேன். அவர் டென்மார்க் கப்பல் ஸ்தாபன மொன்றில் வேலை செய்துவந்தார். அவரும் அவர் மனைவியும் அமெரிக்காவில் பயின்றவர்கள்.

பதினுன்கு ஆண்டுகளுக்குமுன், அந்த அழகிய நகரில் நடைபெற்ற சர்வதேச வியாபார மகாநாட்டில் கலந்து கொண்டது நினைவுக்கு வந்தது.

ஜார்நவிடம், மறுநாள் காலை ஐந்து மணி ரயிலுக்கு, ஹாலந்து செல்வதாகவும் பின்னர் கோபன்ஹாவனுக்கு வந்து ஒருவாரம் அவருடன் தங்குவதாகவும் கூறினேன். கையில் பிரயாணச் சீட்டு இருந்தது. மறுநாள் காலை ரயிலுக்கு இடம் பதிவு செய்தோம்.

ஜார்நவும் அவர் மனைவியும், நகரிலிருந்து சுமார் இருபது மைல் தூரத்தில் வசித்தார்கள். ஜார்நவின் தாய் மட்டும் கோபன்ஹாவனில் வசித்தார். நாங்கள் இருவரும் ஜார்நவின் தாய் வீட்டுக்குச் சென்ருேம். நல்ல வெந்நீரில் குளித்த பிறகு, ஜார்நவும் நானும் நகரத்தின் மத்திய இடத்துக்கு வந்தோம்.

கோபன்ஹாவனிலேயே மிகச் சிறந்த டிவோலி (Tivoli) உணவுச் சாலைக்குச் சென்ருேம். ஐரோப்பா விலேயே பிரபலமான உணவுச் சாலைகளில் அது ஒன்று. நல்ல உணவுக்குப் பேர்பெற்ற நாடுகளிலே டென்மார்க் கும் ஒன்று. பாலும் வெண்ணெயும் அங்கே ஏராளம்.

சாப்பாடு பரிமாறுவதற்குமுன், ஜார்நவ் ஜெர் மானியர் ஆக்கிரமிப்பைப் பற்றியும், எப்படித் தங்களைப்

பட்டினியாகப் போட்டுவிட்டு, தங்கள் நாட்டு உணவுப் பொருள்களையெல்லாம் ஜெர்மானியர் எடுத்துச் சென்றனர் என்றும் கூறினர். ஆனல் ஜெர்மானியர் மீது துவேஷமோ அன்றி வெறுப்போ, அவரிடம் காணப் பெறவில்லை. உணவைப்பற்றித்தான் குறை கூறினர். உடனே அவர், "சென்ற முறை நீங்கள் வந்தபொழுது மசாலாப் பொடிக் குப்பி ஒன்று கொடுத்தீர்கள் அல்லவா? யுத்த காலத்தில் அது எவ்வளவு பயன்பட்டது தெரியுமா? துர்நாற்றமுள்ள பல கிழங்குகளையெல்லாம் சாப்பிடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அப்பொழுது அந்த மசாலாப் பொடியைக் கொஞ்சம் கொஞ்சமாக உபயோகப்படுத்தினேம். பொடி தீரும்வரை குப்பியைப் பொன்னேபோல் பாதுகாத்தோம்" என்ருர்.

உணவருந்தியபின் அந்த அற்புதமான நகரத்தைச் சில மணி நேரம் சுற்றிப் பார்த்தோம். வீட்டுக்குச் சென்ருல் தூக்கம் வரவில்லை. நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

கண்ணயர்ந்த சிறிது நேரத்துக்கெல்லாம் கடிகார 'அலாரம்' மணி அடித்தது. மணி நாலாயிற்று, சந்தடி செய்யாமல், பிரயாணத்துக்குத் தயாரானேன். அப்பொழுது ஒரு பெண் குரல் கேட்டது. "பலகாரம் தயாராகிவிட்டது. சாப்பிட வாருங்கள்" என்ருர் ஜார்நவின் தாயார். அது மட்டுமன்று; ரயிலில் சாப்பிடுவதற்கு உணவுப் பொருள்கள் சிலவும் மூட்டை கட்டிக் கொடுத்தார். முதிர்ந்த வயதிலே அவர் காட்டிய தாய்மைக் குணத்துக்கும் அன்புக்கும் நன்றி செலுத்தினேன்.

ஜார்நவ் ரயிலுக்கு வந்து வழியனுப்பினர். சில காரணங்களால் மீண்டும் கோபன்ஹாவன் செல்லச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஜார்நவைச் சந்தித்து,

கோபன்ஹாவனில் ஓர் இரவு தங்கியது எல்லாம் கனவைப்போல் ஆகிவிட்டது!

சில மணி நேரம் ரயிலில் சென்றேன். பிறகு சிறிய கப்பல் ஒன்றில் ஏறினேன். கப்பல் பிரயாணம் மூன்று அல்லது நான்கு மணி நேரம் இருக்கலாம். அந்த முறை ரயில் கப்பலில் ஏறவில்லை. பிரயாணிகள் கப்பலில் ஏறிக் கொண்டோம். அக்கரை சேர்ந்ததும் வேறு ரயிலில் ஏறினோம்.

கப்பலில், சாப்பிடும் இடத்தில் இளைஞர் ஒருவரைச் சந்தித்தேன். அவர் ஒரு யூதர். ஜெர்மனியிலிருந்து ஸ்வீடனுக்குச் சென்று ஸ்வீடிஷ் பிரஜையாக வசித்தார். அவர் தமது பரம்பரை வியாபாரம் செய்தார்.

"யுத்தத்துக்குப்பிறகு மேற்கு ஜெர்மனி அடைந்திருக்கும் முன்னேற்றம் பிரமிக்கத் தக்கது. ஸ்வீடனில் ஜெர்மன் சாமான்கள் ஏராளமாக வந்து குவிகின்றன. ஜெர்மானியர் போட்டியிடாத துறையே கிடையாது. யுத்தத்துக்குமுன், ஜெர்மனி எப்படிப் பிரிட்டனுடன் போட்டியிட்டதோ அம்மாதிரியான வியாபார யுத்தம் இப்பொழுது ஆரம்பமாகிவிட்டது" என்றார் இளைஞர்.

அதை விளக்குவதற்கு அவர் ஓர் உதாரணம் கூறினார். "ஸ்வீடனில் ஒரு பெரிய ஸ்தாபனம் முப்பத்தைந்து ஆண்டுகளாக ஒரு பிரிட்டிஷ் ஸ்தாபனத்தாரிடம் மை (Ink) வாங்கி வருகிறது. அதே மாதிரியான, அதே தன்மையுள்ள மையை, பிரிட்டிஷார் கொடுக்கும் விலைக்குப் பத்துச் சதவிகிதம் குறைவாகக் கொடுப்பதாகக்கூறி ஜெர்மானியர் மாதிரிக்காக மை அனுப்பினர். பிரிட்டிஷார் மைக்கும் ஜெர்மானியர் தயாரித்த மைக்கும் எந்தவிதமான வித்தியாசமுமில்லை—

விலையைத் தவிர. பிரிட்டிஷ் ஸ்தாபனத்திடமுள்ள நீண்டகாலத் தொடர்பை உத்தேசித்து ஜெர்மன் மை வாங்கவில்லை. ஆனால் போட்டி அதிகமாகிவிட்டது. பிரிட்டிஷாரிடம் அதிகமான அளவில் மை வாங்கியதால் இந்தப் பத்து சதவிகிதக் குறைவான விலை வித்தியாசம் மட்டும் ஆயிரக்கணக்கான பவுன்களாயிற்று. எனவே ஸ்வீடிஷ் ஸ்தாபனத்தார் பிரிட்டிஷாருக்கு விஷயங்களை விளக்கி, அவர்களுடைய விலையில் ஐந்து சதவிகித மாவது குறைத்துக் கொள்ளும்படி எழுதினார்கள். பிரிட்டி ஷாரிடமிருந்து பதில் வந்தது. விலைவாசிகள் உயர்ந்த தாலும், இன்னும் தவிர்க்கமுடியாத பல காரணங்க களாலும் மையின் விலையை ஐந்து சதவிகிதம் அதிகப் படுத்தியிருப்பதாக எழுதினார்கள். அதிலிருந்து ஸ்வீடிஷ் காரர்கள் ஜெர்மன் ஸ்தாபனத்திடம் மை வாங்கி விற்பனை செய்துவருகிறார்கள்.

" இன்னும் இந்த மாதிரி எத்தனையோ உதாரணங் கள் கூறலாம். ஸ்வீடனுக்கு வந்து பாருங்கள் ! எத்தனை விதமான ஜெர்மன் மோட்டார்கள், டைப்ரைட்டர், காமிரா, டேப் ரிகார்டர். எல்லாம் ஜெர்மனியில் செய் தவை " என்றார்.

" ஜெர்மனி இங்கிலாந்தோடு மட்டுமன்று; பாரிஸ் நகரத்தோடும் போட்டியிட்டு ஜெயித்துவிட்டது. களியாட் டங்களுக்கும், கேளிக்கைகளுக்கும் உலகப் பிரசித்தி பெற்ற இடமாய் இருந்தது பாரிஸ். அந்தக் காலம் போய்விட்டது. இப்பொழுது ஐரோப்பாவுக்கே பாரிஸ் நகரமாய் இருப்பது — அதாவது களியாட்டங்களிலும் கேளிக்கைகளிலும் சிறந்து விளங்குவது — ஹாம்பர்க் நகரம். ரிவர்பான் என்னும் இடத்துக்குச் சென்றால் ஜகஜ்ஜோதியான விளக்குகள் ; இரவு முழுவதும்

நாட்டியமும், களிப்பாட்டங்களும் ; குடிவகைகள் எண்ணில்லாதவை. இரண்டு ரூபாய்க்கு மதுபானம் சாப்பிட்டால் போதும், இரவு முழுவதும் இலவசமாக நாட்டியங்களைப் பார்க்கலாம்" என்றார். ஜெர்மனியிலே சுறுசுறுப்பான நகரம் ஹாம்பர்க் தானும்.

இளைஞரிடம் விடைபெற்றுக்கொண்டு கப்பலை விட்டிறங்கினேன். ரயிலில் என்னுடன் மூன்றாவது வகுப்பில் பிரயாணம் செய்த பிரயாணிகள் ஐந்து பேர். அந்த ரயிலுக்கு ஹாலந்து எக்ஸ்பிரஸ் என்று பெயர். மூன்றாவது வகுப்பு ஒவ்வொன்றும் சௌகரியமான சிறுசிறு பெட்டிகள். ஒவ்வொன்றிலும் எட்டுப் பேர் உட்கார வசதியிருந்தது. ரயில் பிரயாணிகளில் மூன்று பேர் பெண்கள் ; ஒருவர் ஆடவர். எல்லோரும் டேனிஷ்காரர்கள். இளம் பெண் ஒருத்தி சுத்தமாக ஆங்கிலம் பேசினாள். அவளுக்குப் பல மொழிகள் தெரியும். கிராமத்தில் பிறந்தவள் ; உயர்நிலைப் பள்ளிப் படிப்புவரை படித்திருந்தாள்.

"எனக்கு ஊர் சுற்றிப் பார்க்கவேண்டுமென்று ஆசை. உத்தியோகத்துக்குச் சென்றால் போதுமான வருமானம் கிடைக்காது. எனவே ஸ்விட்சர்லந்து நாட்டில், சூரிச் என்னும் ஊரில் பணக்காரக் குடும்பம் ஒன்றில் சமையல் வேலை செய்து வருகிறேன். நல்ல சம்பளம் தருகிறார்கள் ; ஆனாலும் செலவு அபாரம். சமையல் வேலை செய்வதால் இடமும், உணவும் இலவசமாகக் கிடைத்துவிடுகின்றன. எனவே சம்பளத்தைச் சேர்த்து வைத்து, பிரான்ஸ், இத்தாலி முதலிய நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்தேன். இப்பொழுது விடுமுறையில் பெற்றோர்களைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்று கூறினாள்.

“வேலை கஷ்டமானதா? யாரிடம் வேலை செய்கிறீர்கள்?” என்றேன்.

“வேலை ஒன்றும் கஷ்டமில்லை. குறிப்பிட்ட மணி நேரந்தான் வேலை. வாரத்துக்கொருநாள் ஓய்வு. அந்த நாளில் எங்களுக்காகமட்டும் நாங்கள் சமைத்துச் சாப்பிடலாம். பெரும்பாலும் சங்கீதக் கச்சேரி, நாடகத்துக்குச் செல்வேன். சிநேகிதர்களைப் பார்க்கச் செல்வதும் உண்டு. குளிர்காலமானால் பனிக்கட்டியின்மீது சறுக்கி விளையாடச் செல்வேன். ஓய்வு நாளில் பெரும்பாலும் வெளியே சாப்பிடுவது வழக்கம். ஒரு பணக்காரர் வீட்டில் வேலை செய்கிறேன். ஐரோப்பாவில் பல நாடுகளைச் சுற்றிப் பார்க்கும் ஆசை தீரும் வரையில் இங்கே வேலை செய்வேன். அந்தப் பணக்காரர் தென் அமெரிக்காவைச் சேர்ந்தவர். எப்படியோ அவருக்குக் கொழுத்த வருமானம் கிடைக்கிறது. ஆண்டில் பெரும் பகுதி அவர் குடும்பத்தோடு இங்கே தங்குவார். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் சில விநோதமாக இருக்கும். அந்த வீட்டில் மொத்தம் வேலைக்காரர்கள் நான்கு பேர்” என்று கூறினாள்.

சிறிது நேரத்தில் அவள் இறங்கிவிட்டாள். டென்மார்க் எல்லையை ரயில் தாண்டியது. அப்பொழுது டேனிஷ் அதிகாரிகள் மிகவும் அன்பாகவும், பணிவாகவும் பாஸ்போர்ட், சாமான் முதலிய பரிசோதனைகளை நடத்தினார்கள். ரயில் ஜெர்மன் எல்லைக்குள் சென்றது. மூன்று ஜெர்மானியர், பட்டாளத்தார்போல நடந்து வந்தார்கள். சாமான்களைக் காட்டும்படி சொல்லவில்லை. பாஸ்போர்ட்டைச் சரிபார்த்து முத்திரையிட்டார்கள். அதை என்னிடம் கொடுத்தபொழுது அந்த அதிகாரி “தாங்க் யூ” என்று உரக்கவும் கடுமையாகவும் கூறினார்.

சண்டைக்கு அறைகூவுவதுபோலிருந்தது. அர்த்தமில்லாமலும் யந்திரங்களைப்போலவும் சிலர் எனக்கு வந்தனம் கூறியதுண்டு. ஆனால் அவ்வளவு கடுமையாக ஒருவர் எனக்கு வந்தனம் கூறியது அதுதான் முதன் முறை. அவர்கள் பெட்டியிலிருந்து வெளியேறியதும் உடனிருந்த இரண்டு டேனிஷ் பெண்களும் முகத்தைச் சுளித்துக்கொண்டு ஏளனச் சிரிப்புச் சிரித்தார்கள்.

சகோதரப் பிரயாணிகள் மூவரில், ஆடவருக்கு ஆங்கிலம் தெரியாது. ஒரு பெண்ணுக்குச் சிறிது ஆங்கிலம் தெரியும்; அவளும் அவளுடைய சினேகிதியும், கோபன்ஹாவனில் யுத்தமந்திரி காரியாலயத்தில் வேலை செய்தார்களாம். அவர்களைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகும் வாலிபர்கள் டேனிஷ் கப்பல் ஒன்றில் என்ஜினியர்களாய் இருக்கிறார்களாம். அவர்களுக்கு டென்மார்க் வர விடுமுறை கிடைக்கவில்லை என்றும், அவர்கள் வேலைசெய்கிற கப்பல் ஹாலந்து தேசத்தில் ஆம்ஸ்டர்டாம் துறைமுகத்துக்கு வந்து சிலநாள் தங்குமென்றும், எனவே அவர்களைச் சந்திப்பதற்காகவே தாங்கள் செல்வதாகவும் அப்பெண் கூறினாள்.

ரயில் எத்தனை மணிக்கு ஹாம்பர்க் போய்ச் சேருகிறதென்று ரயில் கால அட்டவணையைப் பார்த்துப் படித்தேன். அப்பொழுது அந்தப் பெண் நான் படித்தது சரியல்லவென்றும் இன்ன மணி நேரத்தில்தான் போய்ச் சேரும் என்றும் சொன்னாள்.

"உங்களுக்கு இது எப்படித் தெரியும்" என்றேன்.

"டிக்கட் மான் (Ticket-man) கூறினார்" என்றாள். பிரயாணச் சீட்டுப் பரிசோதகருக்கு ஆங்கிலத்தில் என்ன பெயர் என்று அவளுக்கு அச்சமயத்தில்

ஞாபகத்துக்கு வரவில்லை. எனவே 'டிக்கட்மான்' என்று கூறிவிட்டாள்.

ரயில் ஹாம்பர்க்கை அடைந்தது. எங்களுடன் இருந்த ஆடவர் இறங்கிவிட்டார். ரயில் நிலையத்தில் ஏராளமான கூட்டம். தேர்த் திருவிழாமாதிரி அவ்வளவு கூட்டம். பிரயாணிகள் நெருக்கியடித்துக்கொண்டு ஏறி னர். மிகக் கனமான சாமான் பெட்டிகளைப் பின்னால் உள்ள சாமான் வண்டியில் போடாமல் எங்கள் பெட்டி யிலே வைக்க முயன்றனர்.

அவ்வளவு பெரிய கூட்டத்தைக் கண்டதும் பெண்கள் மிகவும் பயந்தவர்களாய், "தயவு செய்து எங்கள் இடத்துக்குப் பக்கத்து இடத்தில் உட்காருங்கள். ஜெர்மானியர் வருகிறார்கள்" என்றனர்.

"ஏனம்மா ஜெர்மானியர் உங்கள் அண்டை நாட் டார்தானே? ஏன் பயப்படுகிறீர்கள்?" என்றேன்.

"உங்களுக்குத் தெரியாது. அவர்கள் மிகவும் மிரு கத்தனமாய் நடந்துகொள்வார்கள். அவர்களைக் கண் டாலே பயமும் வெறுப்பும் உண்டாகிறது" என்றாள் ஒரு பெண்.

அவள் கூறியதில் முற்றிலும் தவறில்லை. எங்கள் பெட்டியில் நடுத்தர வயதுள்ள நான்கு ஆடவர்களும் வயது முதிர்ந்த ஓர் அம்மையாரும் வந்து உட்கார்ந் தனர். அவர்களுடைய சாமான்கள் அதிகம். அது மட்டுமன்று; மிகவும் கனமானவை. பெட்டி முழுதும், நடைபாதையிலும் ஒரே சாமான் மயம்தான். கனமில் லாத சாமான்கள் வைப்பதற்காக உள்ள இடத்தில் கனமான சாமான்களை வைத்தனர். இவை தவறி விழுந் தால் தலைக்குத்தான் ஆபத்து உண்டாகும்.

நான்கு ஆடவர்களும் முரடர்களாய்க் காணப் பட்டார்கள். முகத்தில் களையே இல்லை. 'கடு, கடு' என்றிருந்தது. ரயில் சிறிது நகர்ந்ததும் அவர்களில் ஒருவரைப் பார்த்து, "எந்த ஊருக்குச் செல்கிறீர்கள்?" என்று கேட்டேன். அவருக்கு ஆங்கிலம் தெரியாததால் மௌனமாகவிருந்தார். வேண்டுமென்றே உரத்த குரலில் "ஹெயில் ஹிட்லர்" என்றேன். பெட்டியிலிருந்த அனைவரும் சிரித்தனர். ஹிட்லர் பெயரைச் சொல்லிய தும் ஜெர்மானியர் சிரித்ததை அப்பொழுதுதான் முதன் முதலாகப் பார்த்தேன். சென்றமுறை ஜெர்மனிக்குச் சென்றபொழுது, ஜெர்மானியர் ஒருவரை ஒருவர் சந்திக் கும்பொழுது மரியாதையாக, 'ஹெயில் ஹிட்லர்' என்று சொல்லிக் கையை உயர்த்தி வணக்கம் தெரிவித்தார்கள். இம்முறை அதே ஜெர்மானியர்கள் சிரித்தார்கள்.

ஜெர்மானியர்களான அந்த நான்கு ஆடர்களுடனும் முதிய அம்மையாருடனும் கைகுலுக்கினேன். டென் மார்க்கிலிருந்து அன்பளிப்பாகக் கிடைத்த சாக்லெட் சிலவற்றை அனைவருக்கும் வழங்கினேன். சுமுகமான சூழ்நிலை ஏற்பட்டது.

அவர்களில் ஒருவரிடம், "இந்த இரண்டு பெண் களும் டேனிஷ் பெண்கள். நீங்கள் டென்மார்க் சென்றிருக்கிறீர்களா?" என்றேன். அவர் இல்லை என்று தலையசைத்தார்.

"அவசியம் போய்ப் பாருங்கள் நல்ல தேசம்; நல்ல மக்கள்; நல்ல உணவு" என்றேன்.

தங்கள் தேசத்தைக் குறித்து அன்னியர் ஒருவர் பிறிதொரு நாட்டாரிடம் அதிலும் ஜெர்மானியரிடம் இவ்வளவு பெருமையாகக் கூறியதில், அந்த

இரு பெண்களுக்கும் மிக மகிழ்ச்சி. தங்கள் நன்றியைப் பலமுறை தெரிவித்துக் கொண்டனர்.

நான்கு ஜெர்மானியரும் கிராமவாசிகள். ஒருவர் தச்சர். இருவர் விவசாயிகள். ஒருவர் கடிகாரம் பழுது பார்ப்பவர். அவர்கள் தென்னுப்பிரிக்காவிற்குக் குடி யேறுவதற்காக ஹாலந்தில் ஆம்ஸ்டர்டாம் என்ற ஊரில் கப்பல் ஏறச் சென்ருர்கள்.

தென்னுப்பிரிக்காவில் அப்பொழுது டாக்டர் மலான் ஐரோப்பியரல்லாதாருக்கு எதிராக, தாம் நடத்தி வந்த அநீதமான போருக்கு, இத்தகைய படைகளைத் தமக்குப் பக்கபலமாகச் சேர்த்துவந்தார். ஹிட்லர் அரசாட்சியில் துவேஷத்திலேயே வளர்ந்த ஜெர்மானி யரை மலான் ஏற்றுக்கொண்டதில் வியப்பொன்று மில்லை. டச்சுக்காரர் பலரும் தென்னுப்பிரிக்காவில் குடியேறினர். டாக்டர் மலானும் தென்னுப்பிரிக்காவி லுள்ள பாதிக்கு மேற்பட்ட ஐரோப்பியரும், ஆரம்பத்தில் குடியேறிய டச்சுக்காரரின் சந்ததியாரே.

ஒரு ஜெர்மானியர் பிரிட்டோரியா என்ற ஊருக்குச் செல்வதாகக் கூறினுர். கேப்டவுன் என்ற ஊரிலிருந்து பிரிட்டோரியாவுக்கு நான்கு அல்லது ஐந்து நாட்கள் ரயிலில் செல்லவேண்டுமென்றும், அது மட்டமான ரயில் என்றும் கூறினேன். ஏற்கெனவே தென்னுப்பி ரிக்கா சென்று வந்தேன் என்பதை அறிந்ததும் அவர்களுக்கு அந்த ஊரைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது.

“தென்னுப்பிரிக்கா நல்ல நாடு. பொன் விளையும் பூமி. அந்நாட்டின் பிரதம மந்திரியான டாக்டர் மலான் மனிதத்தன்மையற்ற காரியங்களைச் செய்கிருர்.

யூதர்களை ஜெர்மானியர்கள் கொடுமைப்படுத்தியதற் கதிகமாக, அங்குள்ள ஐரோப்பியரல்லாதவரை அவர் கொடுமைப்படுத்துகிருர். ஹிட்லருக்கு என்ன கதி நேர்ந்தது? அதுதான் மலானுக்கும் நேரும். பாவம், நீங்கள் யுத்தத்தால் கஷ்டப்பட்ட பின்னர், பெரிதும் அபாயமுள்ள நாட்டுக்குச் செல்கிறீர்கள். அங்கு வெள் ளையர் நூற்றுக்குப் பத்துப் பேர்தான். மீதமுள்ளோர் நீக்ரோக்களும் இந்தியரும். இவர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து விட்டார்கள் வெள்ளைக்காரர்களுக்கு விரோதமாக. உங்களுடைய வேலையைச் செய்வதோடு திருப்தியடையுங்கள். மற்றவர்களுடன் அன்பாகவும் சமத்துவமாகவும் நடந்துகொள்ளுங்கள். அங்குள்ள வெள்ளையர்களோடு சேர்ந்து நீங்களும் தவருக நடந் தால் ஆபத்துத்தான். தென்னுப்பிரிக்கா ஓர் எரிமலை போல. எப்பொழுது என்ன நடக்குமென்று தெரி யாது. ஆண்டவன் உங்களைக் காப்பாற்றட்டும்” என்று கூறினேன்.

டேனிஷ் பெண் நான் கூறியவற்றை மகிழ்ச்சி யுடனும், உற்சாகத்துடனும் தனக்குத் தெரிந்த அளவு ஜெர்மன்மொழியில் மொழிபெயர்த்துக் கூறினுள்.

இரவு பதினேரு மணிக்கு ரோட்டர்டாம் ரயில் நிலையத்தை அடைந்தேன்.

# ஹாலந்து

ஹாலந்திலேயே இரண்டாவது பெரிய நகரம் ரோட்டர்டாம். அந்நகரில் பல ரயில் நிலையங்கள் இருந்தன. இரவு பதினேரு மணிக்குக் குறிப்பிட்ட சிறிய ரயில் நிலையத்தை அடைந்தேன். வால்ட்டும் அவர் மனைவி மாச்செல்டும் ரயிலடியில் காத்திருந்தனர். அவர்கள் இருவரையும் சந்தித்துப் பதினான்கு ஆண்டுகள் ஆயின.

பதினான்கு ஆண்டுகள் என்பது முக்கியமல்ல; அந்தக் காலத்திற்குள் ஒரு பெரிய மகா யுத்தம் நடந்திருக்கிறது. 1939 ஆம் ஆண்டு மே மாதம் 19 ஆம் தேதி தாம் ரோட்டர்டாமில் திருமணம் செய்துகொள்ளப் போவதாக வால்ட் எனக்கு அழைப்பு அனுப்பியிருந்தார். குறிப்பிட்ட தேதி வந்தது; வாழ்த்துத் தந்தி அனுப்ப எண்ணினேன். ஆனால் அன்றையப் பத்திரிகையில், "ஜெர்மானியர்கள் ரோட்டர்டாமில் குண்டு வீசினார்கள்" என்று படித்தேன். பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர்தான் எங்களுக்குள் கடிதப் போக்குவரத்து ஏற்பட்டது.

நீண்ட காலத்துக்குப் பிறகு, குண்டுவீச்சுகளுக்கெல்லாம் தப்பி, உயிருடன் இருக்கும் நண்பர்களை அதிலும் ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பால் வசிக்கும் நெருங்கிய நண்பர்களைச் சந்திப்பதால் உண்டாகும் ஆனந்தத்தை அடைந்தேன். ஒருவரிடம் மனிதத் தன்மை மேலோங்கி நிற்கும் தருணத்தில், ஜாதி, மதம், மொழி, நிறம், தேசம் முதலிய வேற்றுமைகள் தோன்ற இடமில்லை.

அமெரிக்காவில் ஒன்ருகப் பிரயாணம் செய்த நால்வரில் ஒருவர் வால்ட். அவர் தந்தை ஹாலந்தின் தலைநகரான டென்ஹேக் நகரில் தபால்நிலையத் தலைவராக இருந்தவர். ஹாலந்திலேயே மிகப் பழைமையான பாங்கிங் – இன்ஷ்யூரன்ஸ் ஸ்தாபனம் ஒன்றில் பல ஆண்டுகளாக வால்ட் வேலை செய்து வந்தார். அவருடைய மனைவி மாச்செல்டு, பயிற்சி பெற்ற மருத்துவத் தாதி (Nurse). அவர் ஒரு டாக்டரிடம் வேலை செய்து வந்தார். குழந்தைகளையும் வீட்டு வேலைகளையும் சரிவரக் கவனிக்க நேரமில்லாததால், அவர் தமது வேலையை விட்டுவிட்டார்.

எல்லோரும் வீட்டுக்குச் சென்ருேம். குழந்தைகள் தூங்கிக்கொண்டிருந்தன. நாங்கள் மூவரும் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தோம்.

“எங்களுக்குத் திருமணம் நிச்சயிக்கப் பெற்றிருந்த அதே நாளில், ஜெர்மானியர் குண்டு வீசியது உங்களுக்குத் தெரியும். மாதாகோயிலில் யாருமே இல்லாததால், சிவில் சட்ட முறைப்படியாவது பதிவுக் கல்யாணம் செய்துகொள்ளலாம் என்று ரிஜிஸ்தார் காரியாலயத்திற்குச் சென்ருேம். அங்கும் யாருமில்லை. எல்லோரும் உயிருக்குப் பயந்து ஓடியபொழுது கல்யாணமாவது, ரிஜிஸ்தராவது ?

“ஜெர்மானியர் ஹாலந்தில் குண்டு போட்டது அக்கிரமம். குறிப்பிட்ட மணி நேரத்திற்குள் சரண் அடைய வேண்டுமென்றும், இல்லையேல் குண்டு வீசப் போவதாகவும் டச்சு மொழியில் அச்சடித்த துண்டுப் பிரசுரங்களை ஜெர்மானியர் ஆகாய விமானங்களிலிருந்து வீசினர். ஹாலந்து சரண் அடைவது என்று முடிவு செய்துவிட்டது. அதிகாரிகள் வெள்ளைக் கொடியைக்

கையிலேந்தி வேகமாகச் சென்றனர். அதற்குள் ஜெர்மானியர் குண்டு வீசினர். அதாவது ஜெர்மானியர் இன்ன மணி நேரத்திற்குள் சரண் அடைய வேண்டும் என்று சொல்லியிருந்தார்களோ, அதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்னதாகவே குண்டு வீசினர். அதனால் ரோட்டர்டாமில்மட்டும் சுமார் முப்பதாயிரம் பேர் மாண்டனர். அழகான ரோட்டர்டாம் நகரின் நடுப் பகுதி அடியோடு அழிந்துவிட்டது. நாளை நீங்கள் பார்க்கப்போகும் ரோட்டர்டாம் புதிதாகக் கட்டப் பெற்றது. சென்றமுறை நீங்கள் வந்திருந்தபொழுது பார்த்த பழைய ரோட்டர்டாம் அன்று இது.

"நாங்கள் நகரத்துக்கு வெளியே ஒரு சிறு கிராமத் தில் வசித்தோம். போக்குவரத்துச் சாதனங்கள் எல்லாம் பெரும்பாலும் நின்றுவிட்டன. தினந்தோறும் ரோட்டர்டாமுக்குச் சைக்கிளில் வந்து திரும்பினேன். சில வாரங்களுக்குப்பின் அமைதி நிலவிற்று.

"பல நாள் காத்திருந்து சிவில் சட்டமுறைப்படி, திருமணம் செய்துகொண்டோம். சில மாதங்களுக்குப் பிறகுதான் மாதாகோயிலில் மதச் சடங்குகள்படி எங் களுக்குத் திருமணம் நடைபெற்றது. அன்றியும், மாச் செல்டும் நானும், யுத்தம் முடியும்வரையில் குழந்தைகள் வேண்டாம் என்றும் முடிவு செய்தோம். உயிரோடு உள்ள மக்களே சாப்பாட்டுக்குத் திண்டாடியபொழுது, புதிதாகக் குழந்தைகளைப் பெற்று, அவர்களையும் சிரமப் படுத்துவானேன்?" என்றார் வால்ட்.

"சாப்பாடு என்றதும் எனக்கு ஞாபகத்துக்கு வரு கிறது. சென்றமுறை நீங்கள் வந்தபொழுது மசாலாப் பொடிக்குப்பி ஒன்று கொடுத்தீர்கள் அல்லவா? யுத்த காலத்தில் அது எவ்வளவு பயன்பட்டது தெரியுமா?

உணவுக் கஷ்டம் நேர்ந்தபொழுது டுலீப் என்னும் பூவின் தண்டைச் சாப்பிட நேர்ந்தது. அதன் நாற்றம் சகிக்க முடியாது. அப்பொழுது இந்த மசாலாப் பொடியைக் கொஞ்சம் கொஞ்சமாக உபயோகப்படுத்தினேம். மசாலாப்பொடி தீரும்வரை, இந்தக் குப்பியைப் பொன்னேபோலப் பாதுகாத்தோம்" என்ருர் மாச்செல்டு.

"வால்த்தரைப்பற்றி ஏதாவது தெரியுமா ?" என்று கேட்டேன். வால்த்தர் ஒரு ஜெர்மானியர். அமெரிக்காவில் ஒன்ருகப் பிரயாணம் செய்த நால்வரில் ஒருவர்.

"ஆம். என்னைத்தேடி, ஒருமுறை இங்கு வந்திருந்தார். யுத்தத்தில் தாம் கலந்துகொள்ளவே இல்லை என்று அவர் சாதித்தார். யுத்தத்தின்போது, பாரிஸில் ஒரு ஜெர்மன் வியாபார நிலையத்தில் வேலை செய்து வந்ததாக கூறினர். ஆனல் அவர் கூறியதில் எனக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கையில்லை" என்ருர் வால்ட்.

அச்சமயத்தில் மாச்செல்டு சுவையுள்ள சாண்ட்விச்களும், சூடான காப்பியும் கொண்டு வந்தார். நாங்கள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த அறையில் ஏராளமான புத்தகங்கள் இருந்தன. பெரும்பான்மை டச்சு நூல்கள். ஆங்கில நூல்கள் சில இருந்தன. அலமாரியில் அழகாக வைக்கப் பெற்றிருந்த டச்சுக் கலைக்களஞ்சியத் தொகுதிகளில் ஒன்றை எடுத்தேன். உள்ளே கவர்ச்சியான அச்சு; வர்ணப் படங்களையும் மற்றப் படங்களையும் பார்த்தபொழுது விஷயங்களின் தன்மை விளங்கிற்று. புதிய பதிப்பில் வெளிவர வேண்டிய தொகுதிகள் இன்னும் இரண்டு இருந்தன. ஒவ்வோர் ஆண்டிலும் புதிதாகக்கண்ட விஷயங்களை அனுபந்தமாகப் புத்தக உருவில் வெளியிட்டு,

அவற்றை ஏற்கெனவே கலைக்களஞ்சியத் தொகுதிகள் வாங்கியவர்களுக்குச் சொற்பமான விலைக்கு விற்றனர். டச்சுக்காரரின் அச்சுத்திறமைக்கும், கலை ஆர்வத்திற்கும் அந்த கலைக்களஞ்சியமே சான்று.

"இந்தத் தொகுதிகளை எப்படி வாங்கினேன் தெரியுமா? யுத்தம் ஆரம்பமாவதற்குமுன், எனது தாயார், கூடியவரை சோப்புக்கட்டிகளையும், தீப்பெட்டிகளையும் வாங்கிப் பத்திரப்படுத்தி வைக்கும்படி கூறினார். முதலாவது மகா யுத்தத்தின்போது, இந்தச் சாமான்கள் கிடைக்காமல் போயிற்றும். அவருடைய புத்தி மதிப்படி நிறைய வாங்கிப் பத்திரப்படுத்தினேன். யுத்தகாலத்தில் ஒவ்வொருவருக்கும் கொடுத்த உணவுப் பங்கீடு மிகக் குறைவு. ஒரு குடும்பத்தில் எத்தனை பேர் உண்டோ, அதற்கு அதிகமாகவே ஆட்கள் இருப்பதாகக் கூறி, பங்கீடுச் சீட்டுக்கள் வாங்குவது வழக்கம். அம்மாதிரி பங்கீடுச் சீட்டு வழங்கிய அதிகாரிகளுக்கு நாங்கள் தீப்பெட்டியை அன்பளிப்பாகக் கொடுத்தோம். அப்பொழுது தீப்பெட்டி கிடைப்பது அரிது. தீப்பெட்டியைக் கொடுத்து அநேக காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம். அதிகப்படியாக இருந்த தீப்பெட்டிகளை நல்ல விலைக்கு விற்றேன். அதனால் கிடைத்த லாபத்தைக் கொண்டு இந்தக் கலைக்களஞ்சியத் தொகுதிகளை வாங்கினேன்" என்றார் வால்ட். அவற்றின் விலை சுமார் நானூறு ரூபாய்.

மறுநாள் காலையில் மூன்று குழந்தைகளையும் அறிமுகப் படுத்தினர்; ஏழுவயதுப் பையன் ரிச்சேர்டு; ஐந்து வயதுப் பெண் நெல்கே; இரண்டு வயது நிரம்பப் பெருத பெண்குழந்தை சூஸான்.

இந்தியாவிலிருந்து ஒருவர் தங்கள் வீட்டுக்கு விருந்தாளியாக வந்தது அந்தக் குழந்தைகளுக்குப் புது அனுபவம். குழந்தைகளுக்குமட்டுமென்ன? அந்த வீட்டு வேலைக்காரப் பெண்ணுக்கே புதிய அனுபவம். எல்லோருக்கும் என்னுடன் பேசவேண்டுமென்று ஆசை; ஆனால் மொழி தெரியவில்லை.

ஹாலந்தில் வேலைக்காரர்கள் கிடைப்பது கஷ்டமன்று; ஆனால் அவர்களை வேலைக்கு வைத்துக் கொள்வதுதான் கஷ்டம். முதலாவது அதிகமான சம்பளம்; இரண்டாவது வீட்டிலேயே தங்குவதற்குத் தனி அறையும் மற்ற வசதிகளும் செய்து கொடுக்க வேண்டும். வீட்டில் உள்ளவர்களுக்கே போதுமான இடம் இல்லாதிருக்கும்பொழுது, வேலைக்காரர்களுக்கு எப்படி இடம் கொடுக்க முடியும்?

"இவள் வேலைக்காரிதான்; ஆனால் சமைக்கத் தெரியாது. பகலில்மட்டும் வந்து வேலை செய்வாள். மாலை ஐந்து மணி அடித்ததும் போய்விடுவாள். நான் அடிக்கடி வெளியே செல்லவேண்டியிருப்பதால், சூஸானைக் கவனித்துக் கொள்வதற்காகவே இவளை அமர்த்தியிருக்கிறேன்" என்றார் மாச்செல்டு.

காலையில் வால்ட், தமது காரியாலயத்திற்குச் சென்றபொழுது என்னையும் தமது மோட்டாரில் அழைத்துச் சென்றார். ஊருக்குள் மத்தியில் என்னை இறக்கிவிட்டு, "உங்கள் விருப்பப்படி ஊர் சுற்றிப் பாருங்கள்; பகல் ஒரு மணிக்கு இதே இடத்திற்கு வந்துவிடுங்கள். உங்களை அழைத்துச் செல்கிறேன்" என்றார்.

நகரத்தின் மத்தியில் பெரும்பாலும் புதிய கட்டிடங்கள்; அவை பெரிதாகவும் அழகாகவும் இருந்

தன. குண்டு வீச்சுக்கு இலக்காகாமல் தப்பிய பெரிய கட்டிடங்களில் தலைமைத் தபால்நிலையமும் ஒன்று.

பெரிய உருவச்சிலையொன்றையும் நகரின் மத்தியில் பார்த்தேன். அது ராணியின் உருவமன்று; அல்லது பேர்பெற்ற போர்வீரனின் உருவமும் அன்று. சென்ற யுத்தத்தில் அந்த நாடும் நகரமும் அடைந்த துன்பங்



ரோட்டர்டாம்—உருவச்சிலை

களை விளக்கிக் காட்டிய உருவச்சிலை அது. ஒரு பலமுள்ள மனிதனின் வயிற்றில் குண்டுபட்டு, அது அவன் வயிற்றைத் துளைத்துக்கொண்டு போயிற்று; ஆனால் அவன் ஆவி போகவில்லை. அவன் இரண்டு கைகளையும்

மேலே தூக்கி, 'நான் எப்படியும் வாழ்வேன்' என்ற உறுதியை விடாமல், பிறரை உதவிக்கு அழைக்கிறான். யுத்தத்திற்குப்பின் அந்த நாடு—நகரத்தின் நிலைமையை அது நன்கு விளக்கிற்று. அதனைக் கற்பனைசெய்து உருவாக்கியவர் பிரெஞ்சு தேசத்துச் சிற்பி. எதிரியைப் பழிவாங்கும் பாவனையே அந்தச் சிலையில் இல்லை. தனது சகிக்க முடியாத துன்பத்தை உணர்ச்சியுடன் வெளிப் படுத்திற்று அச்சிலை. அது, டச்சுக்காரரின் பண்பாட் டுக்கு ஓர் உதாரணம்.

நகரின் மத்தியிலேயே, சிறு திடல் ஒன்றில் ஹெலிகாப்டர் (Helicopter) விமான நிலையம் இருந்தது. அந்த விமானங்களுக்குப் பெரிய விமானத் திடல் தேவை யில்லை. அவை மேலேயிருந்து நேராகக் கீழே இறங்கி விடும். முதன்முதலாக ஹெலிகாப்டர் விமானப் போக்குவரத்து பெல்ஜியத்தில் உள்ள ஆண்ட்வர்ப் நகரத்துக்கும், ரோட்டர்டாம் நகரத்துக்குமிடையேதான் ஆரம்பமாயிற்று. பின்னர் பெல்ஜியத்திலேயே பல ஊர்களுக்கும், மேற்கு ஜெர்மனியில் உள்ள சில நகரங்களுக்கும் போக்குவரத்து ஏற்பட்டது.

ரோட்டர்டாம் நகரில் விமான நிலையம் ஒன்று தான் இருந்தது. ஹெலிகாப்டர் தவிர வேறு விமானங் களில் பிரயாணம் செய்வதற்கு, இருபது மைலுக்கு அப்பாலுள்ள ஆம்ஸ்டர்டாம் விமான நிலையத்திற்குத் தான் செல்ல வேண்டும். ஆம்ஸ்டர்டாம் விமான நிலையம், உலகில் உள்ள மிகப்பெரிய விமான நிலை யங்களுள் ஒன்று. உலகத்தின் எல்லாப் பகுதிகளி லிருந்தும், இரவும் பகலும் விமானங்கள் வந்துபோய்க் கொண்டிருந்தன.

கே. எல். எம். என்பது பிரபலமான டச்சு விமானக் கம்பெனியின் பெயரைக் குறிப்பிடும் எழுத்துக்கள். நாம் கே. எல். எம். என்று சொல்லுவதை, டச்சுக்காரர்கள் கா. எல். எம். என்று உச்சரிக்கிறார்கள். கா. எல். எம். கிளைக்காரியாலயம் ஒன்று ரோட்டர்டாமில் இருந்தது. அவர்கள், பிரயாணிகளைத் தங்கள் மோட்டாரில் விமான நிலையத்துக்கு அழைத்துச் சென்றனர்.

ஹாலந்து நாட்டை டச்சு நாடு என்றும் அழைப்பது வழக்கம். ஹாலந்து நாட்டில் குடியரசை நிறுவியவர், பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த வில்லியம் (William the Silent) என்பவர். அவருடைய வழித்தோன்றல்கள் தான் டச்சு ராஜ குடும்பத்தினர்.

ஹாலந்து தேசத்தில் மொத்த மாகாணங்கள் பதினொன்று. ஒவ்வொரு மாகாணத்துக்கும் தனிச் சட்டசபை உண்டு. மத்திய அரசாங்கத்துச் சட்ட மன்றத்தில் மேல்சபை, கீழ்சபை என இரண்டு உண்டு. மாகாணச் சட்டசபை அங்கத்தினர்கள் ஐம்பது பேர்களைத் தேர்ந்தெடுத்து மேல்சபைக்கு அனுப்பு கின்றனர். கீழ்சபை அங்கத்தினர்களை வாக்காளர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். இருபத்தைந்து வயது பூர்த்தி யான ஆண், பெண் அனைவருக்கும் வாக்குரிமை உண்டு.

பத்து லட்சம் மக்கள் உள்ள டச்சு கினியா, தென் அமெரிக்காவில் உள்ள சூரிநாம், மேற்கு இந்தியத் தீவுகளில் உள்ள கியூராசோ, அருபா முதலியவை இன்னும் டச்சுக்காரர் ஆட்சியில் உள்ளன.

உலகத்திலேயே இரண்டாவது பெரிய துறை முகம் ரோட்டர்டாம். சுமார் ஏழு லட்சம் மக்கள்

உள்ள அந்நகரில் பல பெரிய வியாபார நிலையங்கள் இருந்தன; விதவிதமான சாமான்களை அழகாகப் பரப்பி வைத்திருந்தனர்.

டச்சுக்காரர்களுக்குச் சாக்லெட் என்றால் மிகப் பிரியம். சுவையுள்ள சாக்லெட் தயாரிப்பதில் பேர் பெற்றவை ஸ்விட்சர்லந்தும், ஹாலந்தும்.

வியாபார நிலையமொன்றில் நல்ல ஜமுக்காளம் ஒன்றைப் பார்த்தேன்.

"இது இந்தியாவிலிருந்து இறக்குமதியானதா?" என்று அங்கிருந்த வேலைக்காரரைக் கேட்டேன்.

"இல்லை. இது ஹாலந்தில் தயாரிக்கப் பெற்றது" என்றார் அவர்.

ஹாலந்தில் உற்பத்தியாகும் சாமான்கள் பல. அவர்கள் கப்பல் கட்டினார்கள்; மோட்டார் உற்பத்தி செய்தார்கள்.

அங்கு உற்பத்தியாகும் ரேடியோப் பெட்டி, டெலிவிஷன் பெட்டி, டேப் ரிகார்டர் என்னும் ஒலிப் பதிவு இயந்திரம், மின்சாரக் கருவிகள் முதலியன உலகப் புகழ் பெற்றவை.

பாலடைக்கட்டிக்குப் (Cheese) பேர்பெற்ற நாடு ஹாலந்து. சில பாலடைக் கட்டிகள் நாற்பது அல்லது ஐம்பது பவுண்டு எடை யிருந்தன. ஹாலந்தின் ஏற்றுமதிப் பொருள்களில் முக்கியமானது பாலடைக்கட்டி.

டச்சுக்காரர் நல்ல விவசாயிகள்; சிறந்த எஞ்சினியர்கள்; உலகப் பிரசித்திபெற்ற விமானிகள்.

புதிய கடைத்தெரு ஒன்றுக்குச் சென்றேன். ஆங்கிலத்தில் உள்ள L என்ற எழுத்தைப்போல அதனை அமைத்திருந்தார்கள். வீதி அகலமாய் இருந்தது. இரு புறங்களிலும் இருந்த கடைகள் ஒரே மாதிரியாக இருந்தன ; ஆனால் விற்பனை செய்த சாமான்கள் வெவ்வேறு. அங்கே நூறு கடைகளுக்கு மேலிருந்தன. இன்னும் புதிதாகக் கட்டிக்கொண்டேயிருந்தனர். எல்லாக் கடைகளும் மிகவும் புதிய முறையில் அழகாக அமைக்கப்பெற்றிருந்தன. கடைத் தெருவுக்குள் வண்டிகள் செல்லக்கூடாது. நடந்துதான் செல்லவேண்டும். கடைத்தெருவை நன்ருக அலங்கரித்திருந்தார்கள். மாலை நேரத்தில்தான் வியாபாரம் அதிகம்.

ஹாலந்தில் தயாரிக்கப்பெறும் மது வகைகளைப் பிரபலப் படுத்தினுர்கள். அழகான பல நிறமுள்ள புஷ்பங்களுக்குப் பேர்பெற்றது ஹாலந்து. அவற்றை அடுக்கி வைத்திருந்த முறை அழகாக இருந்தது.

அங்கிருந்த புத்தகக்கடை ஒன்றுக்குச் சென்றேன். பெரும்பான்மை டச்சுப் புத்தகங்கள். ஒரு சில ஆங்கிலப் புத்தகங்களும் இருந்தன ; ஆனுல் அவை மட்டரகமான அமெரிக்க நாவல்கள். புத்தகங்களைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அங்கிருந்த விற்பனையாளருக்கு ஆங்கிலம் தெரியவில்லை. கடையின் சொந்தக்காரர், ஏதோ கடிதம்டைப் அடித்துக்கொண்டிருந்தவர் அதை விட்டுவிட்டு என்னிடம் வந்து, "ஏதேனும் உதவி வேண்டுமா ?" என்று ஆங்கிலத்தில் கேட்டார்.

"புத்தகம் வாங்குவதற்காக நான் வரவில்லை. இந்தியாவில் புத்தக வியாபாரத்தில் எனக்குச் சிறிது தொடர்புண்டு. தங்களுக்கு ஆட்சேபனை யில்லாவிட்டால், இங்கே சிறிது நேரம் தங்கி, புத்தகங்களைப் பார்க்க விரும்புகிறேன்" என்றேன்.

அவர், என்னை ஒரு விருந்தாளியைப்போல அன்புடன் வரவேற்று, தம் வேலைகளையும் விட்டு, நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். ஹாலந்தில் வெளியான விதவிதமான புத்தகங்களைக் காட்டி, அவற்றின் வரலாறுகளை விளக்கிக் கூறினர். டச்சு மொழியில், மலிவான விலையில், நேர்த்தியாக அச்சிடப்பெற்றிருந்த பல புத்தகங்களைப் பார்த்தேன். சங்கீதம், ஓவியம் முதலிய கலைகளைப் பற்றிய புத்தகங்கள் அற்புதமாக இருந்தன. பிரயாண நூல்களும் ஏராளம். புத்தக வியாபார சம்பந்தமான விவரங்களை அவர் விரிவாகக் கூறினர். நிச்சயமாக நான் புத்தகம் வாங்கப்போவதில்லை என்று தெரிந்தும், அவர் அவ்வளவு அன்புடன் நடந்துகொண்டதைப் பாராட்டினேன்.

பகல் ஒரு மணிக்குக் குறிப்பிட்ட இடத்திற்குச் சென்று காத்திருந்தேன். சில நிமிஷங்களில் வால்ட் அங்கு வந்தார். இருவரும் வீட்டுக்குச் சென்றோம்.

அந்நாட்டில் காலை ஆகாரமும், இரவு ஆகாரமும் தான் முக்கியமானவை. பகலில் ஒன்றிரண்டு சாண்ட்விச்களைச் சாப்பிட்டுத் தேத்தண்ணீர் அருந்துவார்கள். இரவுச் சாப்பாடு என்பது மாலை ஆறு மணிக்கு; பின்னர் இரவு பத்து மணிக்கு, சாண்ட்விச், கேக், காப்பி முதலியன சாப்பிடுவது வழக்கம்.

அன்று இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு, எட்டு மணிக்கு, குழந்தைகளைப் படுக்கைக்கு அனுப்பியபின்னர் நாங்கள் மூவரும் உரையாடினேம்.

மாச்செல்டு ஒரு சிறு ஓலைப் பெட்டியைக் கொண்டு வந்தார். அதனைப் பெருமையோடு என்னிடம் காட்டினர். அதற்குள் இருந்த ஊசி நூல் முதலியவற்றை

எடுத்து, சௌகரியமான சோபாவில் அமர்ந்து, தமது பின்னல் வேலையைத் தொடங்கினர்.

சென்றமுறை ஐரோப்பாவுக்குச் சென்றபொழுது ஐரோப்பிய நண்பர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுப்ப தற்காகச் சிறு ஓலைப்பெட்டிகளை எடுத்துச் சென்றேன். எனது வேண்டுகோளின்படி எனது சிறிய தாயார் அவற்றை அன்புடன் தயாரித்துக் கொடுத்தார். அவை சிறிய ஓலைகளால் முடையப்பெற்றவை; அற்புதமான வேலைப்பாடு. பல வர்ண ஓலைகள் கண்ணைக் கவர்ந்தன. அவை கலைப்பொருள் கண் காட்சியில் வைப்பதற்குத் தகுதியுடையவை. அவற்றில் ஒன்றை வால்ட்டுக்கு கொடுத்திருந்தேன். ஓலையின் வர்ணங்கள் மங்கியிருந்த போதிலும், பெட்டி உருக்குலையாமல் நல்ல நிலைமையில் இருந்தது. யுத்தகாலத்திலும் அதனைப் பத்திரமாக வைத்திருந்தது, டச்சுப் பெண்கள் சாமான்களைப் பேணி வைக்கும் தன்மையைக் காட்டிற்று.

இந்திய நாட்டின் சுதந்திரப் போரைக் குறித்து வால்ட்டும் மாச்செல்டும் அறிய விரும்பினர்.

“காந்தியடிகள் இந்தியாவில் பிறந்தது எங்கள் பாக்கியம். இந்தியாவுக்கு மட்டுமன்று; மனித குலத் துக்கே அவர் ஒப்பற்ற தலைவராக விளங்கினர். நேரு வைப்போல மக்களுடைய அன்புக்குப் பாத்திரமான ஜனநாயக அரசியல் தலைவர்கள் உலகிலேயே குறைவு. கத்தியின்றி, ரத்தமின்றி, அஹிம்சை முறையில் இந்தியா சுதந்திரம் பெற்றது. அரசியல் சுதந்திரம் பெற்றதே தவிர இன்னும் பொருளாதாரச் சுதந்திரம் பெறவில்லை. அதற்காகப் போராடிக்கொண்டிருக்கிறது.

"பிரிட்டிஷாருடைய அநீதியான செய்கைகளை வெறுக்கலாமே தவிர, அவர்களை வெறுக்கக்கூடாது. ஒருவருடைய அநீதியான செய்கை ஒரு வியாதியைப் போல. அந்த வியாதி நீங்கும்பொழுது மனிதன் சுத்த மாகிவிடுகிறான் என்று காந்தியடிகள் எங்களுக்குப் போதித்தார். நூற்றைம்பது ஆண்டுகளாக ஆள்வோரும், ஆளப்படுவோருமாக இருந்த இரண்டு நாட்டு மக்கள் பழையனவற்றை ஒரே இரவில் மறந்து சரிசமான நிலை யில் அந்நியோந்நியமாக இருப்பது சரித்திரம் காணாத அதிசயங்களில் ஒன்று. இந்த அதிசயத்துக்கு மூல காரணம் காந்தியடிகள்" என்றேன்.

யுத்தகாலத்தில் ஹாலந்தில் நடைபெற்ற நிகழ்ச்சி களைக் கூறும்படி வால்ட்டைக் கேட்டேன்.

"ஜெர்மானியர் இந்நாட்டில் புகுந்து யுத்த காலம் முழுதும் தங்கினர். அவர்கள் கொடூரமாகவும் அநாகரிக மாகவும் நடந்துகொண்டனர். அவர்களைக் கண்டாலே எங்களுக்கு வெறுப்பு. எங்களுடைய ராணி மிகவும் நல்லவர். யுத்தகாலத்தில் அவர் லண்டனில் தங்கினார். டச்சுக் கப்பல்கள் அனைத்தும் நேச தேசங்களோடு சேர்ந்து போரிட்டன. டச்சு விமானிகளும், ஹாலந் துக்கு வெளியே யிருந்த டச்சுக்காரர் அனைவரும் நேச நாடுகளுடன் சேர்ந்தனர். ஹாலந்திலே நாங்கள் ரகசியச் சங்கங்கள் ஏற்படுத்தி ஜெர்மானியருக்கு விரோதமாக நாசவேலைகள் செய்தோம். ரகசியமாகப் பத்திரிகைகள் வெளியிட்டோம்" என்று சொல்லி அந்தப் பத்திரிகை களின் தொகுப்பு ஒன்றைப் பெருமையோடு காட்டினார் வால்ட்.

"ஜெர்மானியர், யூதர்களைப் பொறுத்தவரை மனிதத்தன்மையற்ற முறையில் நடந்துகொண்டனர்.

யூதர்கள் கழுத்தில், அவர்களுடைய பெயர் பொறித்த சீட்டைத் தொங்கவிட்டார்கள். பின்னர் அவர்களை வரிசையாக அழைத்துச் சென்று, வாயுக் குண்டத்தில் (Gas Chamber) உயிருடன் தள்ளிக் கொன்றுவிட்டனர்.

"உணவுப் பஞ்சம் இன்னதென்று அறியாத நாடுகளில் ஒன்று எங்கள் நாடு. எங்கள் நாட்டில் கிடைத்த உணவு அனைத்தையும் ஜெர்மானியர் வெளியேற்றி விட்டனர். உணவுக்கு நாங்கள் பட்ட கஷ்டம் அதிகம். ஹாலந்தில் எந்தவிதமான ஒத்துழைப்பும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. தொழிலாளருக்குத் தினமொன்றுக்கு ஐந்து கில்டர் (ஒரு கில்டர் சுமார் ஒரு ரூபாய் மூன்றணா) சம்பளம் தருவதாக ஜெர்மானியர் அறிவித்தனர். சாதாரணமாகக் கிடைத்த சம்பளத்தைக் காட்டிலும் அது இரு மடங்கு அதிகம். அப்படி யிருந்தும் அவர்களுக்குத் தேவையான ஆட்கள் கிடைக்கவில்லை. எல்லா நாடுகளையும்போல, இந்த நாட்டிலும் பல தேசத் துரோகிகள் இருந்தனர். யுத்த முடிவில், அவர்களில் பலர் தற்கொலை செய்துகொண்டனர்" என்றார் வால்ட்.

"ஜெர்மானியர் நல்ல காலத்திலேயே நன்றாக நடந்துகொண்டதில்லை. நான் ஒரு டாக்டரிடம் வேலை செய்தேன். அவர் டச்சுக்காரர்; அவர் மனைவி ஜெர்மானியர். காலையில் வேலைக்குச் சென்று மாலையில்தான் திரும்பவேண்டும். கட்டிடத்தில் கீழ்வீட்டில் வைத்திய சாலை. மேல்வீட்டில் டாக்டர் வசித்தார். பலமுறை அவர் என்னை மேல்வீட்டுக்கு வரச் சொல்லுவார். அப்பொழுது அவரும் அவர் மனைவியும் சாப்பிட்டுக் கொண்டிருந்ததைப் பலமுறை பார்த்தேன். அவர் விஷயத்தைக் கூறுவார். அந்த இடத்தில் எத்தனையோ ஆண்டுகள் வேலை செய்தும், அந்த ஜெர்மன்காரி

5

என்னை ஒரு முறையாவது 'காப்பி சாப்பிடு' என்று கூடச் சொல்லியது கிடையாது" என்றார் மாச்செல்டு.

"யுத்தத்திற்குப் பிறகும் அவர்கள் மாறவில்லை. சென்ற ஆண்டில் ஒரு ஜெர்மன் பத்திரிகை நிருபர் இங்கே வந்தார். அவருடன் இரண்டு நாட்கள் சுற்றி, வேண்டிய உதவிகள் செய்தேன். அவர் ஜெர்மனிக்குத் திரும்பியபொழுது எனது மகன் ரிச்சேர்டுக்கு ஒரு சாமான் அன்பளிப்பாகக் கொடுத்தார். அது என்ன தெரியுமா?" என்றார் வால்ட்.

"விளையாட்டுப் பொருளாகத்தான் இருக்க வேண்டும்" என்றேன்.

"ஆம்; விளையாட்டுப் பொருள்தான். அது ஒரு சிறிய துப்பாக்கி; மிகச் சிறிது. ஆனால் வெடிச் சப்தம் மட்டும் அபாரம். ரத்தத்திலேயே ராணுவ வெறி கலந்த ஜெர்மானியருக்கு விளையாட்டுப்பொருள்கூடத் துப்பாக்கி தான்" என்றார் வால்ட்.

நார்வீஜிய நண்பரான ஜான், வியாபார விஷய மாக ஐரோப்பாவில் சுற்றுப் பிரயாணம் செய்துகொண் டிருந்தார். ஹாலந்தைவிட்டு நான் செல்வதற்குமுன், அவர் அங்கே வரவேண்டுமென்று நார்வேயிலேயே கேட்டுக்கொண்டேன். அவரும் சம்மதித்தார். வால்ட்டும் ஜானும் ஒருவரை யொருவர் சந்தித்துப் பதினாறு ஆண்டுகள் ஆயின; அமெரிக்காவில் சந்தித்ததுதான்.

"அடுத்த வாரம் ரோட்டர்டாம் வருகிறேன். இரண்டு தினங்கள் தங்க எண்ணியுள்ளேன்" என்று ஜான் தந்திச் செய்தி அனுப்பினார். அந்தச் செய்தி எங்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுத்தது.

" வால்த்தர் பக்கத்தில்தானே இருக்கிறார்; அவரையும் அழைத்தால் என்ன ?'' என்றேன்.

"எனக்குச் சம்மதம்; ஆனால் மாச்செல்டின் கருத்தைத் தெரிந்து செய்வது நல்லது '' என்றார் வால்ட்.

" நீங்கள் வந்தபொழுது வாருங்கள் என்று சொல்லி வரவேற்றேன். உங்களுக்கு எனது வீட்டுக் கதவை மட்டும் திறக்கவில்லை; எனது உள்ளத்தையும் திறந்து உங்களை வரவேற்றேன். ஜெர்மானியரான வால்த்தர் வந்தால், வீட்டுக் கதவைமட்டும்தான் திறப்பேன். மனப்பூர்வமாக வரவேற்கமாட்டேன். ஜெர்மானியர் இழைத்த கொடுமைகளை நான் இன்னும் மறக்கவில்லை '' என்று சாந்தமாக, ஆனால் உறுதியுடன் கூறினார் மாச்செல்டு.

நிலைமையைக் கருதி, வால்த்தரை அழைக்கவேண்டாம் என்று தீர்மானித்தோம்.

* * *

தமது வேலை சம்பந்தமாக, வாரத்தில் இரண்டு அல்லது மூன்று நாட்கள் வால்ட் வெளியூர்களுக்குச் செல்வது வழக்கம். நாடு முழுவதிலும் பிரயாணம் செய்து, அவர்களுடைய வாடிக்கைக்காரர்களான தொழிற்சாலை அதிபர்களைச் சந்தித்து, தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் சம்பந்தமாக ஆலோசனை கூறுவதும், உதவி செய்வதுமே அவருடைய வேலை. ஹாலந்து தேசத்தின் பெரும்பகுதியை எனக்குச் சுற்றிக் காண்பிக்க வேண்டுமென்று வால்ட் விரும்பியதால், ஒவ்வொரு வாரமும் வெவ்வேறு பகுதிகளுக்குச் செல்ல ஏற்கெனவே திட்டம் தயாரித்திருந்தார். சில ஊர்களில் ஹோட்டல்களிலும், சில ஊர்களில் அவருடைய நண்பர்கள் வீடுகளிலும் தங்கினோம். அவர் தொழிற்சாலைக்குச் சென்று

பேசிக்கொண்டிருந்தபொழுது, நான் அவருடைய மோட்டாரிலேயே உட்கார்ந்து புத்தகமோ அல்லது பத்திரிகையோ படிப்பது வழக்கம்.

முதன்முதலாக ஆல்மிலோ என்ற ஊருக்குச் சென்றோம். காலை ஏழு மணிக்குப் பிரயாணமானோம். பல ஆண்டுகளுக்குமுன், வால்ட் அமெரிக்கப் பிரயாணத்தில் மோட்டார் ஓட்டிய ஞாபகம் வந்தது. சாலை நன்றாக இருந்தது. எண்பது கிலோ மீட்டர் (சுமார் ஐம்பது மைல்) வேகத்தில் பிரயாணம் செய்தோம். அப்பொழுதுதான் இலையுதிர்காலம் ஆரம்பம்; சாலையின் இருபுறங்களிலும் மரங்கள். அவற்றில் இருந்த பழுத்த பொன் நிறமுள்ள இலைகள் உதிர்ந்திருந்தன. வழிமுழுதும் அக்காட்சியைக் கண்டோம்.

இரண்டு மோட்டார்கள் ஒரே சமயத்தில் செல்வதற்கு ஏற்ற அளவு சாலை பெரிது. சாலையின் ஒவ்வொரு புறத்திலும் இரண்டு நடைபாதைகள் இருந்தன. ஒரு நடைபாதை சைக்கிள் போக்குவரத்துக்கு; மற்றொரு நடைபாதை மக்கள் நடந்து செல்வதற்கு. சிறிய சாலைகளில் ஒரு புறத்தில்மட்டும் நடைபாதைகள் இருந்தன.

அந்நாட்டில் சைக்கிள்கள் ஏராளம். கிராமவாசிகளுக்குச் சைக்கிள் இன்றியமையாதது. சைக்கிள்களுக்காகத் தனிப்பாதை அமைத்தது மிகவும் புத்திசாலித்தனமான காரியம். இல்லையானால் எவ்வளவோ அசௌகரியங்களும் விபத்துக்களும் நேரலாம்.

சாலையிலேயே இரண்டு அல்லது மூன்று மைல்களுக்கொருமுறை மோட்டார்களை நிறுத்திவைப்பதற்காக ஏற்பாடு செய்திருந்தார்கள். மைல்கல் போன்ற உயரமான கல்லில் P என்ற பெரிய ஆங்கில எழுத்

தைப் பார்த்தேன். அந்த இடத்தில் சாலையை அடுத்துச் சில கஜ தூரத்துக்கு மற்றொரு சாலை இருந்தது. அங்கே ஒரே சமயத்தில் மூன்று அல்லது நான்கு மோட்டார்களை நிறுத்த இடமிருந்தது. பிரயாணம் செய்தோர் பலர் அந்த இடங்களில் மோட்டார்களை நிறுத்தி, சிறிது இளைப்பாறிய பின்னர் மீண்டும் பிரயாணத்தைத் தொடங்கினர். அவர்கள் மோட்டார்களைச் சாலையின் ஓரத்திலேயே நிறுத்திவிட்டால், அதனால் போக்குவரத்துக்கு இடையூறு உண்டாகும்; விபத்துக்களும் நேரலாம். எனவே மோட்டார்களை நிறுத்தி வைப்பதற்காக அந்த ஏற்பாடு செய்திருந்தனர்.

ஹாலந்தில் நாடுமுழுவதும் வீடு மயந்தான். எந்த இடத்திலிருந்து பார்த்தாலும், ஒரு மைல் தூரத்திற்குள்ளாக நிச்சயமாக வீடு இருக்கும். அம்மாதிரி வீடுகள் பெருகியதால், காடு வரவரக் குறைந்து வந்தது.

ஆல்மிலோவுக்குப் போகிற வழியில், வால்ட்டுக்குப் பல வேலைகள் இருந்தன. காலை பத்து மணிக்கு ஒரு தொழிற்சாலைக்குச் சென்றோம். அவர் உள்ளே சென்றார். நான் மட்டும் தனியாக மோட்டாரில் உட்கார்ந்திருந்தேன். சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு வேலைக்காரி என்னிடம் வந்து ஒரு கோப்பை காப்பி கொடுத்தாள். சிறிதுநேரம் கழித்து வால்ட் வந்ததும், அதை அவரிடம் கூறி வந்தனம் செலுத்தினேன்.

"இந்த நாட்டில் உள்ள எல்லாத் தொழிற்சாலைகளிலும், பெரிய வியாபார நிலையங்களிலும், வேலைசெய்யும் நாட்களில் எல்லாம் தினந்தோறும் காலை பத்து மணி முதல் பத்தரை மணிக்குள்ளாக ஒவ்வொருவருக்கும்

ஒரு கோப்பை காப்பி இலவசமாக வழங்குவார்கள். அந்த நேரத்தில் யார் வந்தாலும் அவர்களுக்கும் காப்பி உண்டு" என்றார் வால்ட். ஹாலந்தில் பல தொழிற் சாலைகளில் அம்மாதிரி காப்பி சாப்பிட்டிருக்கிறேன். மாலை ஐந்து மணிக்கு ஆல்மிலோ சென்றோம்.

"நாம் பர்கீமீஸ்டர் வீட்டுக்குச் செல்கிறோம்" என்றார் வால்ட். அந்தப் பெயரை என்னால் சுலபமாக உச்சரிக்க முடியவில்லை.

"இது மேயர் உத்தியோகம் போன்றது. முழு நேரம் வேலை செய்யவேண்டும்; சம்பளம் உண்டு. எங்கள் அரசியின் நியமனம் அது. மேயர் என்பதற் காக நாம் அங்கே செல்லவில்லை. அவர் என்னுடைய சிற்றப்பாவின் குமாரர்" என்றார் வால்ட்.

பர்கீமீஸ்டரான டாக்டர் ஜே. எம். ரவிஸ்லோட் நடுத்தர வயதுள்ளவர்; கம்பீரமான தோற்றம்; யாருடனும் இனிமையாகப் பழகும் சுபாவம்; பரந்த மனப்பான்மை யுள்ளவர். உலக விஷயங்களைத் தெரிந்துகொள்வதில் ஆர்வமுள்ளவர். பொது நலனுக் காகச் சலியாது உழைப்பவர் என்று கேள்வியுற்றேன். யுத்த காலத்தில் ஜெர்மானியருக்கு விரோதமாக அவர் செய்த தீரமான காரியங்களைப் பாராட்டி, அரசியார் அவருக்குப் பதக்கமளித்துக் கௌரவித்ததாகவும் அறிந் தேன்.

ரவிஸ்லோட்டுக்கு ஏற்றவர் அவர் மனைவி. விருந்தோம்பலில் சிறந்து விளங்கினார். கணவனைப் போலவே அவரும் சுத்தமாகவும் நன்றாகவும் ஆங்கி லம் பேசினார். அவர்களுக்கு ஒரு மகனும் இரு பெண்க ளும் இருந்தனர். நல்ல பண்பாடுள்ள குடும்பம் அது.

ரவிஸ்லோட் வீட்டில் ஏற்கெனவே இரண்டு விருந்தினர்கள் தங்கியிருந்தனர். எனவே அன்று ஹோட்டலில் தங்குவதென்றும், மறுநாள் அவர்கள் வீட்டில் தங்குவதென்றும் முடிவு செய்தோம். ஆல்மிலோ சிறிய ஊர்தான். என்ருலும் ஒரு ஹோட்டலிலும் இடம் கிடைக்கவில்லை. புகார் செய்யாமல் இருந்தால், எப்படியாவது நாங்கள் படுப்பதற்கு இடம் தருவதாக ஒரு ஹோட்டல் நிர்வாகி கூறினர். நாங்கள் சம்மதித்தோம்.

அன்றிரவு ரவிஸ்லோட் வீட்டில் எங்களுக்கு விருந்து. அங்கு ஏற்கெனவே தங்கியிருந்த விருந்தினர், ஒரு டச்சுத் தம்பதிகள். அந்த டச்சுக்காரர் பணக்கார வியாபாரி. அடிக்கடி அமெரிக்கா சென்று வந்ததாகக் கூறினர். யுத்தத்திற்கு முன் அவர் இந்தோனேஷ்யாவில் வியாபாரம் செய்து வந்தார்.

சாப்பாடு அருமையாக இருந்தது. புரூட் சாலட் செய்திருந்தனர். அதனை ஐஸ்கிரீமுடன் கொடுக்கவில்லை. நல்ல கெட்டித் தயிரில், சீனியைப் போட்டு, பழங்களை அதில் சேர்த்திருந்தனர்.

"இது மிகவும் ருசியாக இருக்கிறது. தயிர் எனக்குப் பிரியம் என்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று ஸ்ரீமதி ரவிஸ்லோட்டைக் கேட்டேன்.

"எங்கள் உணவு உங்களுக்குப் பிடித்திருப்பது குறித்து மகிழ்ச்சி. எங்கள் நாட்டு மக்கள் மிகப் பிரியமாகச் சாப்பிடும் உணவு வகைகளிலே இது ஒன்று. அன்றியும் தயாரிப்பது சுலபமானது" என்ருர்.

சாப்பிட்ட பின்னர், பல விஷயங்களைக் குறித்துப் பேசினேம். இந்தோனேஷ்யாவைப் பற்றிய பேச்சும் வந்தது.

"இந்தோனேஷ்யாவில் இந்த நிலை ஏற்பட்டதற்குக் காரணம் மவுண்ட்பாட்டன்தான்" என்றார் வியாபாரி.

"எப்படி?" என்றேன்.

"ஜப்பானியர் சரணடைந்த பின்னர் இந்தோனேஷ்யாவைப் பாதுகாக்கும்படி மவுண்ட்பாட்டனை அனுப்பினர். டச்சுத் துருப்புக்கள் வரும்வரை, இந்தோனேஷ்யாவைப் பாதுகாத்து டச்சுக்காரர்களிடம் ஒப்படைப்பதுதானே அவர் கடமை. அவர் நடுநிலைமை வகித்தார்; டச்சுத் துருப்புக்கள் இந்தோனேஷ்யா செல்வதற்குத் தவிர்க்கமுடியாத தாமதம் ஏற்பட்டது. இந்த இடைக்காலத்திற்குள் இந்தோனேஷ்யர்கள் தங்களைப் பலப்படுத்திக் கொண்டார்கள். இவ்வளவுக்கும் காரணம் மவுண்ட்பாட்டன்தான்" என்றார்.

ஹாலந்து நாடு முழுவதும் மிகவும் வெறுக்கும் ஆங்கிலேயர் லார்டு மவுண்ட்பாட்டன் ஒருவர்தான்.

"யுத்தம் வந்தபொழுது டச்சுக்காரர்கள் இந்தோனேஷ்யாவை விட்டு ஓடிவிட்டனர். இப்பொழுது அந்த நாட்டைப்பற்றிப் பேச அவர்களுக்கு என்ன உரிமையிருக்கிறது?" என்றேன்.

"டச்சுக்காரர்களைப்பற்றி என்ன வேண்டுமானாலும் குறை சொல்லுங்கள். ஆனால் அவர்கள் இந்தோனேஷ்யாவை விட்டு ஓடவில்லை. இறுதிவரை போராடிச் சிறைப்பட்டனர்" என்றார் வால்ட்.

"இரண்டாவது முறை சந்தர்ப்பம் கிடைத்தபொழுது, இந்தோனேஷ்யத் தலைவர்களை விடுதலை செய்யாமல், நாங்கள் உறுதியாக நின்று தாக்கியிருந்தால், இந்தோனேஷ்யா எங்களை விட்டுப் போயிராது.

நாங்கள் ஆண்டபொழுது அங்கே எவ்வளவு அமைதி யிருந்தது. இப்பொழுது பாருங்கள்; இந்தோனேஷ்யா வில் ஒரே குழப்பம்; சட்டமும் அமைதியும் இல்லை" என்றார் வியாபாரி.

"சட்டமும் அமைதியும் போதிய அளவில்லை என்பது உண்மை. ஆனால் அங்கே சுதந்திரம் இருக் கிறது" என்றேன்.

"இந்தோனேஷ்யரின் சுதந்திரத்தை டச்சுக்காரர் அங்கீகரிக்காதது தவறு. இந்தோனேஷ்யாவில் இருந்த டச்சு அதிகாரிகள் விவேகமாக நடந்துகொள்ளவில்லை" என்றார் வால்ட்.

பர்கீமீஸ்டர் டாக்டர் ரவிஸ்லோட் அதனை ஆமோ தித்தார்.

"இந்தோனேஷ்யாவிலிருந்த டச்சுக் கவர்னர்–ஜெனரல், அரசியைப் பேட்டிகண்டு விவரங்களைச் சொல்லுவதற்காக ஹாலந்துக்கு வந்தார். அரண் மனையை அடைந்ததும், குறைந்தது ஒரு மணி நேர மாவது பேசவேண்டியிருக்கும் என்று நினைத்து, தாம் வந்த மோட்டாரை உடனே திருப்பி யனுப்பி, ஒரு மணி நேரங்கழித்து வரும்படிக் கூறினார். அரசியார் ஒரே நிமிஷத்தில் பேட்டியை முடித்துவிட்டார். கவர்னர்–ஜெனரல் வெளியே வந்ததும், மோட்டார் இல்லாததால் டிராம் வண்டியில் ஏறி வீட்டுக்குச் சென்றார்" என்றார் வால்ட்.

"இந்தோனேஷ்யர்களால் தங்கள் நாட்டைச் சரிவர ஆளமுடியவில்லை. ஐக்கிய நாடுகள் சபையினர், டச்சு நிபுணர்களை இந்தோனேஷ்ய அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறுவதற்காக அனுப்பியுள்ளனர். அந்த

நிபுணர்கள் ஏற்கெனவே இந்தோனேஷ்யாவில் இருந்தவர்கள். அப்பொழுது அவர்கள் வாங்கிய சம்பளத்தை விட, இப்பொழுது அவர்கள் பெறும் சம்பளம் மூன்று அல்லது நான்கு மடங்கு அதிகம். எவ்வளவு வித்தியாசம் பாருங்கள் !" என்று ஏளனச் சிரிப்புடன் கூறினர் வியாபாரி.

"இதில் தவறு ஒன்றுமில்லை. நிபுணர்களுக்குத் திறமைக்கு ஏற்றவாறு சம்பளம் கொடுப்பது முறைமை. ஆனால் ஒரு நாட்டை ஆளப்போவதற்கும், அந்த நாட்டுக்கு ஆலோசனைகூறப் போவதற்கும் எவ்வளவோ வித்தியாசம் உண்டு" என்றேன்.

"என்ன தான் இருந்தாலும் இந்தோனேஷ்யாவை நாங்கள் ஆட்சிசெய்த மாதிரி, யாரும் செய்ய முடியாது. இந்தோனேஷ்யர்களுக்குப் பசி என்பதே தெரியாது. பிரிட்டிஷ், பிரெஞ்சு ஏகாதிபத்தியங்களைக் காட்டிலும் டச்சு ஏகாதிபத்தியத்தில் அதிகமான கூலி கொடுத்தோம். இந்தோனேஷ்ய மக்கள் சௌக்கியமாக வாழ்ந்தனர்" என்ருர் வியாபாரி.

"ஜெர்மானியர் உங்கள் நாட்டைக் கைப்பற்றிய பொழுது, தினமொன்றுக்கு ஐந்து கில்டர் கூலி கொடுத்தார்களே ! அந்த அதிகக் கூலியைப் பெற்றுக் கொண்டு, அவர்கள் ஆட்சியில் நீங்கள் சௌக்கியமாக வாழ்ந்திருக்கலாமே?" என்றேன்.

வால்ட்டும் ரவிஸ்லோட்டும் சிரித்தனர். வியாபாரிக்கு அது பிடிக்கவில்லை. அவர் ஏகாதிபத்திய மரபில் வளர்ந்தவர். ஒரு கறுப்பு மனிதன் தமக்குச் சமமாக உட்கார்ந்து பேசியதை, அதிலும் சங்கடமான விஷயங்களைப் பேசியதை அவரால் சகிக்க முடியவில்லை.

நேரமாகிவிட்டபடியால், வால்ட்டும் நானும் ஹோட்டலுக்குச் சென்ரும். குளிக்கும் அறை யொன்றை எனது படுக்கையறையாக மாற்றி யமைத் தனர். இருந்தபோதிலும் அது சுத்தமாகவும் வெப்ப மாகவும் இருந்தது. பாவம், சாமான்கள் அடுக்கியிருந்த அறையொன்றில் வால்ட் படுத்துறங்கினுர்.

ஹோட்டலில் ஓர் இரவு தங்கினுல், மறு நாள் காலே ஆகாரம் அங்கேதான் சாப்பிடவேண்டும். காலே ஆகாரத்துக்குள்ள பணமும் சேர்ந்ததுதான் ஹோட்டல் வாடகை. காலே ஆகாரம் சாப்பிட்டாலும், சாப்பிடாவிட்டாலும் வாடகை முழுவதையும் கொடுத்துத் தான் ஆகவேண்டும். காலே ஆகாரம் நன்ருக இருக்கும். வேண்டிய மட்டும் சாப்பிடலாம். ஹோட்டல் வாடகை யுடன் பதினேந்து சதவிகிதம் அதிகப் பணம் சேர்த்து வசூலிப்பார்கள். அது இனும் தொகை. அதனேக் கொடுத்தாகவேண்டுமென்பது அரசாங்கச் சட்டம்.

காலே உணவுக்குப்பின், வால்ட் வெளியே சென்ருர். பிற்பகலில் என்னே ஹோட்டலுக்கு வந்து அழைத்துச் செல்வதாகக் கூறினுர். அதுவரை ஊர் சுற்றினேன். ஊரின் நடுவில் இருந்த பெரிய மைதானத்தில் சந்தை கூடியிருந்தது. ஏராளமான கடைகள் இருந்தன; ஒரே ஜன நெருக்கம். விதம் விதமான சாமான்களே விற்றனர்.

தோட்டத்திலிருந்து அப்பொழுதுதான் கொண்டு வந்த பச்சைக் காய்கறிகள்; நல்ல பழங்கள்; பல வர்ணப் பூக்கள்; பாலடைக்கட்டி; துணிமணி, கண்ணுடி, சோப்பு, சீப்பு வகையருப் பொருள்களே யெல்லாம் விற்றனர். நமது நாட்டில் சுடச்சுட மசால் வடை விற்பதுபோல, அங்கே உள்ள சில கடைகளில் மீனே வறுத்து ரொட்டியுடன் விற்றனர். குட்டிப்

பிரசங்கம் செய்து, ஜனங்களைக் கூட்டமாகத் திரட்டித் தங்கள் பொருள்களை விற்பனை செய்தோர் சிலர். எங்குப் பார்த்தாலும் விற்பனையாளர்களின் சத்தம் காதைத் துளைத்தது. அது நமது ஊர்ச் சந்தையைப் போலத்தான் இருந்தது. ஆனால் சந்தை நடைபெற்ற இடம் சுத்தமாக இருந்தது.

பிற்பகலில் வால்ட் ஹோட்டலுக்கு வந்தார். அவருக்கு வேலை யிருந்ததால், அருகிலுள்ள சில ஊர்களுக்குச் சென்று, மாலையில் ரவிஸ்லோட் வீட்டுக்குத் திரும்பினோம். அந்த வீட்டுக் குழந்தைகளுக்கு என்னுடன் ஆங்கிலத்தில் பேச வேண்டுமென்று ஆசை. இந்தியாவைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினர். விருந்தினராகத் தங்கியிருந்த வியாபாரியும் அவர் மனைவியும் தங்கள் ஊருக்குத் திரும்பினர். எனவே வால்ட்டும் நானும் அன்றிரவு ரவிஸ்லோட் வீட்டில் தங்கினோம்.

“ ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னாவில் சமீபத்தில் நடைபெற்ற ஒரு மகாநாட்டுக்கு டாக்டர் ரவிஸ்லோட் பிரதிநிதியாகச் சென்றார். நானும் அவருடன் சென்றேன். யுத்தம் முடிந்த சமயத்தில், ஆஸ்திரியாவில் வாழ்க்கைச் செலவு மிகவும் குறைவு. தற்பொழுது ஹோட்டல் வாடகை தவிர, மற்றச் செலவுகள் எல்லாம் ஜெர்மனியைப்போல அதிகமாகிவிட்டன.

“ நாங்கள் ஓர் ஆஸ்திரிய இளைஞருடன் பேசிக் கொண்டிருந்தோம். அவர் தாம் ஒருமுறை ஹாலந்து சென்றதாகக் கூறினர். ‘ எப்பொழுது ஹாலந்துக்குச் சென்றீர்கள் ?’ என்று கேட்டதற்கு, ‘ யுத்தகாலத்தில் ஜெர்மானியர் உங்கள் நாட்டைக் கைப்பற்றியபொழுது, ராணுவச் சிப்பாயாக ஹாலந்துக்கு வந்தேன் ’ என்றார்.

"அவர் கள்ளம் கபடு இல்லாமல் அவ்வாறு கூறினர். யாராவது நாட்டைக் கைப்பற்றிய (Occupation) காலத்தில் உங்கள் நாட்டுக்கு வந்தேன் என்று சொல்லுவார்களா? ஆஸ்திரியர் ஒருவரால்தான் அவ்வாறு சொல்லமுடியும்" என்றார் ஸ்ரீமதி ரவிஸ்லோட்.

ஆஸ்திரியர்களுக்கு ஐரோப்பா முழுவதுமே பொதுவாக நல்ல பெயர். அவர்கள் இனிய சுபாவ முடையவர்கள். எல்லோரோடும் பிரியமாகப் பழகுவார் கள். அரசியலைப்பற்றி அதிகமாகச் சிந்திக்கமாட்டார்கள்.

மறுநாள் ரவிஸ்லோட் தம்பதிகளிடம் விடை பெற்றுக் கொண்டு, வால்ட்டும் நானும் ரோட்டர்டாம் திரும்பினோம். அப்பெழுது, நாங்கள் வந்த வழியே திரும்பாமல், வேறு வழியாக ரோட்டர்டாம் சென்றோம். வழியில் ஏராளமான பண்ணை வீடுகள் இருந்தன. சில வீடுகள் மிகப் பெரியவை. பல வீடுகளில் மின்சார வசதி இருந்தது. பண்ணைக் கட்டிடங்கள் எல்லாம் ஒரே மாதிரி அமைப்புள்ளவை அல்ல; வெவ்வேறு விதமான கட்டிட அமைப்புக்களைப் பார்த்தோம். ஒரு பண்ணை வீட்டின் தோற்றத்தைக் கொண்டு, அது நாட்டின் எந்தப் பகுதியைச் சேர்ந்தது என்பதைச் சொல்லி விடலாம் என்றார் வால்ட்.

மாலை ரோட்டர்டாம் சேர்ந்தபொழுது, ரோட்டர்டாம் நகரில் உள்ள பெரிய நதியை, பூமிக்குக்கீழ் அமைக்கப் பெற்ற குடைபாதை (Tunnel) வழியாகக் கடந்தோம். பாதைக்கு மேலே நதியின் தண்ணீர் ஓடிக்கொண்டிருந் தது. குடைபாதைக்குக் கீழே மற்றுமொரு குடைபாதை இருந்தது. டச்சுக்காரர்களின் பொறி இயல் (Engineering) திறமைக்கு அந்த அற்புதமான குடைபாதைகள் எடுத் துக்காட்டாக விளங்கின.

முதலாவது குடைபாதை போக்குவரத்துக்காக; கீழே இருந்த இரண்டாவது குடைபாதை சைக்கிள் போக்குவரத்துக்காக. இரண்டாவது குடைபாதையில் மக்கள் நடந்து செல்வதற்கு நடைபாதையும் அமைத்திருந்தார்கள்.

காலேயில் வேலேக்குச் செல்லும் நேரத்திலும், மாலேயில் வேலேயிலிருந்து திரும்பும் நேரத்திலும் ஆயிரக் கணக்கான சைக்கிள்காரர்கள் குடை பாதையின் வழியாகச் சென்றனர். சைக்கிள்களேப் பூமிக்குக் கீழுள்ள குடைபாதைக்கு எடுத்துச் செல்வதற்கும் குடைபாதையிலிருந்து மேலே கொண்டுவருவதற்கும் தனியாக மூன்று படிக்கட்டுகள் இருந்தன. அவற்றில் இரண்டு மின்சாரத்தால் இயங்கின. படிக்கட்டுகளே மேலே இருந்து கீழே செல்லவோ, அல்லது கீழிருந்து மேலே வரவோ எவ்வாறு வேண்டுமானுலும் இயக்கலாம். போக்குவரத்துச் சௌகரியத்தை முன்னிட்டு, காலே நேரத்தில் மின்சாரப் படிக்கட்டுகள் கீழேயிருந்து மேல்நோக்கி இயங்கின; மாலே நேரத்தில் அவை கீழ்நோக்கிச் சென்றன. மின்சாரப் படிக்கட்டில் (Escalator) சைக்கிள்காரர், ஆண்களும் பெண்களும், இரண்டு இரண்டு பேராக வரிசையில் காத்துநின்றனர். வரிசை கால்மைல் நீளத்திற்கு இருந்தது. சில சமயங்களில் அது அரைமைல் நீளம்கூட இருக்கும் என்ருர் வால்ட்.

டச்சுக்காரர்கள் தெய்வபக்தி யுள்ளவர்கள். பெரும்பாலான குடும்பங்களில் சாப்பிட உட்காரும்பொழுதும், சாப்பிட்ட பின்னரும் பிரார்த்தனே செய்வது வழக்கம். அந்நாட்டில் ஏராளமான மாதாகோயில்கள் இருந்தன.

கிறிஸ்துவ மதத்திலேயே பல பிரிவுகள் உண்டு. அவற்றில் டச்சு ரிபார்ம்டு சர்ச் என்பது ஒன்று.

அவர்கள் சீர்திருத்தவாதிகள். அவர்களுக்கு அந் நாட்டில் செல்வாக்கு அதிகம். நாடு முழுவதிலும் அவர்களுடைய மாதாகோயில்கள் இருந்தன. அந்தப் பிரிவைச் சேர்ந்தவர் வால்ட் குடும்பத்தினர். வால்ட் வீட்டுக்கு அருகிலேயே ஒரு மாதாகோயில் இருந்தது. ஞாயிற்றுக் கிழமைகளில், காலையிலும் மாலையிலும் பிரார்த் தனை நடைபெற்றது. காலை வேளையில், அதிகாலையில் ஒரு பிரார்த்தனையும், பத்து மணிக்கு ஒரு பிரார்த்தனையும், நடைபெற்றன. மாச்செல்டு அதிகாலைப் பிரார்த்தனைக் குச் சென்றார். வால்ட்டும், அவருடைய இரு குழந்தை களும் நானும், காலை பத்துமணிப் பிரார்த்தனைக்குச் சென்றோம்.

மாதாகோயில் கம்பீரமான கட்டிடம். உள்ளே நீள மான மண்டபம்; அதன் கோடியில் ஒரு பெரிய மேடை; மேடையின்மீது மற்றொரு சிறிய மேடை. மரத்தால் செய் யப்பெற்ற சிறிய மேடையின் உயரம் சுமார் இருபதடி. அதன் உச்சியில் நின்றுகொண்டு பாதிரியார் பிரசங்கம் செய்வது வழக்கம். சிறிய மேடைமீது, அலங்கரிக்கப் பெற்றிருந்த ஒரு மேஜை இருந்தது. அதன்மீது பைபிள் புத்தகத்தை விரித்து வைத்திருந்தார்கள். அதனைப் படிப்பதற்கு வசதியாக, மேஜையிலேயே சிறிய மின்சார விளக்குகளைப் பொருத்தியிருந்தனர். மண்டபத்தில் ஆயிரம் பேர் உட்கார இடவசதி உண்டு. அன்றையப் பிரார்த்தனையின்போது மண்டபம் நிரம்பியிருந்தது.

மண்டபத்தை மூன்று பிரிவுகளாக வகுத்து, ஆச னங்களை அமைத்திருந்தார்கள். மூன்று பிரிவுகளுக்கு மிடையே விசாலமான நடைபாதைகள் இருந்தன. மக்கள் அமைதியாக இருந்தனர். இனிய சங்கீதம் ஒலித்தது.

வால்ட் என்னிடம் மூன்று வெள்ளிக் காசுகளை—ஒவ்வொன்றும் பத்துக் காசு நாணயங்கள்—கொடுத்தார். காணிக்கைக்காக உண்டிப் பை வரும்பொழுது அதனை வழங்கும்படி கூறினர்.

பெரிய மணி அடித்தது. மாதாகோயில் ஊழியர் சிலர் உண்டிப் பைகளுடன் புறப்பட்டனர். சுமார் ஆறடி நீளமுள்ள ஒரு கம்பின் முனையில் சிறு உண்டிப் பை ஒன்று தொங்கிற்று. அவர்கள் நடைபாதை வழியே சென்று, இரு புறங்களிலும் உள்ள மக்களிடம் கம்பை நீட்டினர்கள். கம்பின் முனையில் இருந்த உண்டிப் பையில் மக்கள் காணிக்கைத் தொகைகளை வழங்கினர். என்னிடம் வந்தபொழுது என் கையிலிருந்த மூன்று வெள்ளிக் காசு நாணயங்களையும் உண்டிப் பையிலிட்டேன். சிறிது நேரத்துக்குப்பின், வேறு சில ஊழியர்கள் மீண்டும் ஒரு முறை உண்டிப் பை கொண்டு வந்தனர். வால்ட் கொடுத்த காசுகள் முழுவதையும் முதலாவது உண்டிப் பையிலிட்டு விட்டதால் என்னிடம் காசுகள் இல்லை. பின்னும் சிறிதுநேரம் கழித்து, வேறு சில ஊழியர்கள், மூன்ருவது முறையாக உண்டிப் பை கொண்டு வந்தனர். கையில் காசில்லாததனல், மீண்டும் வழங்க இயலாமலிருந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் சுமார் பத்துப் பெண்கள், தங்கள் கணவன்மார் அல்லது உறவினர்களுடனும் கைக்குழந்தைகளுடனும் பெரிய மேடைக்கு வந்தனர். பாதிரியாரும் தமது பரிவாரங்களுடன் அங்கு வந்தார். அன்று அந்தக் குழந்தைகளுக்குப் பெயரிட்டனர். அச் சடங்குகள் சுமார் அரை மணி நேரம் நடைபெற்றன. பாதிரியார், குழந்தைகள் மீது 'தீர்த்தம்' தெளித்து, பெயரிட்டு ஆசீர்வதித்தார். சில குழந்தைகள் அழத்



டென் ஹாக் - விமானத் தோற்றம்

தொடங்கின. சடங்குகள் முடிந்ததும் பாதிரியாரைத் தவிர, மற்ற அனைவரும், மேடையிலிருந்து சென்று விட்டனர். பிரார்த்தனை முடிந்ததும் வெளியே வந்தோம்.

"எல்லாக் காசுகளையும் ஒரே பையில் போட்டுவிட்டீர்கள்போலத் தெரிகிறது" என்றார் வால்ட், சிரித்துக் கொண்டே.

"எல்லாப் பணமும் மாதாகோயிலைச் சேரவேண்டியதுதானே?" என்றேன்.

"மூன்று முறை மக்கள் காணிக்கை வழங்கினார்கள் அல்லவா? ஒவ்வொரு பையும் வெவ்வேறு நிறம்; ஒவ்வொன்றும் வெவ்வேறு காரணங்களுக்காக. ஒவ்வொரு பையிலும் ஒவ்வொரு நாணயமாக நீங்கள் போடுவீர்கள் என்று நான் நினைத்ததால் உங்களுக்கு முன்கூட்டியே இதைச் சொல்ல மறந்துவிட்டேன். முதலாவது காணிக்கை, நாம் உட்காரும் ஆசனத்துக்காக; இரண்டாவது காணிக்கை மாதாகோயில் நடைமுறைச் செலவுக்கு; மூன்றாவது காணிக்கை மாதாகோயில் நடத்தும் தர்மப் பள்ளிக்கூடம் ஒன்றுக்கு" என்றார் வால்ட்.

பின்னர் வீட்டுக்குச் சென்றோம். அன்று எல்லாக் குழந்தைகளும் எங்களுடன் சாப்பிட்டனர். குழந்தை சூஸானும் நானும் நண்பர்களானோம். எங்கள் நட்புக்கு மொழி குறுக்கே நிற்கவில்லை. சூஸானின் பெற்றோர் என்னைக் 'கறுப்பன்' என்று கூப்பிடுவார்கள். சூஸானுக்கு அவ்வாறு கூப்பிடத் தெரியவில்லை. 'ருப்பன்' என்று என்னைக் கூப்பிடுவாள்.

"ஆங்கிலத்தில் 'அங்கிள்' (uncle) என்பதை உங்கள் நாட்டில் எப்படிச் சொல்லுவீர்கள்?" என்றார் வால்ட்.

"அம்மான், மாமா, காகா போன்ற வார்த்தைகள் உண்டு" என்றேன்.

காகா என்று நான் சொன்னதுதான் தாமதம், சூஸான் உடனே, "காகா நேய் ட்டுப்பூ" என்று உரக்கச் சொல்லி கைகொட்டிச் சிரித்தாள். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"காகா என்றால் டச்சு மொழியில் 'கேக்' என்று அர்த்தம். நீங்கள் காகா என்று சொன்னதும், 'கேக்' கொடுக்கப் போகிறீர்கள் என்று நினைத்தாள் சூஸான். அவளுக்குக் கேக் பிடிக்காது. எனவே 'காகா நேய் ட்டுப்பூ' என்றாள். நேய் என்றால் இல்லை—வேண்டாம் என்று அர்த்தம். 'ட்டுப்பு' என்றால் மிட்டாய் என்பது பொருள்" என்றார் மாச்செல்டு.

அதுமுதல் சூஸான் என்னைப் பார்த்தபொழுதெல்லாம், "காகா நேய் ட்டுப்பு" என்றாள்.

அன்று மாலையில், வால்ட்டின் தகப்பனாரைப் பார்ப்பதற்காக அனைவரும் சென்றோம். அவர், ரோட்டர்டாமிலிருந்து முப்பது மைல் தூரத்திலுள்ள முதியோர் விடுதியொன்றில் வசித்துவந்தார். அவருக்கு அப்பொழுது வயது எழுபது. நன்றாக ஆங்கிலம் பேசினார். பதினான்கு ஆண்டுகளுக்குமுன் ஹாலந்து சென்றபொழுது டென் ஹாக் நகரில் அவருடன் தங்கியிருந்தேன். அப்பொழுது அவருடைய மனைவி உயிருடன் இருந்தார்.

"இம்மாதிரியான முதியோர் விடுதிகள் இந்நாட்டில் பல உண்டு. அவை தனிப்பட்டவர்களால் வியாபார முறையில் நடத்தப்பெறுகின்றன. விடுதியின் அளவுக்குத் தக்கபடி, தங்குவோரின் எண்ணிக்கை இருக்கும். ஒவ்வொருவருக்கும் தனி அறை, கட்டில் மெத்தை

முதலியன உண்டு. நல்ல உணவு அளிக்கின்றனர். விடுதியில், அனைவரும் சாப்பிடுவதற்கும், பொழுது போக்குவதற்கும் பொதுவான இடம் உண்டு. இந்த விடுதிகளில் தங்குவோர் அனைவரும் கிழவர்களும் கிழவிகளுமே" என்றார் வால்ட்.

"வயதுமுதிர்ந்த தந்தையை, அவருடைய கடைசிக் காலத்தில் ஏன் வீட்டில் வைத்துக்கொண்டு கவனிக்கக் கூடாது?" என்று கேட்டேன்.

"முதலாவது எங்கள் வீட்டில் போதிய இடமில்லை. இரண்டாவது எனது மனைவிக்குக் குழந்தைகளைக் கவனிப்பதற்கே நேரமில்லை. அன்றியும் வயதுமுதிர்ந்தவர்களுக்குப் பணிவிடைசெய்து, அவர்களைத் திருப்திப் படுத்துவது கஷ்டம். சில சமயங்களில் அவர்களைக் கவனிக்க இயலாதுபோய்விட்டால், அவர்களுக்கு வருத்தமும், மனக்கசப்பும் உண்டாகும். எனது தகப்பனாருக்குப் போதுமான ஓய்வுகாலச் சம்பளம் (Pension) கிடைக்கிறது. அவருக்குத் தனியாக ஒரு டெலிபோன் ஏற்பாடு செய்திருக்கிறேன். அடிக்கடி டெலிபோனில் பேசுவார். அவருக்கு வேண்டிய பொருள்களை வாங்கியனுப்புவேன். நாங்களும் மாதத்திற்கு ஒரு முறை அல்லது இரு முறை குடும்பத்துடன் சென்று அவரைப் பார்ப்போம். இதனால் எங்களுக்கும் மகிழ்ச்சி; அவருக்கும் மகிழ்ச்சி" என்றார் வால்ட்.

வால்ட்டின் தந்தையையும் அழைத்துக்கொண்டு, அருகிலிருந்த கடற்கரைக்குச் சென்றோம். ஞாயிற்றுக் கிழமையானதால் அங்கே ஏராளமான மக்கள் வந்திருந்தனர்.

"முதியோர் விடுதியில் சந்தோஷமாகக் காலங் கழிக்கிறேன். நல்ல புத்தகங்களைப் படிக்கிறேன். ஆண்

டவனை அடிக்கடி தியானம் செய்கிறேன். எனது பேர னுக்குத் தபால் ஸ்டாம்புகள் சேர்த்துவருகிறேன்" என்றார் வால்ட்டின் தந்தை. திரும்பும் வழியில் அவரை முதியோர் விடுதியில் இறக்கிவிட்டோம்.

* * *

பாதிரியார் மனைவியும், மாச்செல்டும் நெருங்கிய நண்பர்கள். மறுநாள் இரவு எட்டு மணிக்கு அவர்கள் வீட்டுக்கு என்னை அழைத்துவரும்படி பாதிரியாரின் மனைவி மாச்செல்டுக்கு டெலிபோன் செய்தார். அதன் படியே மாச்செல்டும், வால்ட்டும், நானும் பாதிரியார் வீட்டுக்குச் சென்றோம்.

பாதிரியார் குடும்பத்தினர் ஒரு வீட்டு மாடியில் வசித் தனர். சிறிய இடம்; ஆனால் வசதியாக இருந்தது. பாதிரி யார் மனைவிக்குச் சுமாரான ஆங்கிலம் தெரியும். அவர் களுக்கு ஒரே பையன்; அவனைப் படுத்துறங்குவதற்கு அனுப்பி விட்டனர். பாதிரியாருக்கு ஆங்கிலம் தெரியாது; அவர் பேசியதை வால்ட் மொழிபெயர்த்தார்.

இந்தியாவில் ஜாதி வித்தியாசத்தைக் குறித்தும், தீண்டாமையைக் குறித்தும் குறிப்பாகக் கேட்டார்.

" அந்தத் தீமைகள் மிகவும் குறைந்து வருகின்றன. அவை ஒன்றிரண்டு தலைமுறைகளில் அடியோடு மறைந்துவிடும் " என்றேன்.

இந்தியர்களின் பழக்க வழக்கங்கள், கண்ணைக் கவரும் சேலைகள், அற்புதமான சிற்பங்கள் முதலியவற் றைப்பற்றி யெல்லாம் அதிகமாகத் தெரிந்துகொள்ள விரும்பினார் பாதிரியாரின் மனைவி.

சிறிது நேரத்திற்குப் பிறகு, பாதிரியாரின் மனைவி யும், மாச்செல்டும் சமையல் அறைக்குள் சென்று, சில

நிமிஷங்களில், சீர்கொண்டு வருவதுபோல, பலகார வகைகளைப் பெரிய தட்டுக்களில் வைத்து வரிசையாகக் கொண்டுவந்தனர். சூடான காப்பியும் கொண்டு வந்தனர்.

இந்தியப் பெண்கள் அரசியலிலும், சமூக நலச் சேவைகளிலும் எத்தகைய பங்கு கொண்டுள்ளார்கள் என்று அறிய விரும்பினர் பாதிரியார் மனைவி.

"பகவத் கீதை படித்திருக்கிறேன். இந்து சமயத்தில் சைவம், வைஷ்ணவம் என்ற பிரிவுகள் உண்டு. சிவா, பார்வதி முதலிய தெய்வங்களைப்பற்றியும் படித்திருக்கிறேன். இந்து மதம் மிகப் பழைமையானது. பாதிரிகளைப் பயிற்றுவிக்கும் பாடசாலைகளில் மற்ற மதங்களைப்பற்றியும் சொல்லித்தருகிறார்கள்" என்றார் பாதிரியார்.

உடனே, "இந்தியாவில் கிறிஸ்துவ மதம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"வெள்ளைக்காரர்கள் முதலில் பாதிரிகளை அனுப்புவார்கள், பின்னர் சிப்பாய்களை அனுப்புவார்கள் என்ற எண்ணம் ஆசிய மக்களின் மனத்தில் வேரூன்றி இருக்கிறது. இந்தியாவில் கிறிஸ்துவ மதப் பிரசாரகர்களில் பெரும்பாலோர், தங்கள் மதத்தைப்பற்றிப் பிரசாரம் செய்வதைவிட, மற்ற மதங்களைப்பற்றி அறிந்து கொள்ளாமலோ அல்லது வேண்டுமென்றோ தவருகவும் இழிவாகவும் பிரசாரம் செய்கிறார்கள். இதனல் கிறிஸ்துவ சமயத்துக்குப் பெருமை இல்லை. வேதாந்த விஷயங்களில் உலகிலேயே தலைசிறந்து விளங்கும் நாடு இந்தியா. இந்த விஷயத்தில் இந்தியர்களை 'அஞ்ஞானிகள்' என்று கருதுவதைப் போன்ற அஞ்ஞானம் வேருென்றுமில்லை" என்றேன்.

காந்தியடிகளைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்பி னார் பாதிரியார்.

“ காந்தியடிகள் சமரச மனப்பான்மை உடையவர் ; யாரிடமும் துவேஷம் இல்லாதவர். அவருடைய பிரார்த் தனைக் கூட்டங்களுக்கு, எல்லா மதங்களையும் சேர்ந்த லட்சக்கணக்கான மக்கள் திரண்டு வந்தனர். பிரார்த் தனையின்போது விவிலிய நூல், குர் ஆன், பகவத்கீதை முதலிய பல சமய நூல்களிலிருந்து சில பகுதிகளை ஓது வது வழக்கம் ” என்றேன்.

மாதாகோயிலுக்கும், பின்னர் அவர் வீட்டுக்கும் நான் சென்றதில் பாதிரியாருக்குப் பெரு மகிழ்ச்சி. அவர் கிறிஸ்துவ மார்க்கத்தைக் கடைப்பிடிக்க முயன்ற நல்ல கிறிஸ்துவர். பிற மதங்களின்மேல் துவேஷம் இல்லாதவர் என்று அவர் பேச்சிலிருந்து தெரிந்தது. அவருடைய மனைவிக்கு உலக விஷயங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் அதிகம். மத விஷ யத்தில் அவருக்கு அதிகமான பற்றுக் கிடையாது என்று மாச்செல்டு கூறினார்.

* * *

ஹாலந்தின் பெரிய நகரம் ஆம்ஸ்டர்டாம். அதன் ஜனத்தொகை சுமார் பத்து லட்சம். ரோட்டர்டாமி லிருந்து ஆம்ஸ்டர்டாமுக்கு அடிக்கடி ரயில் வண்டிகள் சென்றன. மூன்ருவது வகுப்பு மிகச் சௌகரியமாக இருந்தது. முக்கால் மணி நேரத்தில் ஆம்ஸ்டர்டாம் போய்ச் சேர்ந்தேன்.

கையில் வைத்திருந்த சிறு பெட்டியை ரயில் நிலையத்தில், அதற்கென உள்ள இடத்தில் பத்திரமாக வைத்துவிட்டு, டிராம் வண்டியில் ஏறி ஊர் சுற்றிப் பார்த்தேன்.

"நீங்கள் எந்தெந்த இடங்களைப் பார்க்கவேண்டும்" என்று அன்புடன் கேட்டார் டிராம் வண்டியில் பிரயாணச் சீட்டு வழங்குபவர்.

"இந்த அழகான நகரத்தைச் சுற்றிப் பார்க்க விரும்புகிறேன்" என்றேன்.

"ஒவ்வொரு முறையும் நீங்கள் பிரயாணச்சீட்டு வாங்கினால் கட்டணம் அதிகமாகும். நாங்கள் தனிச்சீட்டு ஒன்று வைத்திருக்கிறோம். அதைக்கொண்டு நீங்கள் எங்கு வேண்டுமானாலும் ஐந்து முறை பிரயாணம் செய்யலாம்; ஆனால் அது வாங்கிய தினத்துக்குமட்டுந்தான் செல்லும். அதன் விலை, நான்கு பிரயாணச் சீட்டுகளுக்குள்ள கட்டணத்தைக் காட்டிலும் மிகக் குறைவு" என்றார். அவர் கூறிய யோசனைப்படி தனிச்சீட்டு ஒன்று வாங்கினேன்.

ஆம்ஸ்டர்டாம் நகரம் யுத்தத்தால் சேதமடையவில்லை; ஆனால் யுத்தத்திற்குப்பின் எல்லா நகரங்களையும் போல ஜனத்தொகை பெருத்துவிட்டது.

நகரின் தனிச் சிறப்பு, நடுவீதியில் உள்ள கால்வாய்களாகும். அவற்றின் அகலம் குறைவு. இருபுறங்களிலும் சாலைகள்; அவற்றைக் கடந்து செல்ல ஆங்காங்கே நூற்றுக்கணக்கான பாலங்கள் அமைத்திருந்தனர். பெரிய கால்வாய்களில் சிறு கப்பல்கள் சென்றன. சிறிய கால்வாய்களில் படகுகள் சென்றன.

பிரதான வீதியில் பிரபலமான உணவுச்சாலைகள் பல இருந்தன; சீன உணவுச்சாலைகளும் ஏராளம். அவை சிறு வீதிகளிலும், சந்துக்களிலும் இருந்தன. அங்கே சீன உணவும், இந்தோனேஷ்ய உணவும்

கிடைத்தன. மத்திய வகுப்பினரும், மாணவர்களும் அங்கு சென்றனர். அங்கே உணவின் விலை மலிவு.

கடைத் தெருவைச் சுற்றிவந்தபொழுது, ஒரு கடையில், பிளாஸ்டரில் செய்த பொருள்களைக் கண்டேன். அவற்றில் ஒன்று காந்தி மகானின் புன்முறுவல் பூத்த திருமுகம் !

ஆம்ஸ்டர்டாம் நகரில் முக்கியமாகப் பார்க்கவேண்டியது ஒன்றிருக்குமானால், அது அங்குள்ள அற்புதமான பொருட்காட்சிச்சாலைதான்.

டச்சுக்காரர்கள் புகழ்பெற்ற ஓவியர்கள். அந்த நாட்டின் தலைசிறந்த ஓவியர்களின் நேர்த்தியான சித்திரங்களைப் பொருட்காட்சியில் வைத்திருந்தனர். அற்புதமான வர்ணங்கள் — உயிருள்ள ஓவியங்கள். அவற்றைக் காட்சியில் வைத்திருந்த முறையே கலைத் திறனுடையது, கைபழகும் ஓவியர் சிலர் அங்கேவந்து தங்களுக்குப் பிரியமான ஓவியங்களைப் பார்த்து, அதன் படியே வரைந்தனர். டச்சுக்காரரின் நாகரிகத்தையும், கலைப் பண்பையும் விளக்கும் பலவிதமான பொருள்கள் அழகாக வைக்கப்பெற்றிருந்தன.

மற்ற நாடுகளில் இருந்து சேகரித்த கலைப்பொருள்களும் ஏராளம். அவற்றில் ஒன்று இந்தியாவில் இருந்து வந்த, செம்பினால்செய்த பெரிய நடராஜப் பெருமான் விக்கிரகம்.

அன்று மாலையில் வயது முதிர்ந்த அம்மையார் ஒருவரைச் சந்தித்தேன். அவர் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர், சென்னை, அடையாறு பிரம்மஞான சங்கத்தில் சிறிது காலம் தங்கியிருந்ததாகக் கூறினார்.

அம்மையார் தம்முடன் வசித்துவந்த ஒரு பெண்ணை அறிமுகப்படுத்தினார். அந்தப் பெண் ஒரு பள்ளி ஆசிரியை. சித்திரம் வரைவதில் மிக்கத் தேர்ச்சி பெற்றவர். பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதிவந்தார். கையில் காசில்லாமல் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்ததாக அவர் கூறினார். அவற்றில் ஒன்று இந்தியா.

அன்றிரவு ஒரு ஹோட்டலில் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு ரயில் நிலையத்திற்குச் சென்று எனது பெட்டியை எடுத்துவந்தேன். ஹோட்டலில் உள்ள அறைகள் பலவிதம். அறையின் அளவுக்குத் தக்கவாறும், வசதிக்குத் தக்கவாறும் வாடகை அதிகம். கையில் பெட்டியுடன் நாம் ஒரு ஹோட்டலுக்குச் சென்றால், அங்கே அதிகப்படியான வாடகையுள்ள அறை எதுவோ, அதைத்தான் நமக்குக் கொடுப்பார்கள். நாம் பெட்டியைத் தூக்கிக்கொண்டு மற்ற இடங்களுக்கு அலைய மனமில்லாமல் கேட்ட வாடகையைக் கொடுக்க நேரிடும். கையில் பெட்டியில்லாவிட்டால், நாம் எவ்வளவு பணம் செலவுசெய்ய இயலுமோ, அதற்குத் தக்க இடவசதி உண்டா என்று கேட்கலாம். அவ்வாறு அங்கு இடமில்லாவிட்டால், வேறு ஹோட்டலுக்குச் செல்லலாம்.

இரவுச் சாப்பாட்டுக்குப்பின்னர் ஊர் சுற்றிப் பார்த்தேன். அங்கு குடியும் களியாட்டமும் மிக அதிகம்.

சிறு கடையொன்றில் 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகை வாங்கினேன். அது ஆம்ஸ்டர்டாமில் அச்சிடப் பெற்றது. ஆம்ஸ்டர்டாம் நகரில் 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகை வெளியாயிற்று என்றால் ஆச்சரியப்படுவீர்கள். ஆனால் அது உண்மை. 'நியூயார்க் டைம்ஸ்'

பத்திரிகையின் ஐரோப்பியப் பதிப்பு, ஆம்ஸ்டர்டாமில் அச்சாகி வெளிவந்தது.

ஆம்ஸ்டர்டாமில் ஏராளமான திரைப்படக் காட்சிச் சாலைகள் இருந்தன. ஹாலந்துக்கு டெலிவிஷனும் வந்து விட்டது. வாரத்தில் இரண்டு நாட்கள் டெலிவிஷன் நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

ஆம்ஸ்டர்டாமில் ஓர் அச்சுவார்ப்புச் சாலை (Type Foundry)க்குச் சென்றேன். அதன் நிர்வாகிக்கு எனது வருகையைக் குறித்து வால்ட் ஏற்கெனவே டெலிபோன் செய்திருந்தார். வால்ட்டும் அவரும் பள்ளித்தோழர்கள். நிர்வாகி என்னை அன்புடன் வரவேற்று உபசரித்தார். முக்கிய அதிகாரி ஒருவரை என்னுடன் அனுப்பி வார்ப்புச்சாலையைச் சுற்றிக் காட்டும்படி கூறினார். வார்ப்புச்சாலை, நான்குமாடிக் கட்டிடம். ஒரு மணி நேரத்திற்கு மேலாக அதனைச் சுற்றிப் பார்த்தேன். அங்கே பல மொழிகளில் அச்சு வார்த்தார்கள். அவற்றில் ஒன்று சீனம்.

நான் அணிந்திருந்த ஜோடுகளில் ஒன்று பழுதாகி விட்டது. பெரிய கடைகளுக்குச் சென்றால் பழுதுபார்க்கும் செலவு, ஜோடின் விலையில் பாதி ஆகிவிடும். ஒரு சந்திலே இருந்த சிறு கடைக்குச் சென்றேன். அங்கு ஒருவர்தான் இருந்தார். கால் மணி நேரத்திற்குள்ளாக எனது ஜோடைப் பழுதுபார்த்தார். அதற்காக அவர் என்னிடம் பெற்றுக்கொண்டது ஐம்பது காசு தான். அது மிகவும் சொற்பமான தொகை. நான் ஓர் அந்நியன் என்பதும், எனக்கு டச்சு மொழி தெரியாது என்பதும் அவருக்கு நன்றாகத் தெரியும். அப்படியிருந்த போதிலும் அதனை அவர் தமக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக்கொள்ளவில்லை.

தலைநகரான டென்ஹாக் நகரத்துக்கு ரயிலில் சென்றேன். அங்கிருந்த இந்தியத் தூதர் காரியாலயத்திற்குச் சென்று, இந்தியப் பத்திரிகைகளை—குறிப்பாகச் சென்னைப் பத்திரிகைகளைப் படித்தேன்.

அந்நகரில் உள்ள முக்கியமான, பெரிய கட்டிடங்களில் ஒன்று சர்வ தேச நீதி மன்றம்.

அந்த ஆண்டில் டச்சுப் பத்திரிகைகளில் வெளியான சிறந்த புகைப்படங்களின் கண்காட்சியொன்று பார்லிமெண்டுக் கட்டிடத்தில் திறக்கப்பெற்றதாக ஒரு டச்சு நண்பர் கூறினர். கண்காட்சி திறக்கப்பெற்ற மறுநாள் காலையில் பார்லிமெண்டுக் கட்டிடத்திற்குச் சென்றேன். பின்புறவாயில் வழியாக மேல்மாடிக்கு ஏறிச் சென்றேன். பிறகு கீழே இறங்கினேன். அங்கு யாருமே இல்லை. இன்னும் கீழே இறங்கி, பூமி மட்டத்திற்குக் கீழுள்ள கட்டிடப் பகுதிக்குச் சென்றேன். அங்கே வயது முதிர்ந்த ஒரு வேலைக்காரி அந்த இடத்தைச் சுத்தம் செய்துகொண்டிருந்தாள்.

"கண்காட்சி எங்கே?" என்று கேட்டேன்.

அவளுக்குத் தெரிந்த ஆங்கில வார்த்தைகள் மிகச் சொற்பம். "கண்காட்சி ஒரே நாள் மட்டும்தான் நடந்தது. நீங்கள் ஒரு நாள் தாமதித்து வந்ததற்கு வருந்துகிறேன்" என்று அரைகுறையான ஆங்கிலத்தில் கூறி, படங்கள் மாட்டியிருந்த இடத்தையெல்லாம் காண்பித்தாள்.

நான் ஓர் இந்தியன் என்று அறிந்ததும், அவள் "மை—டாட்டர்மான் — ஷிப் — இ ந் தி யா" என்ருள். அதாவது அவளுடைய மருமகன் கப்பலில் வேலை செய்கிருன். அந்தக் கப்பல் இந்தியாவுக்குச் செல்வ

துண்டு என்று அர்த்தம். அம்மாதிரிச் சம்பாஷணை களில் எனக்குச் சிறிதளவு தேர்ச்சி யிருந்ததால், அதனைச் சுலபமாகப் புரிந்துகொண்டேன்.

ஹாலந்தில் ஏராளமான காற்றுடி இயந்திரங்களைப் (Wind Mills) பார்த்தேன். பெரிய மாடிக் கட்டிடம் ஒன்று கட்டி, அதன்மீது பெரிய காற்றுடி இயந்திரங்களை அமைத்திருந்தார்கள். இயற்கையான காற்றினால் காற்றுடி சுழன்றபோது அதன் சக்தியைப் பயன்படுத்தி இயந்திரங்களை இயக்கி, மா அரைத்தார்கள். அதனால் கிடைத்த வருவாய் ஒரு சிறு குடும்பத்திற்குப் போது மானது என்று அறிந்தேன். அந்தக் கட்டிடங்களின் அடிப்பாகத்திலேயே குடும்பத்தினர் வசித்தனர். காற்றுடி இயந்திரங்களில் பல ரகங்கள் இருந்தன.

மீண்டும் ரோட்டர்டாம் வந்து சேர்ந்தேன். ஒரு நாள் இரவு, சாப்பாட்டுக்குப் பின்னர் வால்ட்டும் நானும் உரையாடினோம்.

“நாம் சமுத்திர மட்டத்திலிருந்து பத்தடி கீழே இருக்கிறோம் என்பது உங்களுக்குத் தெரியுமா?” என்றார் வால்ட்.

எனக்கு அது ஆச்சரியமாக இருந்தது. ஹாலந்து தேசத்தில் ஐந்தில் ஒரு பகுதி சமுத்திர மட்டத்துக்குக் கீழே உள்ளது என்று படித்திருக்கிறேன். ஆனால் மேல் மாடியிலிருந்து பத்தடி கீழே இருக்கிறோம் என்று வால்ட் கூறியது எனக்கு அதிசயமாக இருந்தது.

“டச்சுக்காரர் தம் வாழ்க்கை முழுவதும் கடலோடு போராடுகிறவர்கள். கடல் விழுங்கிய சில பிரதேசங்களை நாங்கள் எவ்வாறு போராடி மீட்டோம் என்பதை நீங்கள்

நேரே பார்க்கலாம். உங்களை அங்கு கூட்டிக்கொண்டு போகிறேன்" என்றார் வால்ட்.

அவர் கூறியதுபோலவே, மறுநாள் என்னை அழைத்துச் சென்றார். கடலோரமாகப் பிரயாணம் செய்தோம். கடலோர முழுவதும் சுமார் முப்பது அடி உயரமுள்ள இயற்கையான பெரிய மணல் திட்டு அமைந்திருந்தது. கடல் பெருக்கினின்றும் அதுதான் நாட்டைக் காப்பாற்றி வந்தது. பெரிய மணல் திட்டுக்குப் பின்புறத்தில் இரண்டாவது வரிசையில் மற்றுமொரு மணல் திட்டை அமைத்திருந்தனர். கடல் நீர் பொங்கி உள்ளே வராதபடி கண்ணும் கருத்துமாகக் கவனித்துவந்தனர். சில மணி நேரத்தில் அணைக்கரையை அடைந்தோம். அதனைப் பெருமையுடன் காட்டினார் வால்ட்.

சூடர் சீ என்ற பகுதி ஒரு காலத்தில் ஏரிகளாக இருந்ததாம். பின்னர் கடல் பெருகி வந்திருக்கவேண்டும் என்று ஊகித்தனர். வடக்கு ஹாலந்தில் பல ஏரிகள் இருந்தன. தண்ணீர் முழுவதையும் இறைத்துவிட்டு, அவற்றை மீண்டும் நிலமாக்கினர். 1918ஆம் ஆண்டில் டாக்டர் ஐ. ஆர். லெலி என்ற சிறந்த டச்சு என்ஜினியர் சூடர் சீ கடல் அணை கட்டுவதற்குத் திட்டம் தயாரித்தார். அதனை அந்த நாட்டின் இரு சட்டசபைகளும் அங்கீகரித்தன. சூடர் சீ பகுதியை ஐந்து பிரிவுகளாக வகுத்தனர். ஒவ்வொரு பிரிவும் லட்சம் ஏகராவுக்குமேல் பரப்பு உள்ளவை. தண்ணீரை இறைத்துக் கடலில் கொட்டுவதற்குமுன், கடலுக்கும் சூடர் சீ பகுதிக்குமிடையே கடலில் ஓர் அணை கட்டினர். அதன் நீளம் இருபது மைல். அணையைக் கட்டுவதற்காக, முதல் முதலாக, கடலில் பாதி தூரத்தில் ஒரு செயற்கைத் தீவை உண்டாக்கினார்கள். அணை கட்டுவதற்கு வேண்டிய சாமான்களையெல்லாம் அங்கு கொண்டு

போய்ச் சேர்த்தார்கள். சிறிதுமுதல் பெரிதுவரை பல ரகமான ஐந்நூறு கப்பல்கள் அந்த வேலையில் பங்கு கொண்டன. கடலில் சில இடங்களில் கீழே மணல் இருந்தது. அந்த மாதிரியான இடங்களில், இயந்திரங்களைக் கொண்டு மணலை வாரி நேரடியாக அணையில் சேர்த்தனர். மற்ற இடங்களில் கப்பல் கப்பலாக மணல், களிமண், கல் முதலியவற்றைக் கொண்டுபோய்ப் போட்டனர். அணையை 1932ஆம் ஆண்டில் கட்டி முடித்தனர்.

அணையின் அகலம் முந்நூறு அடி. அதன்மீது நல்ல சாலைகள் அமைத்திருந்தார்கள். டச்சுக்காரர் வழக்கப்படி மோட்டார்களுக்காக ஒரு சாலையும், சைக்கிள் வண்டிகளுக்காக ஒரு சாலையும், மக்கள் நடப்பதற்காக ஒரு சாலையும் அமைத்திருந்தனர். அதோடு, இரட்டை ரயில் பாதை அமைப்பதற்கு வேண்டிய இடமும் ஒதுக்கியிருந்தனர். அணையின் மத்தியில் ஒரு பெரிய கோபுரம் இருந்தது. வால்ட்டும் நானும் அதன் உச்சிக்கு ஏறிச் சென்று, அணைக்கட்டின் அழகிய தோற்றத்தைக் கண்டு களித்தோம்.

சூடர் சீ ஐந்து பகுதிகளில், இரண்டு பகுதிகளில் வேலை பூர்த்தியாகிவிட்டது. ஒரு பகுதியில் வேலை நடந்துவந்தது. மற்றும் இரண்டு பகுதிகள் பாக்கியிருந்தன. என்ஜினியர் லெலி பேரால் அமைத்திருந்த நிலையத்தில் மூன்று பம்புகள் நிமிஷத்திற்கு இரண்டரை லட்சம் காலன் தண்ணீரை வெளியே இறைத்தன. அந்த வேலைகள் பூர்த்தியானால், நாட்டின் விளைநிலத்தில் பத்து சதம் அதிகமாகும். நாட்டின் நிலப்பரப்பில் ஏழு சதம் அதிகமாகும்.

ஹாலந்தின் ஜனத்தொகை ஒரு கோடியே பத்து லட்சம் ; நிலப் பரப்பு சுமார் பதின்மூவாயிரம் சதுரமைல்.

சதுரமைலுக்குச் சராசரி எண்ணூற்று முப்பது பேர் வசித்தனர். அங்கு நிலக்கரி, உப்பு, சிறிது எண்ணெய் தவிர வேறு ஒன்றும் கிடையாது. எத்தனையோ இளைஞர்களுக்கு விவசாயம் செய்ய ஆசை. ஆனால் நிலமில்லை. ஹாலந்திலிருந்து வெளி நாடுகளில் குடியேறியவர் அதிகம். அவ்வாறு குடியேறியவர்களுக்கு அரசாங்கம் கப்பல் செலவும் கொடுத்து, பண உதவியும் செய்தது. கானடாவில்மட்டும் மூன்றுலட்சம் பேர் குடியேறியதாகக் கேள்விப்பட்டேன். என்றாலும் மக்கள் தொகையைச் சமாளிக்க முடியவில்லை. எனவே அணையைக்கட்டி, கடல்கொண்ட பகுதிகளை மீட்கும் வேலையில் அரசாங்கம் இறங்கிற்று. அந்த அணையைக் குறித்து அந்த நாட்டு மக்கள் பெருமையடைகின்றனர்.

நீரை இறைத்து நிலமாக்கிய பகுதியை போல்டர் என்று அழைத்தனர். அத்தகைய போல்டர் ஒன்றுக்கு வால்ட் என்னை அழைத்துச் சென்றார். மைல் கணக்காகப் பிரயாணம் செய்தோம். புதிய வீடுகள், மாதா கோயில்கள், பள்ளிக்கூடங்கள், வியாபார நிலையங்கள், விவசாயப் பண்ணைகள் முதலியவற்றைக் கண்டோம். அந்த இடமெல்லாம் சில ஆண்டுகளுக்கு முன்னே கடலாக இருந்தது என்பதை நினைத்தபொழுது, அது நம்பமுடியாத அதிசயமாக இருந்தது.

* * *

ஹாலந்தில் ஒரு முறை பிரயாணம் செய்துகொண்டிருந்தபொழுது, “அருகில் ஒரு கிராமம் இருக்கிறது. அதை நீங்கள் பார்க்கவேண்டும். ஆனால் ஓர் எச்சரிக்கை. அங்கே நீங்கள் பார்ப்பது இந்த நாட்டின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பது அன்று” என்று கூறி கடற்கரையோரத்திலிருந்த சிறு கிராமம் ஒன்றுக்கு என்னை அழைத்துச் சென்றார் வால்ட்.

அங்கே இருந்த மக்களில் சிலர் மரத்தால் செய்யப் பெற்ற ஜோடு அணிந்திருந்தனர். பண்டைக்காலத்து முறையில் சிலர் ஆடை அணிந்திருந்தனர். இரண்டு அல்லது மூன்று புகைப்பட ஸ்டுடியோக்கள் இருந்தன. அவற்றைப்பற்றி விசாரித்தேன்.

"எத்தனையோ நூற்றுண்டுகளுக்கு முன்னர், இவ் வாறு மரத்தால் செய்த ஜோடு அணிந்திருந்தார்களாம். அமெரிக்க யாத்திரிகர்களுக்கு இம்மாதிரியான விஷயங் களில் கவர்ச்சி அதிகம். இதனைப் பார்ப்பதற்காகவே ஏராளமான அமெரிக்கர்கள் இங்கு வருகிறூர்கள். கிராமத்து மக்கள், பண்டைக்கால உடைகளை யும், மரஜோடுகளையும் அமெரிக்கர்களுக்கு வாடகைக் குக் கொடுப்பார்கள். அவர்கள் அவற்றை அணிந்து கொண்டு, படம் பிடித்துக்கொள்வார்கள். படம் பிடிப்ப வர்களுக்கு நல்ல வருமானம். இந்தக் கிராமத்தைத் தவிர வேறு எங்கும் மரஜோடுகளைப் பார்க்கமாட்டீர்கள். இவர்களுக்கு இதே தொழில்; நல்ல வருவாய்" என்றூர் வால்ட்.

அன்றிரவு குரோனிங்கன் என்ற பட்டணத்தில் தங்கினேம். செல்லும் வழியில் பாலடைக்கட்டித் தொழிற்சாலையொன்றுக்கு அழைத்துச் சென்றூர் வால்ட்.

மறுநாள் வேறு பாதை வழியாக ரோட்டர்டாம் சேர்ந்தோம். பாதை சில இடங்களில் மிகவும் கரடு முரடாக இருந்தது. அவ்வழி சென்றபொழுது, புதிதாக உருவாகி வந்த போல்டர் ஒன்றைப் பார்த்தேன். வழியில் சிறு ஆறு ஒன்றில், இரு சிறிய கப்பல்கள் நின்றன.

"இந்தோனேஷ்ய அரசாங்கத்துக்காக டச்சுக்காரர் கட்டின கப்பல்கள் இவை. மொத்தம் முப்பத்தாறு

கப்பல்கள் கட்டுமாறு இந்தோனேஷ்ய அரசாங்கம் கூறியுள்ளது. கப்பல்கள் கட்டுவதற்கு என்ன செலவாகும் என்ற விவரத்தைத் தெரிவிக்குமாறு பல நாடுகளிலுள்ள கப்பல்கட்டும் கம்பெனிகளை இந்தோனேஷ்ய அரசாங்கம் கேட்டது. டச்சுக்காரர் ஒருவர் இதற்காகவே ஜெர்மனியில் ஹாம்பர்க் நகரில் ஒரு கம்பெனியை ஆரம்பித்து, விலை விவரங்களை இந்தோனேஷ்ய அரசாங்கத்துக்கு அனுப்பினர். எல்லா நாடுகளிலுமிருந்து கிடைத்த விலையைவிட, இவர் குறிப்பிட்டிருந்த விலை மிகக் குறைவு. எனவே இவருக்கு ஒப்பந்தம் கிடைத்தது. ஒப்பந்தம் கையெழுத்தாகு முன்னர், தாம் டச்சுக்காரர் என்றும், ஹாலந்தில்தான் கப்பல்களைக் கட்டப் போவதாகவும் விளக்கிக் கூறினர். இந்தோனேஷ்ய அதிகாரிகள் புன்முறுவலுடன் சம்மதித்தனர். டச்சுக் கப்பல்களில் இந்தோனேஷ்யருக்கு நம்பிக்கை உண்டு" என்ருர் வால்ட்.

"இந்தோனேஷ்யாவை இழந்ததுகுறித்து நாங்கள் அதிகக் கவலைப்படவில்லை. என்னைப் பொறுத்தவரை எப்போதுமே கவலைப்பட்டதில்லை. உள்ளூரிலேயே எனக்கு நல்ல வேலை கிடைத்தது. இந்தோனேஷ்யாவில் வேலைசெய்த டச்சுக்காரர்களுக்குத்தான் தங்கள் வேலை போய்விட்டதே என்ற ஆத்திரம். யுத்தத்திஞல் உண்டான சேதங்களும், இந்தோனேஷ்யாவை இழந்ததும் ஒரு விதத்தில் நல்லதுதான். தங்களுடைய உழைப்பிஞல்மட்டுந்தான் முன்னுக்கு வர முடியும் என்பதை மக்கள் நன்கு உணர்கின்றனர். யுத்தத்திற்குப் பிறகு இந்நாட்டில் உழைப்பு அதிகமாயிற்று" என்றும் கூறினர் வால்ட்.

எதிர்பார்த்தபடியே ஜான் ஆம்ஸ்டர்டாம் விமான நிலையத்தில் இறங்கி ரோட்டர்டாம் வந்து சேர்ந்தார்.

7

வால்ட்டும் நானும் அவரை வரவேற்ரேம். மூவரும் சேர்ந்து பழங்கதைகள் பேசி மகிழ்ந்தோம். மாச்செல்டு, தாற்காலிகமாக ஒரு சமையற்காரியை வேலைக்கு அமர்த்தி சுவை மிக்க விருந்தளித்தார்.

எல்லோருமாக, ரோட்டர்டாம் நகரிலிருந்த பெரிய ஆறு மாடிக் கட்டிடம் ஒன்றுக்குச் சென்ரேம். ஹாலந்தில் உற்பத்தியான பொருள்களையெல்லாம் காட்சியில் வைத்திருந்தனர்; விற்பனையும் செய்தனர். கட்டிடத்தின் உச்சிமாடிக்குச் செல்லக் கட்டணம் வசூலித்தனர். உச்சிமாடிக்குச் சென்று ஊர் அமைப்பு முழுவதையும் பார்த்து மகிழ்ந்தோம். ஜான் தங்கியிருந்த இரண்டு நாட்களும் சென்றதே தெரியவில்லை. வால்ட் குடும்பத்தினரும் நானும், ஆம்ஸ்டர்டாம் விமான நிலையத்திற்குச் சென்று ஜானை வழியனுப்பினேம்.

திரும்பும் வழியில், பரந்த தோட்டத்தினிடையே இருந்த பெரிய மாளிகைக்குச் சென்ரேம். நாட்டின் பல பகுதிகளிலிருந்து மக்கள் அங்கே வந்து தங்கினர். வாடகை மிகச் சொற்பம். ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளவும், பொது விஷயங்களில் ஒன்றுபட்டு உழைக்கவும் அது உதவிசெய்தது. ஒரு சங்கத்தார் அதனை நடத்திவந்தார்கள்.

ஹாலந்தில் பிரபலமானது இளைஞர் விடுதிகள் (Youth Hostels). ஒவ்வொரு முக்கியமான ஊரிலும் அவ் விடுதி இருந்தது. அந்நாட்டில் அப்பொழுது நூற்றுக்கு மேற்பட்ட விடுதிகள் இருந்ததாக அறிந்தேன்.

" இளைஞர்களும், சாரணர்களும், பள்ளிச் சிறுவர்களும் முதுகில் பையைச் சுமந்துகொண்டு, விடுமுறை நாட்களில் நடந்து தங்கள் நாட்டைச் சுற்றிப்பார்ப்பது

வழக்கம். அவர்களுக்கு உதவி செய்வதற்காகவே இளைஞர் விடுதிகள் அமைக்கப்பெற்றுள்ளன. ஒவ்வொரு விடுதியிலும் வயது முதிர்ந்த தம்பதிகள் தங்கியிருப்பார்கள். அவர்கள், அங்கே வரும் இளைஞர்களைத் தங்கள் குழந்தைகளைப்போல அன்புடன் நடத்துவார்கள். எளிய உணவும் அளிப்பார்கள். அதற்கு மிகக் குறைந்த கட்டணம் வசூலிப்பார்கள். ஆனால் இளைஞர்கள் சமையலுக்கு உதவிசெய்யவும், சாப்பிட்ட பின்னர் பாத்திரங்களைக் கழுவவும்வேண்டும். தாங்கள் தங்கியிருக்கும் இடத்தைத் தாங்களே சுத்தம் செய்து கொள்ளவேண்டும்" என்றார் வால்ட்.

இளைஞர் விடுதிகளை நடத்திய தலைமைச் சங்கத்தில் வால்ட் ஒரு முக்கிய உறுப்பினராக இருந்தார். வால்ட்டின் முழுப்பெயர் வால்ட் புளுக்ஹூய்ஸ். அம்மாதிரி புளுக்ஹூய்ஸ் என்ற பெயருள்ள முந்நூறு குடும்பத்தினர் தற்பொழுதும் இருக்கிறார்களாம். அவர்களுடைய வம்ச பரம்பரை வரலாற்றை அவர்களே பெரிய புத்தகமாக வெளியிட்டிருந்ததைப் பார்த்தேன். அவர்கள் அனைவரும் சேர்ந்து, ஆதியில் முதலாவது புளுக்ஹூய்ஸ் வசித்த வீட்டை விலைக்கு வாங்கி, அதனைப் பெரிதாகக் கட்டினார்கள். ஆண்டுக்கு ஒரு முறை எல்லாக் குடும்பத்தார்களும் அங்கே சென்று இரண்டு நாட்கள் ஒன்றாகத் தங்குவார்கள். எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து சமையல் செய்து சாப்பிடுவார்கள். அவர்கள் சேர்ந்து ஏற்படுத்திய பொது நிதியிலிருந்து, அவர்களுடைய குடும்பங்களில் உள்ள ஏழை மாணவர்களுக்குப் படிக்க உதவி செய்தார்கள் என்று அறிந்தேன்.

ஹாலந்தில் இரண்டு வாரங்கள்தான் தங்கினேன். அதற்குள்ளாக அந்நாட்டில் வால்ட்டுடன் ஆயிரத்து ஐந்நூறு மைல் மோட்டார்ப் பிரயாணம் செய்தேன்.

வால்ட் குடும்பத்தாரைவிட்டுப் பிரிந்தபொழுது வருத்த மாகத்தான் இருந்தது. ரயிலுக்கு வந்து வழியனுப்பினார் வால்ட்.

டென் ஹாக் நகரில் உள்ள ஜெர்மன் ஸ்தானிகர் காரியாலயத்துக்கு விசா பெறுவதற்காகச் சென்றேன். வயதான ஒருவர் என்னை வரவேற்று, உட்காரும் படிக் கூறினார். எனக்கு முன்னால் தம்பதிகள் இருவர் காத்திருந்தனர். எனது பெயரையும் வந்த காரியத்தை யும் காகிதத்தில் குறித்து முதியவரிடம் கொடுத்தேன். அவர் அதனைக் காரியாலய அறைக்கு எடுத்துச் சென்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு ஜெர்மன் பெண் காரியாலயக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள். காத்திருந்த தம்பதிகளை உள்ளே அழைத்துச் சென்றாள்.

இரண்டு நிமிஷ நேரத்துக்கெல்லாம் அப்பெண் மறு படியும் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள்; தம்பதிகளும் வெளியே வந்தனர்.

அப்பொழுது ஒரு ஜெர்மானியர் வாசற் கதவைத் திறந்துகொண்டு உள்ளே வந்து, அப்பெண்ணிடம் பத்து நிமிஷங்களுக்கு மேலாக ஜெர்மன் மொழியில் பேசினார்.

அவர் சென்ற பிறகு, அந்தப் பெண் என்னிடம் வந்து இரண்டு நமூனுக்களைக் கொடுத்து, பூர்த்தி செய் யும்படி கூறினாள்.

"ஏனம்மா? முறைப்படி நான் காத்திருந்தபொழுது, புதிதாக வந்த ஒருவரைத் தாங்கள் கவனித்தது நியாயமா?" என்றேன்.

"அதற்கு நான் என்ன செய்யட்டும்? அவர்தான் முதலில் என்னிடம் பேசினுர்" என்று அலட்சியமாகக் கூறினுள்.

"தாங்கள் விஷயத்தை விளக்கிக் கூறி, அவருடைய முறை வரும்வரை காத்திருக்கும்படி கூறியிருக்க லாமே?" என்றேன்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீங்கள் இஷ் டப்பட்டால் இந்த நமூனுக்களைப் பூர்த்தி செய்யுங்கள்" என்ருள்.

"தங்களுடைய செய்கைக்குத் தாங்கள் வருத்தம் தெரிவித்தாலொழிய, நான் பூர்த்திசெய்யப்போவதில்லை" என்றேன்.

"இதையெல்லாம் கேட்க எனக்கு நேரமில்லை" என்று சொல்லி, என்னிடமிருந்த நமூனுக்களை வாங்கிக் கொண்டு கோபமாக உள்ளே சென்ருள்.

சில விநாடிகளில் மீண்டும் என்னிடம் வந்து, நமூனுக்களை அங்கிருந்த மேஜைமீது வைத்தாள். நான் சொன்னதையே திரும்பவும் சொன்னேன்.

"இல்லாவிட்டால்?" என்ருள் ஆத்திரமாக.

"இல்லாவிட்டால், இந்திய அரசாங்கத் தூதரிடம் சென்று, உங்கள் தூதருக்கு டெலிபோன் செய்யச் சொல்லுவேன்" என்றேன்.

"நான் வருந்துகிறேன்" என்று கோபத்துடன் கூறினுள்.

நமூனுக்களை நான் பூர்த்திசெய்துகொண்டிருந்த பொழுது, "நீங்கள் விரும்பினுல் கண்ணீர் வேண்டுமானு லும் வடிக்கிறேன்" என்ருள் குறும்புத்தனமாக.

"ஆம் அம்மா, நன்ருகக் கண்ணீர் வடியுங்கள். அது உங்கள் உடம்புக்கும் உள்ளத்துக்கும் நல்லதைச் செய்யும்" என்றேன்.

இரண்டு யுத்தங்களில் படுதோல்வி அடைந்தும் ஜெர்மானியர் குணம் மாறவில்லை!

பத்து நிமிஷ நேரத்தில் விசா கிடைத்தது. அதற்காகக் காத்திருந்தபொழுது முதியவர்மட்டும் இருந்தார். வருவோர்களை வரவேற்கும் குமஸ்தா அவர். சாப்பாட்டு வேளையானதால், தமது பையிலிருந்து இரண்டு ஆப்பிள் பழங்களை எடுத்தார். அவற்றில் ஒன்றை எனக்குத் தர அன்புடன் முன்வந்தார். நான் ஏற்கெனவே சாப்பிட்டு விட்டதாகக் கூறி, அவருடைய அன்புக்கு நன்றி செலுத்தினேன்.

"ஜெர்மனியில் தாங்கள் எந்த ஊர்?" என்று அவரைக் கேட்டேன்.

அவர் மிக்க மரியாதையுடன், "நான் ஜெர்மனியிலிருந்து வரவில்லை. இதே ஊரில் பிறந்த டச்சுக்காரன்" என்ருர்.

---

# ஜெர்மனி

ஹாலந்திலிருந்து ஜெர்மனிக்கு ரயிலில் சென்றேன். நார்வே, டென்மார்க், ஹாலந்து முதலிய நாடுகளில் ஜெர்மானியரைப்பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் நினைவுக்கு வந்தன. அதனால் ஜெர்மானியர்மீது எனக்கு ஒருவித வெறுப்பு உண்டாயிற்று.

ஹாலந்தில் தங்கியிருந்தபொழுது, ஏராளமான ஜெர்மன் சாமான்களைப் பார்த்தேன். டைப்ரைட்டர், காமிரா, தானுகை இயங்கும் அச்சியந்திரம், ரேடியோ, மோட்டார் இன்னும் எத்தனையோ விதவிதமான கவர்ச்சியான ஜெர்மன் சாமான்கள். யுத்தம் முடிந்து சில ஆண்டுகளுக்குள், ஜெர்மனி தொழில் உற்பத்தியில் அவ்வாறு முன்னேறியிருந்தது ஆச்சரியத்தைக் கொடுத்தது. அத்தகைய முன்னேற்றமடைந்த ஜெர்மானியர்மீது ஒருவித மதிப்பும் ஏற்பட்டது.

ரயில் ஹாலந்து எல்லையைக் கடந்து, சில மணி நேரத்தில் கொல்ன் (Koln) என்ற ஊரை அடைந்தது. ஜெர்மனியின் எல்லைக்குள் நுழைந்ததிலிருந்து கொல்ன் வரையிலும், யுத்தத்தில் குண்டு வீச்சால் சேதமடைந்த பல கட்டிடங்கள் இன்னும் குட்டிச்சுவராகப் பாழ்நிலையில் காணப்பெற்றன. யுத்தம் முடிந்து அப்பொழுது எட்டு ஆண்டுகள் ஆகியும், அந்தப் பாழ்நிலை மாருமல் இருந்ததைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

ஆனுல், வழிமுழுதும் ஆங்காங்கே பல தொழிற்சாலைகள் வேலை செய்துவந்ததைக் கண்டேன். பல

ரயில் வண்டிகள் நூற்றுக்கணக்கான புதிய மோட்டார்களை ஏற்றிச் சென்றன. அவை அனைத்தும் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்காக ஹாம்பர்க் துறை முகத்துக்குச் சென்றன என்று அறிந்தேன். அந்த ஆண்டில்மட்டும் ஜெர்மனியில் உற்பத்தியான மோட்டார்களின் எண்ணிக்கை ஐந்து லட்சம்!

கொல்னில் இறங்கி ரயில் மாறினேன். அது ஒரு 'பாசஞ்சர்' ரயில் வண்டி. நான் ஏறிய மூன்றாவது வகுப்புப் பெட்டி மிகப் பழையது. அதில் ஏற்கெனவே இந்திய மாணவர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். எஃகுத் தொழிற்சாலையொன்றில் தாம் பயிற்சி பெற்று வந்ததாகக் கூறினார். அப்பொழுது சுமார் இருநூறு இந்திய மாணவர்கள் எஃகுத் தொழிற்சாலைகளில் பயிற்சிபெற்று வந்ததாக அவர்மூலம் அறிந்தேன். அவர்கள் அனைவரையும் இந்திய அரசாங்கம் அனுப்பியிருந்தது.

"இந்திய அரசாங்கம் கொடுக்கும் தொகையைக் கொண்டு இந்நாட்டில் வாழ்க்கை நடத்துவது மிகவும் கஷ்டம். ஜெர்மானியர் என்னை நன்றாக நடத்துகிறார்கள். சகோதரத் தொழிலாளர் சிலர் அடிக்கடி தங்கள் வீடுகளுக்கு அழைத்துச் சென்று எனக்கு நல்ல உணவளிக்கின்றனர்" என்றார் இந்திய மாணவர்.

பான் (Bonn) ரயில் நிலையத்தில் இறங்கினேன். ரைன் நதிக்கரையில் அமைந்துள்ள அந்நகரின் ஜனத் தொகை ஒன்றேகால் லட்சம்; அதுதான் மேற்கு ஜெர்மனியின் தலைநகரம்.

யுத்தத்திற்குப் பிறகு ஜெர்மனியை இருதுண்டாக்கினார்கள். ஒன்று மேற்கு ஜெர்மனி; மற்றொன்று கிழக்கு ஜெர்மனி. இரண்டு ஜெர்மனிகள் எவ்வாறு தோன்றின என்று தெரிந்துகொள்வது அவசியம்.

1939ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் ஹிட்லரின் ஜெர்மனியும் ருஷ்யாவும் ஒன்று சேர்ந்து போலந்து நாட்டின்மீது படையெடுத்தன. அந்நாட்டைத் துண்டு களாக்கிப் பகிர்ந்துகொண்டன. அதன் காரணமாகத் தான் போலந்து நாட்டுடன் ஏற்கெனவே செய்து கொண்ட உடன்படிக்கைகளுக்கு இணங்க, பிரிட்டனும் பிரான்ஸும், ஜெர்மனிமீது போர் தொடுத்தன.

1941 ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஜெர்மனி திடீரென்று ருஷ்யாமீது படையெடுத்தது.

அதே ஆண்டு ஜூலை மாதத்தில் பிரிட்டனும் ருஷ்யாவும் நேச ஒப்பந்தம் செய்து கொண்டன. பின்னர் சில மாதங்களில் ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் நேச ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி, சுமார் மூன றரை ஆண்டுகளுக்குள்ளாக, ருஷ்யாவுக்குச் சுமார் நாலாயிரம் கோடி ரூபாய் பெறுமான (Lend Lease) உத வியை அமெரிக்கா அளித்தது. சில சமயங்களில் அந்த உதவி வரத் தாமதமான பொழுது, ருஷ்யா அமெரிக்கா மீது கடுமையான குற்றங்களைச் சுமத்திற்று. முக்கிய மான குற்றச்சாட்டுகள்: அமெரிக்காவும் பிரிட்டனும் தங்களுடைய நேசக் கூட்டுறவுக்குத் துரோகம் செய்கி ருர்கள்; ஜெர்மனியுடன் தனியே சமாதானம் செய்து கொள்ள முயலுகிருர்கள்; முதலாவது யுத்தத்திற்குப் பிறகு மேற்கு நாடுகள் ருஷ்யாவை ஒதுக்கி வைத்தது போல மீண்டும் செய்வார்கள்.

அதிலும் ஓரளவு உண்மை இருந்தது. பிரிட்டிஷ் பிரதம மந்திரி அமெரிக்காவுக்கு அனுப்பிய குறிப்பு ஒன் றில், “யுத்தத்திற்குப் பிறகு, கம்யூனிஸக் காட்டுமிராண் டித்தனத்திற்கு எதிராகத் தடைகளை விதிக்க வேண்டும்” என்று குறிப்பிட்டிருந்தார்.

அதே ஆண்டு ஆகஸ்டு மாதத்தில், அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டும், பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சிலும் அட்லாண்டிக் மகாசமுத்திரத்தில் சந்தித்து "அட்லாண்டிக் சாசன"த்தில் கையெழுத்திட்டனர். அட்லாண்டிக் சாசனத்தின்படி, நேச நாடுகளின் வெற்றிக்குப் பின்னர், தேசங்களின் பூகோள அமைப்பில் எத்தகைய மாறுதலும் கூடாது; எல்லா நாடுகளுக்கும் மூலப் பொருள்களை வாங்கும் உரிமை வேண்டும்; எந்த நாடும் தனது முன்னேற்றத்திற்கு—அந்நியர் ஆதிக்கமின்றி—தானே முயலவேண்டும்.

பின்னர் லண்டனில் நடைபெற்ற மகாநாடு ஒன்றில், ருஷ்யா அட்லாண்டிக் சாசனத்தை அங்கீகரித்தது.

தோல்வியுற்ற ஜெர்மனியை எவ்வாறு நடத்துவது என்பது குறித்து நேசநாடுகளின் பிரதிநிதிகள் லண்டனில் கூடி ஆலோசனை செய்தனர். வெற்றிக்குப் பின் ஜெர்மனியை மூன்று பகுதிகளாகப் பிரிப்பது, பெர்லின் நகரத்துக்குத் தனியாட்சி அமைப்பது, மூன்று பகுதிகளில் எந்தெந்தப் பகுதியை யார் யார் நிர்வகிப்பது என்பனவற்றில் பிரதிநிதிகளிடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டது.

பிரான்ஸின் நிலைமை என்ன, மூன்று அரசுகள் கண்காணிப்புக் குழுவில் பிரான்ஸையும் சேர்த்துக்கொள்வதா என்பதுபற்றி யால்டா மகாநாட்டில் விவாதித்தனர். பிரான்ஸை நான்காவது அரசாகச் சேர்க்கவேண்டும் என்று பிரிட்டன் வாதாடிற்று.

"பிரான்ஸ் தேசம் 1940 ஆம் ஆண்டில் ஜெர்மன் துருப்புக்களைச் சுலபமாக உள்ளே நுழைய விட்டுவிட்டது. பின்னர் யுத்த வெற்றிக்காக பிரான்ஸ் செய்த உதவிகள் மிக அற்பம். பிரான்ஸ் கண்காணிப்புக்கு

ஜெர்மனியில் ஒரு பகுதி கொடுக்கவேண்டு மென்ருல், அதைப் பிரிட்டனும் அமெரிக்காவும் தங்கள் பகுதியிலி ருந்துதான் ஒதுக்கிக் கொடுக்க வேண்டும்'' என்றது ருஷ்யா.

முக்கிய பிரச்னைகளுள் ஒன்று போலந்து நாட்டின் எல்லையை நிர்ணயிப்பது. முதலாவது உலக யுத்தம் முடிந்ததும், ருஷ்யாவின் எல்லை, கர்ஸான் லைன் என்று சொல்லப்படும் எல்லையாக இருக்கவேண்டும் என்று 1919 ஆம் ஆண்டில் பிரிட்டன் பிரேரித்தது. ஆனல் 1921 ஆம் ஆண்டில் நடைபெற்ற ருஷ்ய-போலந்து யுத்தத்திற்குப் பின், ருஷ்யாவின் எல்லை குறுகிவிட்டது. எனவே பிரிட்டன் முன்னர் கூறிய கர்ஸான் லைன் எல் லையை ருஷ்யா திரும்பப் பெற்ருல், போலந்துக்கு, கிழக்கே உண்டாகும் நஷ்டத்துக்கு ஈடாக, மேற்கே போதிய இடம் ஒதுக்க வேண்டும் என்று மூன்று அரசு களும் கொள்கையளவில் ஒப்புக்கொண்டன.

போலந்தின் மேற்குப் பிரதேசத்துடன், ஜெர்மனி யில் நெஸ்ஸே நகரின் வழியாக ஓடும் கிழக்கு நெஸ்ஸே நதியின் கரைவரை இணைக்க வேண்டும் என்று பிரிட்ட னும் அமெரிக்காவும் கூறின. அதன்படி, ஆருயிரம் சதுரமைல் நிலப்பரப்பு போலந்துடன் சேரும். அந்நிலப் பரப்பில் யுத்தத்திற்குமுன் வசித்த ஜெர்மானியர் தொகைபதினைந்து லட்சம்.

ஜெர்மனியில் உள்ள ஸ்டெட்டின் என்ற நகரத் தைப் போலந்துடன் இணைத்து, ஓடர், மேற்கு நெஸ்ஸே நதிகளை எல்லையாக அமைக்கவேண்டும் என்பது ருஷ் யாவின் கூற்று. அதன்படி, பதினுயிரம் சதுரமைல் நிலப்பரப்பு போலந்துடன் சேரும். அப்பகுதியில் யுத் தத்திற்குமுன் வசித்த ஜெர்மானியர் தொகை முப்பத் தைந்து லட்சம்.

ருஷ்யாவின் கோரிக்கையைப் பிரிட்டன் பலமாக எதிர்த்தது. "போலந்தின் தற்போதைய எல்லை, பழைய கர்ஸான் லைன் எல்லையாக இருக்கும். போலந்துக்கு மேற்கிலும், வடக்கிலும் கணிசமான அளவு இடம்




ஜெர்மனி - யுத்தத்திற்கு முன்

சேர்த்துக் கொடுக்க வேண்டும் என்ற கொள்கையை மூன்று அரசுகளும் ஒப்புக்கொள்கின்றன. இது சம்பந்தமாகப் புதிய போலந்து தேசீய அரசாங்கத்தின் விருப்பத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும். சமாதான மகாநாட்டில்தான் போலந்தின் மேற்கெல்லையை நிர்ணயிக்க வேண்டும்" என்று மூன்று அரசுகளும் தீர்மானித்தன.

யால்டா மகாநாட்டில் ருஷ்யா போலந்தின் எல்லையைக் குறித்துக் கவலைப்படவில்லை. ஜெர்மனியிலிருந்து எவ்வாறு நஷ்டஈடு வாங்குவது என்பது அதன் ஒரே நோக்கம்.




ஜெர்மனி - யுத்தத்திற்குப் பின்

"ஜெர்மனி யுத்த நஷ்டஈடாக பத்தாயிரம்கோடி ரூபாய் தரவேண்டும்; அதில் ஐயாயிரம் கோடி ருஷ்யாவுக்கு; நாலாயிரம் கோடி பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும்; மீதி ஆயிரம் கோடி இதர நேசநாடுகளுக்கு" என்று ருஷ்யர் கூறினர்.

தொழிற்சாலைகளை இரண்டு ஆண்டுகளுக்குப் பறிமுதல் செய்து, பிறகு நடைமுறை உற்பத்தியில் (பின்னர்

நிர்ணயிக்கிறபடி) ஒரு விகிதாசாரம் பெறுவது, ஜெர்மானியர்களிடம் கட்டாய வேலை வாங்குவது என்ற முறைகளில் நஷ்டஈட்டைப் பெறுவது என்று மூன்று அரசுகளும் சம்மதித்தன.

யால்டா மகாநாட்டுக்குச் சில தினங்களுக்குப்பின், 1941 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பன்னிரண்டாம் தேதி ரூஸ்வெல்ட் காலமானார். அதே மாதம் முப்பதாம் தேதி ஹிட்லர் தன்னைத்தானே சுட்டுக் கொண்டு மாண்டார். மே மாதம் முதல் வாரத்தில் ஜெர்மானியர் சரணகதி ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

ஜூன் மாதம் ஐந்தாம் தேதி ஜெர்மன் அரசாங்கப் பொறுப்பை நேசநாடுகள் ஏற்றன. ஒவ்வொரு நாடும், ஏற்கெனவே தனக்குப் பிரித்திருந்த பகுதியில் ஆட்சி நடத்திற்று.

ஜூன் மாதம் ஆருந் தேதி, போட்ஸ்டாம் நகரில் மூன்று அரசுகள் மகாநாடு நடைபெற்றது. அம்மகாநாட்டில் ருஷ்யாவின் கை ஓங்கியிருந்தது. எனவே, கிழக்குப் போலந்து ருஷ்யாவின் ஆதிக்கத்தில் இருந்ததையும், ஓடர் நதிக்குக் கிழக்கேயுள்ள பகுதி போலந்தின் ஆதிக்கத்திலிருந்ததையும், பிரிட்டனும் அமெரிக்காவும் ஏற்கும்படியான நிர்ப்பந்த நிலை ஏற்பட்டது. அன்றியும் ஜெர்மனியின் ஒரு குறிப்பிட்ட பகுதியை போலந்து அரசாங்கத்தின் நிர்வாகத்தின்கீழ் விடுவதென்றும், அப்பகுதி சோவியத் யூனியன் பகுதி ஆகாதென்றும் மூன்று அரசுகளும் தீர்மானித்தன.

போலந்து, செக்கோஸ்லோவக்கியா, ஹங்கேரி முதலிய நாடுகளில் உள்ள ஜெர்மானியர்களை வெளியேற்றி அவர்களை ஜெர்மனியில் குடியேறச் செய்வதென்றும்,

அதனை ஒழுங்காகவும், மனிதத் தன்மையுடனும் செய்வது என்றும் மூன்று அரசுகளும் முடிவு செய்தன.

யுத்தத்திற்கு முன்னிருந்த ஜெர்மனியின் நிலப் பரப்பில் கால் பாகத்தைப் போலந்து எடுத்துக் கொண்டது. ஆனால் அந்தப் பாகம்தான் நாட்டில் மிக்கச் செழிப்பான பகுதி; மக்களுக்கு உணவளிக்கும் தானியக் களஞ்சியம். அன்றியும் ஜெர்மனியில் கிடைத்த நிலக் கரியில் ஆறில் ஒரு பங்கு அங்கு கிடைத்தது.

போலந்து நிர்வாகத்திலுள்ள ஜெர்மனியிலிருந்து நஷ்டஈடு வசூலிக்க முடியவில்லை. எனவே, முழு ஜெர் மனிக்கும் விதித்த நஷ்டஈட்டை, முக்கால் ஜெர்மனிதான் செலுத்தவேண்டி யிருந்தது. அதிலும் ருஷ்யாவின் ஆதிக்கத்திலிருந்த பகுதிகளில் உள்ள இயந்திரங்களை ருஷ்யர்கள், தங்களுக்காகவும், போலந்துக்காகவும் பறி முதல் செய்துவிட்டனர்.

நேச நாடுகளின் ஆட்சிக் காலத்தில், ஜெர்மனியின் நாணயச் செலாவணி, பாங்கித் தொழில், பொது வரிகள், சுங்க வரி, ஏற்றுமதி இறக்குமதித் திட்டங்கள், யுத்த நஷ்டஈடு பெறுதல் ஆகியவற்றுக்கு ஒரு பொதுவான திட்டத்தை வகுப்பது, எல்லாப் பகுதிகளிலுமுள்ள ஜெர் மானியர்களை ஒரே மாதிரியாக நடத்தி, ஜெர்மனியை ஜனநாயகப் பாணியில் திருத்தியமைப்பது, எல்லா அரசி யல் கட்சிகளும் ஜனநாயக முறையில் அமைய உதவு வது, பத்திரிகைச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், மதச் சுதந்திரம் முதலியவற்றை வழங்குவது, சட்டத்தை நிலை நிறுத்துவதற்கு வேண்டிய அளவுதான் நேச நாடுகள் தம் ராணுவ பலத்தை உபயோகிப்பது என்பவை நேச நாட்டு அரசுகள் ஏற்கெனவே செய்துகொண்டிருந்த தீர்மானங்கள்.

ஆகஸ்டு மாதம் ஏழாம் தேதி ஹிரோஷிமாவில் அணுகுண்டு வெடித்தது. அதற்கு மறுநாள் ருஷ்யா ஜப்பான் மீது போர் தொடுத்தது.

நேச நாடுகளின் கண்காணிப்புக் குழு (Control Commission)வின் முதல் கூட்டம் 1945ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் நடைபெற்றது. நான்கு அரசுகளின் சேனாதிபதிகளும், அவர்களுடைய ஆலோசகர்களும் குழுவில் அங்கம் வகித்தனர். குழுவின் அதிகாரம் ஜெர்மனி முழுவதையும் கட்டுப்படுத்தும். ஒவ்வொரு சேனாதிபதியும் தங்கள் தங்கள் பகுதிகளில் தாங்களே சர்வாதிகாரம் உடையவர்கள். ஆனால் குழுக் கூட்டத்தில் ஒரு சேனாதிபதிக்கு நான்கில் ஒரு வாக்குத்தான். ஒரு சேனாதிபதி தமக்குத்தாமே திட்டம் வகுத்தாலும், அதனை மற்ற மூவரும் அங்கீகரிக்க வேண்டும். குழுவின் சட்டமுறைப்படி ஏகமனதாகச் செய்யப்பெற்ற தீர்மானங்களைத்தான் அமுல் நடத்தலாம். அது அனுபவத்தில் பல சிரமங்களை உண்டாக்கிற்று. எனவே, ஒவ்வொரு சேனாதிபதியும் தத்தம் பகுதியைத் (Zone) தாங்கள் ஆளுவதே சௌகரியம் என்று முடிவு செய்தனர்.

நேசநாடுகள் ஆட்சியிலிருந்த பகுதிகள் ஒவ்வொன்றும் தனித்தனிச் சுதந்திர நாடுகள்போலத் தோன்றின. ஒரு பகுதியிலிருந்து மறு பகுதிக்கு மனிதர்களோ, சாமான்களோ செல்வது இயலாத காரியமாயிற்று.

குழுவின் வேலை ஆரம்பத்தில் தடைப்பட்டதற்குக் காரணம் பிரான்ஸ். போட்ஸ்டாம் மகாநாட்டின்போது பிரான்ஸ் தேசத்தை அழைக்கவில்லை. எனவே மூன்று அரசுகளின் போட்ஸ்டாம் தீர்மானங்கள் தன்னைக் கட்டுப்படுத்தாது என்றது பிரான்ஸ். நேச வெளிநாட்டு மந்திரிகள் கூட்டத்தில் பிரான்சும் சேர்ந்திருந்தது.

நேச நாடுகள் வற்புறுத்தலுக்கு இணங்க போட்ஸ்டாம் தீர்மானங்களைப் "பொதுப்படையாக" பிரான்ஸ் அங்கீகரித்தது. ஆனால் அது குறிப்பிடும் காலம்வரை ஜெர்மனியில் மத்திய அரசாங்கம் அமைக்க ஒப்புக் கொள்ள முடியாது என்றும் கூறியது.

ருஷ்யாவிலும், பிரான்ஸிலும் ஜெர்மன் படைகள் புகுந்து கொள்ளையிட்டு நாசம் செய்தனவாகையால், மேற்கண்ட இரு நாடுகளும் தங்களுக்குச் சேரவேண்டிய நஷ்ட ஈட்டிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தன. தங்கள் பகுதிகளிலிருந்த தொழிற்சாலைகளையும் இயந்திரங்களையும் பறிமுதல்செய்து தங்கள் தேசங்களுக்கு எடுத்துச் சென்றன. ருஷ்யாவுக்கும் பிரான்சுக்கும் கிடைத்த பகுதிகள் நாட்டுப்புறங்கள் ஆதலாலும், அவை விவசாய நிலங்கள் ஆனதாலும் சுலபமாக இயந்திரங்களைப் பறிமுதல் செய்வது சாத்தியமாயிற்று.

ஆனால், பிரிட்டிஷ் அமெரிக்கப் பகுதிகளின் நிலை நேர்மாறானது. அவை பெரிய பட்டணங்களும் தொழிற்சாலைகளும் உள்ள இடங்களாகும். அங்கு உணவுக் கஷ்டம் அதிகம். அமெரிக்கரும், பிரிட்டிஷாரும் தங்கள் உணவைத் தாங்களே எடுத்துச் சென்றனர். அதுமட்டுமன்று, உணவில்லாமல் வாடிய ஜெர்மானியருக்கு கோடிக்கணக்காகச் செலவு செய்து உணவளித்தனர்.

போட்ஸ்டாம் தீர்மானப்படி, ருஷ்யர்கள் தாங்கள் பறிமுதல் செய்த தொழிற்சாலைகள், இயந்திரங்கள் இவற்றின் விவரங்களைக் கண்காணிப்புக் குழுவுக்குக் கொடுக்கவில்லை. கணக்கைக் கொடுக்கும்வரை, ருஷ்யாவுக்கு அமெரிக்கப் பிரிட்டிஷ் பகுதிகளிலிருந்து எத்தகைய யுத்த நஷ்டஈடும் கொடுக்க முடியாது என்று அமெரிக்கா அறிவித்தது.

ருஷ்யர்கள் அவசரம் அவசரமாகத் தங்கள் பகுதி களில் தொழில்களைத் தேச உடைமையாக்கி, நிலச் சீர் திருத்தங்களையும் கொண்டுவந்தனர்.

1945ஆம் ஆண்டில் நேசநாடுகளின் வெளிநாட்டு மந்திரிகள் கூட்டம் நடைபெற்றது பலன் ஒன்றுமில்லை. 1946ஆம் ஆண்டிலும், பாரிஸ் நகரில் இருமுறை கூட் டம் நடைபெற்றது. சார், ரைன்லந்துப் பிரதேசம் சம்பந்தமான முடிவு தெரிந்தாலொழிய, ஜெர்மனிக்குப் பொது அரசாங்கம் அமைக்கப் பிரான்ஸ் மறுத்துவிட்டது. ஜெர்மனியைச் சிறு சிறு பகுதிகளாக்கி சமஷ்டி அமைக்க வேண்டும் என்பது பிரான்ஸின் நோக்கம்.

"கிழக்கு மேற்கு நாடுகள் தங்கள் ஆதிக்கத்தைப் பலப்படுத்தும் சண்டையில், ஜெர்மனியை அடகுப் பொருளாக மதிப்பது ஜெர்மனிக்கோ அல்லது உலக சமாதானத்துக்கோ ஏற்றதன்று" என்று அமெரிக்கர் கூறினர்.

வெளிநாட்டு மந்திரிகளின் நான்காவது கூட்டம் 1947ஆம் ஆண்டில் மாஸ்கோவில் நடைபெற்றது. கூட்டம் ஆரம்பித்த இரண்டு நாட்களில், அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன், "கம்யூனிஸத்தை எதிர்க்க அமெ ரிக்கா பொருள் உதவிகள் செய்யும்; கம்யூனிஸம் எந்த நாட்டையாவது பயமுறுத்தினால், அந்த நாட்டுக்கு அமெ ரிக்கா ராணுவத் தளவாட உதவி செய்யும்" என்று அமெரிக்க சட்டசபைக்கு அனுப்பிய செய்தியில் கூறினார்.

இதனால், வெளிநாட்டு மந்திரிகளின் கூட்டம் குழப் பத்தில் முடிந்தது. 1948ஆம் ஆண்டின் இறுதிக்குள் ஜெர்மன் யுத்தக் கைதிகளைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்ற ஒரு முடிவுதான் ஏற்பட்டது.

சில மாதங்களுக்குப் பின்னர் வெளிநாட்டு மந்திரிகளின் ஐந்தாவது கூட்டம் லண்டனில் நடைபெற்றது. பலன் ஒன்றுமில்லை.

1947ஆம் ஆண்டு மே மாதத்தில் அமெரிக்கப் பிரிட்டிஷ் பகுதிகள் ஒன்றுசேர்ந்து ஜெர்மன் பொருளாதாரக் குழு ஒன்றை அமைத்தன. வெளிநாடுகளுக்கு உதவும் அமெரிக்காவின் மார்ஷல் திட்டம் அமலுக்கு வந்தது. மார்ஷல் திட்டத்தில் நன்மைபெறும் பதினாறு ஐரோப்பிய நாடுகள் பாரிசில் கூடின. ஜெர்மனியின் பொருளாதாரம் மற்ற நாடுகளின் பொருளாதார வளத்திற்குத் துணைபுரியும் என்று அந்நாடுகள் கூறின. மறு ஆண்டில், மார்ஷல் திட்ட உதவிகளை மேற்கு ஜெர்மனி பெற்றது.

கிழக்கு ஜெர்மனியில், "ஜெர்மன் மக்கள் காங்கிரஸ்" 1947ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் கூடிற்று. கிறிஸ்துவ டெமாகிரடிக் கட்சித் தலைவரையும், உப தலைவரையும் சோவியத் கவர்னர் நீக்கினார். கிழக்கு ஜெர்மனியிலும் "பொருளாதாரக் குழு" ஒன்றை அமைத்தனர்.

1948ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் மேற்கு ஜெர்மனியில் "பிராங்போர்ட் சார்ட்டர்" பிரகடனமாயிற்று. அதன்படி ஜெர்மனி பொருளாதார சுதந்திர நாடாக, சட்டசபையுடனும் மந்திரிசபையுடனும் அமைய ஏற்பாடாயிற்று.

அதே ஆண்டு மார்ச் மாதத்தில் கிழக்கு ஜெர்மனியில் உள்ள ஜெர்மன் பொருளாதாரக் குழுவுக்கு அதிக அதிகாரங்கள் வழங்கப்பெற்றன.

நாணயச் சீர்திருத்தத்திற்கு ருஷ்யா ஒத்துவராததால், மேற்கு நாடுகள் தங்கள் பகுதிகளுக்குப் புதிய

நாணயங்களை வெளியிட்டன. ருஷ்ய ராணுவ அரசாங்கம் கிழக்கு ஜெர்மனியில் நாணயச் சீர்திருத்தம் செய்து புதிய நாணயங்களை வழங்கிற்று.

ஜூன் மாதம் லண்டனில் நடைபெற்ற மகாநாட்டில் பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ், பெல்ஜியம், ஹாலந்து, லக்ஸம்பர்க் தேசங்கள் கலந்து கொண்டன. ரூர் பிரதேசத்தைச் சர்வதேசக் கண்காணிப்பில் விடுவதென்று தீர்மானித்தன. மேற்கு ஜெர்மனி முழுமைக்கும் அரசியல் நிர்ணய சபை கூட்டுவதற்கு வேண்டியவற்றை உடனே ஏற்பாடு செய்யும்படி, மேற்கு நாடுகள் தங்கள் ராணுவ அதிகாரிகளுக்கு உத்தரவிட்டன.

இந் நிலையில் கிழக்கு ஜெர்மனி, மேற்கு பெர்லின் நகருக்கு நிலக்கரி அனுப்புவதையும் மின்சாரம் வழங்குவதையும் நிறுத்திவிட்டது.

அமெரிக்கர்கள் விமானங்களின் மூலமாக மேற்கு பெர்லினுக்கு உணவுப் பொருள்களையும் ஏனையவற்றையும் கொணர்ந்தனர்.

ஜூலை மாதம் முதல்தேதி, கண்காணிப்புக் குழுவின் வேலைகள் நடைபெற முடியாமல் நின்றன. கண்காணிப்புக் குழு முறிந்துவிட்டதால், ருஷ்யப் பகுதியில் உள்ள தீவு போன்ற மேற்கு பெர்லின் நகரில் மேற்கு நாடுகள் இருக்க வேண்டியதில்லை என்று ருஷ்யர் கூறினர்.

"கண்காணிப்புக் குழு முறிந்ததற்குக் காரணம் ருஷ்யா தான். எது எப்படியிருந்தாலும் பெர்லினை விட்டுச் செல்லத்தான் வேண்டும் என்ற சட்டமில்லை" என்றன மேற்கு நாடுகள்.

"அமெரிக்கர்கள் நீண்ட காலம் விமானங்கள் மூலமாக உணவுப் பொருள்கள் கொண்டு வருவது கஷ்டம்.

குளிர்காலம்வரை இது தாங்காது" என்று ருஷ்யர்கள் கருதினர்.

ஆனால் அமெரிக்கர்கள் தங்கள் மதிப்பைக் காத்துக் கொள்வதற்காகப் பெரும் செலவைப் பாராமல் மேற்கு பெர்லின் முழுமைக்கும் உணவு வழங்கினர். அன்றியும் மேற்கு ஜெர்மனியிலிருந்து கிழக்கு ஜெர்மனிக்குச் சென்ற சாமான்களைத் தடுத்தனர்.

1949ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் பேச்சு வார்த்தைகள் நடந்தன. இரு பகுதிகளிலும் விதித்த தடைகளை நீக்கிவிடுவதென்று ஒப்பந்தம் செய்து கையெழுத்திட்டனர். மே மாதத்தில் பாரிஸ் நகரில் வெளிநாட்டு மந்திரிகள் கூடுவது என்றும் தீர்மானித்தனர். இடைக்காலத்தில் பிரெஞ்சுப் பகுதியைப் பிரிட்டிஷ் அமெரிக்கப் பகுதிகளுடன் இணைத்து, ஜெர்மன் அரசாங்கம் தோன்றுவதற்கு வழிகோலும்வகையில் மேற்கு நாடுகளின் ராணுவ அரசாங்கத்தைக் கலைத்து ஒரு குழுவாக அமைத்தனர். ஏப்ரல் மாதத்தில் ரூர் பிரதேசத்தைச் சர்வதேசப் பொறுப்பில் விடுவது என்ற சட்ட விதிகளில் கையெழுத்திட்டனர்.

மே மாதம் எட்டாம் தேதி, மேற்கு ஜெர்மனியின் அரசியல் சபை (Parliamentary Council) கூடி, நீண்ட விவாதத்திற்குப் பின் "ஜெர்மன் ஐக்கியக் குடியரசை" ஏற்படுத்திற்று. அக்குடியரசில் மேற்கு பெர்லின் நகரமும் சேர்க்கப்பெற்றிருந்ததை மேற்கு நாடுகள் நிராகரித்தன.

மே மாதம் பதினைந்தாம் தேதி, கிழக்கு ஜெர்மனியில் மூன்றாவது மக்கள் காங்கிரசுக்குத் தேர்தல் நடைபெற்றது. "ஜனநாயக ஜெர்மன் குடியரசு" என்ற அரசியல்

சட்டத்தை அது அங்கீகரித்தது. கிழக்கு பெர்லின் நகரம் அக்குடியரசைச் சேர்ந்தது; அதன் தலைநகரமும்கூட.

ஆகஸ்டு மாதத்தில் மேற்கு ஜெர்மனியில் பொதுத் தேர்தல் நடைபெற்றது. டாக்டர் அடினேவர் பிரதம மந்திரியானார்.

அக்டோபர் மாதத்தில் கிழக்கு ஜெர்மனியில் குரோடிஹோல் பிரதம மந்திரியானார்.

1949ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ஆட்சிகால முடிவு ஒப்பந்தத்தில் மேற்கு நாடுகளின் ஹைகமிஷனர் கள் மூவரும், மேற்கு ஜெர்மனியின் பிரதம மந்திரி அடினேவரும் கையெழுத்திட்டனர். அதிலிருந்து இரண்டு ஜெர்மனிகள் தோன்றின.

இரண்டு ஜெர்மனிகளையும் ஒன்றாக இணைத்து, ஒரே நாடாக உருவாக்க வேண்டுமென்பதில் நான்கு வல்லரசுகளுக்குள் கருத்து வேற்றுமையே கிடையாது. ஆனால் எவ்வாறு இணைப்பது என்பதில்தான் அவர் களுக்குள்ளாகக் கடுமையான கருத்துவேற்றுமை.

ஜெர்மனி முழுவதையும் பொதுவுடைமை நாடாகச் செய்யவேண்டும் என்பது ருஷ்யாவின் விருப்பம்.

ஜெர்மனி முழுவதையும் ஜனநாயக நாடாகச்செய்து, ருஷ்யாவின் பொதுவுடைமைக் கொள்கை ஐரோப்பா வில் பரவாதிருப்பதற்கு, ஜனநாயக ஜெர்மனியை ஓர் அரணாக அமைக்க வேண்டும் என்பது மேற்கு நாடு களின் விருப்பம்.

ஆனால் ஜெர்மானியர் விருப்பம் என்ன என்பதைப் பற்றி எந்த வல்லரசும் கவலை கொள்ளவில்லை. அறிஞர்

பெர்ரண்ட் ரஸ்ஸல் கூறியபடி, ஹிட்லர் துவேஷப் பிரசாரத்திலேயே ஊறி வளர்ந்த ஜெர்மானியரை, ஜன நாயகவாதிகளாகவோ அல்லது பொதுவுடைமை வாதிகளாகவோ மாற்றுவது இயலாத காரியம்.

யுத்தம் முடிந்து பதினாறு ஆண்டுகளாகியும், ஜெர் மனியின் பிரச்னை இன்னும் தீரவில்லை.

* * *

ஜெர்மனியின் மொத்த நிலப்பரப்பு ஒரு லட்சத்து நாற்பத்தையாயிரம் சதுரமைல். அதில் மேற்கு ஜெர்மனி யின் நிலப்பரப்பு தொண்ணூற்று ஒன்பதாயிரம் சதுர மைல்; கிழக்கு ஜெர்மனியின் நிலப்பரப்பு நாற்பத் தாறாயிரம் சதுரமைல்.

ஜெர்மனியின் ஜனத்தொகை ஏழு கோடியே பதினைந்து லட்சம். ஐந்து கோடியே முப்பத்தைந்து லட்சம் பேர் மேற்கு ஜெர்மனியிலும், ஒரு கோடியே எண்பது லட்சம் பேர் கிழக்கு ஜெர்மனியிலும் உள்ளனர்.

பான் நகரத்தில் வெளிநாட்டுத் தூதர் காரியா லயங்கள் பல இருந்தன. அவற்றுள் இந்தியத் தூதர் காரியாலயமும் ஒன்று. ஐரோப்பாவில் உள்ள இந்தி யத் தூதர் காரியாலயங்களுள் அதுதான் பெரிது என் றும், அங்கேயுள்ள அதிகாரிகளின் எண்ணிக்கைதான் அதிகம் என்றும் அறிந்தேன். இந்தியத் தூதர் காரி யாலயம் சென்று பழைய நண்பர்கள் சிலரைச் சந்தித்தேன்.

பான் நகரிலிருந்து, பிராங்போர்ட் நகரம் சென்று, பின்னர் பெர்லின் செல்ல எண்ணினேன். பெர்லின் உள்நாட்டி லிருந்தபோதிலும், அது நம்மைப்போன்ற பிரயாணிகளுக்கு ஒரு தீவைப் போலதான்.

ஜெர்மனியைப் பகுதிகளாகப் பிரித்ததுபோலவே, பெர்லின் நகரத்தையும் நான்கு பகுதிகளாகப் பிரித்து, நான்கு வல்லரசுகளும் தங்கள் தங்கள் பகுதிகளைக் கண்காணித்தன. பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா கண்காணித்த பகுதிகளுக்கு மேற்கு பெர்லின் என்று பெயர். ருஷ்யா கண்காணித்த பகுதி கிழக்கு பெர்லின்.

மேற்கு பெர்லினைச் சுற்றியுள்ள எல்லாப் பகுதி களும் கிழக்கு ஜெர்மனியைச் சேர்ந்தவை. அதாவது கிழக்கு ஜெர்மனியின் எல்லைகளுக்குள் அமைந்திருந்தது மேற்கு பெர்லின்.

மேற்கு ஜெர்மனியிலிருந்து மேற்கு பெர்லின் செல்வதானல், கிழக்கு ஜெர்மனி வழியாகத்தான் செல்ல வேண்டும். ரயிலில் சென்ருலும் சரி, பஸ்ஸில் சென்ரு லும் சரி, கிழக்கு ஜெர்மனி வழியாகச் செல்வதற்குக் கிழக்கு ஜெர்மனி அதிகாரிகளிடமிருந்து அனுமதிச் சீட்டுப் பெறவேண்டும். ஜெர்மானியர்களைப் பொறுத்த வரை அனுமதிச் சீட்டுக் கிடைப்பதற்குச் சில நாள் தாமதமாகும்; என்ருலும் கிடைத்துவிடும். வெளிநாட் டாருக்கு அனுமதி கிடைப்பது மிக அரிது.

மேற்கு ஜெர்மனியிலிருந்து புறப்படும் ரயில், கிழக்கு ஜெர்மனி எல்லையை அடைந்ததும், ரயிலில் உள்ள எல்லாக் கதவுகளையும் பூட்டிவிடுவார்கள். மேற்கு பெர்லின் சென்ற பின்னர்தான் கதவுகளைத் திறப்பார்கள். அதுவரை யாரும் ஏறவோ இறங்கவோ முடியாது. பஸ்ஸில் சென்ருலும் அப்படியே. எனவே அவற்றை 'ஓடும் சிறைச்சாலை' என்று வேடிக்கையாகச் சொல்லுவதுண்டு.

"பெர்லினுக்கு ரயிலில் செல்ல அனுமதி கிடைக் குமா? உங்களுடைய செல்வாக்கை உபயோகித்து

நீங்கள் உதவிசெய்யமுடியுமா ?" என்று இந்தியத் தூதர் காரியாலய அதிகாரி ஒருவரைக் கேட்டேன்.

"அனுமதிக்கு எழுதிப்போடலாம். ஆனால் ஆறு மாதங்கள் ஆகும் பதில் கிடைக்க. அப்பொழுதும் அனுமதி கிடைக்குமென்ற நிச்சயமில்லை. நீங்கள் விமானத்தில் செல்வதே மேல்" என்றார். விமானத்தில் செல்வதற்குக் கிழக்கு ஜெர்மனி அதிகாரிகளின் அனுமதி தேவையில்லை.

பான் நகரிலிருந்து, பிராங்போர்ட் நகருக்கு ரயிலில் சென்றேன். ரயில் பிரயாணம் மிகவும் சௌகரியமாக இருந்தது. இரவு இரண்டு மணிக்கு பிராங்போர்ட் ரயில் நிலையத்தை அடைந்தேன். அது ஐரோப்பாவிலுள்ள மிகப் பெரிய ரயில் நிலையங்களுள் ஒன்று. ஜெர்மனியில் அமெரிக்கப் பகுதியின் தலைநகரமாக இருந்தது பிராங்போர்ட். அமெரிக்க ராணுவத்தின் தலைமைக் காரியாலயமும் அங்கே இருந்தது.

பல ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவில் மோட்டாரில் ஒன்றாகப் பிரயாணம் செய்த நால்வரில் ஒருவரான வால்த்தரைச் சந்திக்கவே பிராங்போர்ட் சென்றேன். அவருடைய விலாசத்தை, ஹாலந்தில் வால்ட் குடும்பத்தாரிடமிருந்து தெரிந்துகொண்டேன்.

ரயில் நிலையத்தில் அடிக்கடி ரயில்கள் வந்து சென்றன. இரவும் பகலும் நூற்றுக்கணக்கான மக்கள் வந்து போய்க்கொண்டிருந்தனர். ரயில் நிலையத்திலிருந்த பெரிய உணவுச்சாலை எப்பொழுதும் திறந்தேயிருந்தது. பிரயாணிகள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லி உதவிசெய்வதற்காகத் தனிக் காரியாலயம் இருந்தது. அங்கே எப்பொழுதும் இரண்டு அல்லது

மூன்று ஊழியர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவரிடம் சென்று ஹோட்டல்களைப்பற்றி விசாரித்தேன்.

"ரயில் நிலையத்தில் உள்ள பெரிய கூடத்துக்குச் சென்றால், அங்கு பெரிய பலகையில் இவ்வூர் ஹோட்டல்களின் பெயர்களையும், அவற்றின் விவரங்களையும் காணலாம்" என்றார்.

அவர் கூறியபடி பெரிய கூடத்துக்குச் சென்றேன். தூரத்திலிருந்து பார்த்தாலும்கூட படிப்பதற்கேற்ற பெரிய எழுத்துக்களில் குறிக்கப்பெற்ற ஹோட்டல்கள் அறிவிப்புப் பலகையைப் பார்த்தேன். ஹோட்டலின் பெயர், அதிலுள்ள அறைகளின் எண்ணிக்கை, இவ்வளவு தொகையிலிருந்து இவ்வளவு தொகைவரை தினசரி வாடகை, ரயில் நிலையத்திலிருந்து ஹோட்டலுக்குள்ள தூரம், ஹோட்டல் டெலிபோன் எண் முதலிய விவரங்களைக் குறித்திருந்தார்கள். அவ்வளவும் ஒரே வரியில் காணப்பெற்றன. அவ்வாறு முக்கியமான ஹோட்டல்களின் பெயர்களையெல்லாம் ஒன்றின் கீழ் ஒன்றாக எழுதி, அவற்றின் விவரங்களும் தந்திருந்தார்கள். எல்லாவற்றையும்விட மிகவும் முக்கியமானது, ஹோட்டல் பெயர் எழுதிய வரியின் கடைசியில் "அறை காலியிருக்கிறது" அல்லது "அறை காலி இல்லை" என்று அவர்கள் குறிப்பிட்டிருந்ததேயாகும். அறை காலியாகவோ அல்லது காலியில்லாமலோ இருக்கும் விவரத்தை, ஹோட்டல்காரர்கள் அடிக்கடி ரயில் நிலையத்துக்கு டெலிபோனில் தெரிவித்தார்கள். அதன்படி ரயில் நிலைய ஊழியர்கள் அந்த விவரங்களை அறிவிப்புப் பலகையில் குறித்தனர். அது பிரயாணிகளுக்கு மிகவும் சௌகரியமான ஏற்பாடு. இல்லையானால், வாடகை மோட்டாரில் ஹோட்டலுக்குச் சென்று, அங்கு இடமில்லை என்று கூறினால், அதுவும் இரவு இரண்டு

மணிக்கு நேர்ந்தால் சங்கடமாக இருக்கும். ஹோட்டலில் இடம் இருக்கிறது என்று தெரிந்தாலும், அவர்களுக்கு டெலிபோன் செய்து, நமது பெயரைப் பதிவு செய்யும்படிக் கூறிவிட்டுச் செல்வதுதான் நல்லது. நமக்கு முன்னதாக, நம்மைப்போலவே சிலர் அங்கு சென்றுவிட்டால், நாம் இடமில்லாமல் திண்டாட நேரிடலாம்.

ஹோட்டல் விவரங்களைப் படித்த பின்னர், விடிவதற்கு மூன்றரை மணி நேரந்தானே இருக்கிறது, ஹோட்டலுக்குப் போவதா அல்லது ரயில் நிலையத்திலேயே பொழுதைப் போக்குவதா என்று யோசித்தேன்.

சிறிது நேரத்தில் ஒரு ஜெர்மன் இளைஞர் என்னிடம் வந்து சுத்தமான ஆங்கிலத்தில் பேசினார்.

"ஜெர்மானியராகிய நீங்கள் இவ்வளவு நன்றாக ஆங்கிலம் பேசுகிறீர்களே, சென்றமுறை இந்த நாட்டுக்கு வந்தபொழுது, ஆங்கிலம் தெரிந்தவர்களைக் காண்பதே அரிதாக இருந்தது" என்றேன்.

"அமெரிக்க ராணுவ ஆட்சிக்குப் பின்னர் பலர் ஆங்கிலம் கற்றுக்கொண்டனர். மேற்கு ஜெர்மனியில் பலர் நன்றாக ஆங்கிலம் பேசுவார்கள்" என்றார் அவர்.

அவர் வெளியூர்க்காரர். நான் வந்த ரயிலிலேயே அவரும் வந்தவர்.

"ஹோட்டலுக்குப் போவதா அல்லது வேண்டாமா? என்று யோசித்துகொண்டிருக்கிறேன்" என்றேன்.

அதற்கு அவர், "பிராங்போர்ட் ஒரு வியாபார ஸ்தலம். மற்ற ஊர்களைக் காட்டிலும் ஹோட்டல் வாடகை இங்கே மிக அதிகம். ஹோட்டலில் இடம்

வாடகைக்குப் பிடித்தால், காலே ஆகாரமும் அங்கே சாப்பிடவேண்டுமென்பது கட்டாயம். காலே உணவு மட்டம்; அன்றியும் அநியாய விலே. காலே உணவு சாப்பிடவில்லேயானுல் ஹோட்டல்காரருக்கு நஷ்டம் உண்டாகுமல்லவா? அதனே ஈடு செய்வதற்காக நம்மிடம் ஒன்று அல்லது ஒன்றரை *மார்க் வசூலிப் பார்கள். அதனேடு பத்து அல்லது பதினைந்து சத விகிதம் இனும் வேறு சேர்ப்பார்கள். சாதாரண ஹோட்டலுக்குச் சென்ருல் பன்னிரண்டு முதல் பதினேந்து மார்க் ஆகும்.

"பொழுது விடிவதற்கு இன்னும் மூன்று மணி நேரந்தான் இருக்கிறது. இப்பொழுது ஹோட்டலுக்குச் சென்ருல் காலே ஆறு மணிவரைக்கும் — அதாவது சுமார் மூன்று மணி நேரத்துக்கு — ஒரு நாள் வாடகை வசூலிப்பார்கள். நாளேக் காலே ஆறு மணியிலிருந்து மறுநாள் வாடகை தொடங்கும். மூன்று மணி நேரத் துக்காகப் பதினேந்து மார்க் செலவிடுவானேன். ரயில் நிலேயத்தில் பிரயாணிகள் காத்திருக்கும் இடத்தில் உட்கார்ந்து சிறிது கண்ணயர்ந்தால் போதும். அல்லது உணவுச்சாலேயில் உட்கார்ந்து காப்பி சாப்பிட்டு, அங் கேயே மணிக்கணக்காக உட்கார்ந்து பத்திரிகை படிக்க லாம். எதற்காக இந்த அகால வேளேயில் ஹோட்ட லுக்குச் சென்று பணத்தை வீணுக்கவேண்டும். நானும் ஹோட்டலுக்குச் செல்லப்போவதில்லே" என்ருர்.

அவர் கூறிய யோசனேப்படி, எனது சாமான்களே ரயில் நிலேயத்தில் பத்திரப்படுத்திவிட்டு, உணவுச்சாலே யில் ஒரு மணி நேரம் செலவிட்டேன். அவரும் என்

* மார்க் என்பது ஜெர்மனியின் நாணயம். மேற்கு ஜெர்மன் மார்க்கின் மதிப்புச் சுமார் ஒரு ரூபாய் பன்னிரண்டு நயா பைசா.

னுடன் இருந்தார். ஜெர்மனியைப்பற்றி அவருடன் மீண்டும் பேசினேன்.

"கஷ்டம் வந்த காலத்தில்தான் ஜெர்மானியர் விடா முயற்சியுடன் உழைப்பார்கள். சுகமான காலத்தில் சோம்பேறிகளாய் இருப்பார்கள். யுத்தத்திற்குப் பிறகு மேற்கு ஜெர்மனியின் தொழில் அபிவிருத்தி மிகவும் ஆச்சரியமானது. யுத்தத்திற்குப்பின் இந்நாட்டில் ஒரு வேலை நிறுத்தம்கூட ஏற்பட்டது கிடையாது. இதுதான் இந்நாட்டு மக்களின் குணாதிசயம்" என்றார்.

"உங்களுடைய லட்சியம் என்ன?" என்று அவரைக் கேட்டேன்.

"அமெரிக்கா சென்று குடியேறுவது" என்று உடனே பதில் கூறினார்.

பின்னர் ரயில் நிலையத்தைவிட்டு வெளியே சென்று சில பெரிய வீதிகளின் வழியாகத் தனியே நடந்தேன். அந்த அகாலத்திலும் பல மதுபானக் கடைகள் திறந்திருந்தன. கடைகளின் உள்ளே இரைச்சலும் புகையும் நிறைந்திருந்தன. அமெரிக்க ராணுவத்தினரும் விலைமாதரும் வீதிகளில் கைகோத்து நடந்துசென்றனர். குடி மயக்கத்தால் சில ஆண்களும் பெண்களும் பிதற்றினர்.

ரயில் நிலையத்திலேயே குளிப்பதற்கு வெந்நீரும் மற்ற எல்லாச் சுகாதார வசதிகளும் இருந்தன. அதிகாலையிலேயே காலை உணவையும் முடித்துக்கொண்டேன். வால்த்தர் தமது காரியாலயத்துக்குச் செல்லுமுன்னர் அவரை அவர் வீட்டிலேயே சந்திக்க விரும்பினேன். காலை எட்டு மணிக்கே குறிப்பிட்ட விலாசத்தை அடைந்தேன். அது அவர் வீடு அன்று என்றும்

வால்த்தர் வேலை செய்யும் காரியாலயம் என்றும் காரியால யத்தைக் காலை பத்து மணிக்குத்தான் திறப்பார்கள் என்றும் அங்கிருந்த காவற்காரர் கூறினர்.

பிராங்போர்ட், மெயின் நதிக் கரையில் அமைந் துள்ள பழமையான பெரிய நகரம். உலகப் புகழ்பெற்ற ஜெர்மானியக் கவிஞரான கோதே (Gothe) அங்கு பிறந்தவர். அவர் பிறந்த வீட்டைப் புதுப்பித்துப் பாது காத்து வந்தார்கள். அது இலக்கிய ரசிகர்களின் யாத் திரை ஸ்தலம்.

ஊருக்கு நடுவே சேதமடைந்த ஒரு பெரிய கட்டி டத்தைப் பார்த்தேன். மேல்கூரைமுழுவதும் குண்டு வீச்சால் விழுந்துவிட்டது. அதுதான் அவ்வூரின் பிரசித்திபெற்ற சங்கீத நாடக மேடை (Opera House). அதனைப் பழுதுபார்த்துக் கட்டுவதற்கு அவ்வூர்வாசிகள் பல ஆண்டுகளாக முயன்றுவந்தனர். யுத்தத்தால் நாசமான பாழடைந்த கட்டிடங்கள் பலவற்றைப் பார்த் தேன். சேதமடைந்த கட்டிடங்கள் சிலவற்றில், தாற்கா லிகமான செளகரியங்களை அமைத்துக்கொண்டு மக்கள் வாழ்ந்தனர்.

ஆனல் வால்த்தர் வேலைசெய்த இடம் புதிய மூன்று மாடிக் கட்டிடம். அவ்வூரிலிருந்த மிகப் பெரிய கட்டிடங் களுள் அது ஒன்று. ஜெர்மனியிலுள்ள மிகப் பிரபல மான எஃகுத் தொழிற்சாலையின் தலைமைக் காரியாலயக் கட்டிடம் அது என்று அறிந்தேன்.

காலை பத்து மணிக்கு அங்கே சென்றேன். நான் அங்கு செல்லும் விவரத்தை வால்த்தருக்கு முன் கூட்டியே தெரிவிக்கவில்லை. எதிர்பாராதவிதமாக அவ ரைச் சந்தித்து, அவருக்கு ஆச்சரியத்தை உண்டாக்க வேண்டுமென்பது எனது ஆசை. ஆனல் அவ் ஆசை

நிறைவேறவில்லை. அதற்கென இருந்த வேலைக்கார ரிடம் சென்று, நான் வந்திருக்கும் விவரத்தை வால்த்த ரிடம் தெரிவிக்கும்படி கூறினேன். அவர் உடனே வால்த்தருக்கு டெலிபோன் செய்தார்.

“வால்த்தர் பாரிஸ் சென்றிருக்கிறார். திரும்புவதற்கு இரண்டு வாரங்களாகும்” என்றார் வேலைக்காரர்.

வால்த்தரின் காரியதரிசியுடன் பேசினேன். அந்த அம்மாள் மேலே வரும்படி கூறினாள். அவர் முதலில் என்னை ஒரு வியாபாரி என்று கருதினார். பின்னர் வால்த்தரின் நண்பர் என்று தெரிந்ததும் மிகவும் அக்கறை காட்டினார்.

“வால்த்தர் இப்பொழுது பாரிஸில் இருக்கிறார். இம்மாதம் பதினாறும் தேதி ஹாம்பர்க்கில் நடைபெறும் ஒரு மகாநாட்டுக்குச் செல்வார். பதினேழாம் தேதி இங்கு வந்துவிடுவார். இன்று அல்லது நாளை பாரிஸிலிருந்து எனக்கு டெலிபோன் செய்வார். அப்பொழுது தாங்கள் வந்த விவரத்தைக் கூறுகிறேன்” என்றார் அவர்.

“ஹாம்பர்க் நகரில் பதினாறும் தேதி சந்திப்பதுதான் எனக்குச் சௌகரியமானது. அவருடன் டெலிபோனில் பேசி, உறுதிப்படுத்தியபின், பெர்லினினுக்கும், ஹாம் பர்க்குக்கும், இந்திய ஸ்தானீகர் விலாசத்துக்கு எனக்குக் கடிதம் எழுதுங்கள்” என்று அவரிடம் கூறி விடை பெற்றேன்.

* * *

வெளிநாடுகளில் பிரயாணம் செய்யும்பொழுது, நாணயமாற்றுதல் சம்பந்தமான சங்கடங்கள், யுத்தத்திற் குப் பிறகு மிகவும் அதிகரித்துவிட்டன. என்னிடமிருந்த பவுன் டிராவலர் செக்குகள் இங்கிலாந்திலும், கானடா

தவிர, ஏனைய காமன்வெல்த் நாடுகளிலும், பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலும்தான் செல்லுபடியாகும். அவற்றை ஐரோப்பாவில் மாற்றவேண்டுமானால், அவற்றின் பின்புறத்தில், எந்தெந்த நாடுகளில் மாற்றவேண்டுமோ அந்தந்த நாடுகளின் பெயர்களைக் குறிப்பிட்டு அனுமதி பெறவேண்டும். அதுவும் குறிப்பிட்ட அளவு தொகைதான். அப்பொழுது ஆங்கிலேயர்களுக்கு, ஆள் ஒன்றுக்கு ஐம்பது பவுன்தான் வெளிநாட்டுப் பிரயாணத்திற்காக அனுமதித்தார்கள். அதுவும் ஆண்டுக்கு ஒரு முறைதான் பிரயாணம் செய்யலாம். என்னிடம் ஐரோப்பாவில் மாற்றக்கூடிய பவுன் செக்குகள் கிடையா.

அமெரிக்க டாலர் செக்குகளை எந்த நாட்டில் வேண்டுமானாலும் மாற்றலாம். அவற்றுக்குள்ள மதிப்பே தனி. என்னிடம் மீதமாக இருந்த அமெரிக்க டாலர் செக்குகளை மாற்றித்தான் ஐரோப்பாவில் பிரயாணம் செய்தேன்.

இங்கிலாந்தில் பவுன் செக்குகளை மாற்றி, வெளிநாடு செல்லப் பிரயாணச் சீட்டு வாங்கலாம். அதற்குத் தடை கிடையாது. ஐரோப்பாப் பிரயாணத்தில் பெர்லின் நகருக்குச் செல்வதா, இல்லையா என்பதைக் குறித்து நான் முடிவு செய்யவில்லை. என்றபோதிலும் இங்கிலாந்தில் தாமஸ் குக் கம்பெனியில், ஹாம்பர்க்கிலிருந்து விமானத்தில் பெர்லின் சென்று திரும்புவதற்கு ஒரு பிரயாணச்சீட்டு வாங்கினேன். அதில் இந்தத் தேதியில் பிரயாணம் செய்யவேண்டுமென்று குறிப்பிடவில்லை. அதனை வாங்கியதால் நாம் பிரயாணம் செய்துதான் தீரவேண்டும் என்ற கட்டாயமில்லை. அதனை நாம் உபயோகப்படுத்தினால், வெளிநாட்டுப் பிரயாணத்திற்காகக் கிடைக்கும் குறிப்பிட்ட அளவு தொகையைப் பிரயாணச்



பிராங்க்போர்ட்

சீட்டு வாங்குவதற்குச் செலவிடாமல், வேறு செலவுகளுக்கு உபயோகப்படுத்திக்கொள்ளலாம். நாம் பிரயாணம் செய்யவில்லை என்ருல் நமக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. நாம் யாரிடம் பிரயாணச் சீட்டு வாங்கினேமோ அவர்களிடமே அதைத் திருப்பிக் கொடுத்தால் நாம் செலுத்திய பணம் முழுவதையும் தந்துவிடுவார்கள்.

மேற்கு ஜெர்மனியின் பல நகரங்களிலிருந்து பெர்லினுக்குத் தினந்தோறும் பலமுறை விமானங்கள் சென்றன. எல்லா நகரங்களையும்விட ஹாம்பர்க்கிலிருந்து பெர்லின் செல்வதுதான் சிக்கனமானது; சீக்கிரமாகவும் செல்லலாம். பெர்லினுக்கு எத்தனையோ நாட்டு விமானங்கள் சென்று திரும்பின. அவற்றில் 'பிரிட்டிஷ் யூரோப்பியன் ஏர்வேஸ்' என்ற கம்பெனி விமானத்தில் செல்லப் பிரயாணச் சீட்டு வாங்கியிருந்தேன். அது ஐரோப்பாவில் மிகவும் பிரபலமானது. அதனுடைய விமானங்கள் சிறியவைதாம்; ஆனல் பிரயாணிகளைப் பத்திரமாகக் கொண்டுபோய்ச் சேர்ப்பதிலே அது அடைந்திருந்த புகழ் அதிகம்.

ஹாம்பர்க்கிலிருந்து பெர்லினுக்கு உள்ள தூரத்தைவிட, பிராங்போர்ட்டிலிருந்து பெர்லினுக்கு உள்ள தூரம் அதிகம். எனவே பிரயாணக் கட்டண விகிதப்படி, எனது பிரயாணச் சீட்டைக்கொடுத்து அதிகப்படியாக நாற்பது மார்க் (சுமார் நாற்பத்தைந்து ரூபாய்) கொடுக்க நேரும்.

பிராங்போர்ட்டிலிருந்த கம்பெனியின் கிளைக்காரியாலயத்துக்குச் சென்றேன். அங்கிருந்த ஜெர்மன் இளைஞர் என்னை மலர்ந்த முகத்துடன் வரவேற்ருர். எனது நிலைமையை விளக்கி அன்றே பெர்லின் செல்ல விரும்புவதாகக் கூறினேன்.

“இங்கிருந்து பெர்லினுக்கு எங்கள் விமானம் செல்வதில்லை. இன்றிரவு எட்டு மணிக்குப் புறப்படும் பான் - அமெரிக்க விமானத்தில் தாங்கள் செல்ல விரும்புகிறீர்களா ?” என்ருர்.

ஏற்பாடு செய்யும்படிக் கூறினேன். உடனே அவர் டெலிபோன் செய்தார். “உங்களுக்கு அதிர்ஷ்டம். இடம் கிடைத்துவிட்டது” என்ருர்.

எனது அதிர்ஷ்டம் அதோடுமட்டும் நிற்கவில்லை. அவர் ஏதோ புள்ளி விவரங்களைக் கூட்டிக் கழித்து, “ஒன்றரை மார்க் (சுமார் ஒன்றே முக்கால் ரூபாய்) நீங்கள் அதிகமாகச் செலுத்திஞல் போதும். ஆஞல் ஒன்று. பெர்லினிலிருந்து தினந்தோறும் காலை ஏழு மணிக்குப் புறப்படும் விமானம் ஒன்றில்தான் நீங்கள் பெர்லின் செல்லவேண்டும்” என்ருர்.

என்ஞல் அதை நம்பவே முடியவில்லை. “கணக்கில் ஏதேனும் தவறுதல் ஏற்பட்டிருக்கலாம். குறைந்தது நாற்பது மார்க் அதிகம் செலுத்த வேண்டியிருக்குமே ?” என்றேன்.

அதற்கு அவர், “இந்த நாட்டில் எல்லா விமானக் கம்பெனிகளும் ‘இரவு சர்வீஸ்’ என்று ஒன்று நடத்துகிருர்கள். ஒரே கம்பெனியைச் சேர்ந்த விமானங்கள் ஒருநாளில் ஒரே ஊருக்குப் பலதடவை செல்லுமல்லவா? தினந்தோறும் குறிப்பிட்ட நேரத்தில் செல்லும் ஒரு விமானத்தை ‘இரவு சர்வீஸ்’ என்றழைக்கிருர்கள். இவற்றுக்கும் மற்ற விமானங்களுக்கும் எந்தவிதமான வித்தியாசமும் இல்லை. ஆஞல் கட்டணத்தில்மட்டும் சுமார் இருபது சதவிகிதம் குறைவு. இவற்றில் கூட்டம் எப்பொழுதும் அதிகமாய் இருக்கும். இடம் கிடைப்பது

கஷ்டம். இவை இரவில்தான் செல்லவேண்டுமென்ற கட்டாயமில்லை. உதாரணமாக பெர்லினிலிருந்து நீங்கள் ஹாம்பர்க் செல்லவேண்டிய 'இரவு சர்வீஸ்' விமானம், தினந்தோறும் காலை ஏழு மணிக்குத்தான் புறப்படுகிறது.

"இந்நாட்டு அரசியல் காரணமாகப் பலர் விமானத்தில் பிரயாணம் செய்ய வேண்டிய கட்டாய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அத்தகையோரில் பொருளாதார வசதியில்லாதவர்கள் எத்தனையோ பேர் இருப்பார்கள். அவர்களுக்கு உதவிசெய்யும் நோக்கத்துடன் தான் இந்த 'இரவு சர்வீஸ்' நடைபெற்றுவருகிறது. வெளி நாடுகளில் உள்ள பிரயாண ஏஜண்டுகள் இந்த விவரங்களைப் பொதுவாக யாத்திரிகர்களிடம் சொல்லுவதில்லை. வெளிநாட்டிலிருந்து வந்திருக்கும் தங்களுக்கு எத்தகைய அசௌகரியங்களும் உண்டாகக் கூடாது என்று கருதி என்னால் இயன்ற உதவியைச் செய்தேன். இது எனது கடமை" என்றார்.

பிரயாணத்தின்போது நாற்பது மார்க் அதிகமாகச் செலவிடுவது என்பது சிரமமன்று; ஆனால் நிச்சயமாகச் செலவழிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றிருந்த அத்தொகை—அதிலும் கையிலுள்ள சுருக்கமான அமெரிக்க டாலர்களை மாற்றித்தான் செலவு செய்ய வேண்டுமென்றிருந்த நிலையில்—மீதமானது மகிழ்ச்சியைக் கொடுத்தது. அதனினும் மகிழ்ச்சியைக் கொடுத்தது, பிறருக்கு அன்புடன் உதவிபுரியும் அருங்குணம் வாய்ந்த அந்த இளைஞரைச் சந்தித்தது.

* * *

விமானம் புறப்படுகிறவரையில் எனக்கு வேறு வேலை கிடையாது—ஊர் சுற்றிப் பார்ப்பதைத் தவிர.

ரயில் நிலையத்துக்கு எதிரே டிராம் வண்டிக்காகக் காத்திருந்தேன். அப்பொழுது ஒரு ஜெர்மானியர் என்னிடம் வந்து மிகவும் மெதுவான குரலில், "பவுனுக்கு இருபது மார்க் தருகிறேன்" என்றார். அவருடைய பேச்சில் நான் அக்கறை காட்டவில்லை. "டாலருக்கும் நல்ல விலை தருகிறேன்" என்றார். அவரைச் சற்று கடுமையாகப் பார்க்கவே, அவர் அப்பால் சென்று விட்டார்.

பவுன் நோட்டுக்கும் டாலர் நோட்டுக்கும் ஜெர்மனியில் நல்ல கிராக்கி. சட்டப்படியான நாணயமாற்றின் படி ஒரு பவுன் மதிப்பு சுமார் பன்னிரண்டரை மார்க். அவர் இருபது மார்க் தருவதாகச் சொன்னார். ஜெர்மன் நாணயத்துக்கு வெளிநாட்டில் மதிப்பில்லை. வெளி நாடுகளுக்குச் செல்ல விரும்பிய ஜெர்மானியர்கள், தங்கள் அரசாங்கத்திடமிருந்து பவுனோ அல்லது டாலரோ வாங்க அனுமதி பெறுவது கஷ்டம். எனவே அதிக விலை கொடுத்து, மதிப்புள்ள வெளிநாட்டு நாணயங்களை வாங்கி, கள்ளத்தனமாகக் கடத்திச் சென்றார்கள்.

ஜெர்மனிக்குச் செல்லும் அந்நியர்கள் தங்கள் பணத்தைப் பாங்குகளிலோ அல்லது அரசாங்க அதிகாரம்பெற்ற இடங்களிலோதான் மாற்ற வேண்டும். கள்ள வியாபாரிகளிடம் மாற்றுவது சட்டவிரோதமானது. லாபத்துக்கு ஆசைப்பட்ட அந்நியர் பலர் கள்ள வியாபாரிகளின் வலையில் சுலபமாகச் சிக்கிவிடுவார்கள். கள்ள வியாபாரிகள் இரவு நேரங்களில்தான், வீதியில் செல்லும் அந்நியர்களை அணுகி ரகசியமாகப் பேசிப் பேரம்செய்வார்கள். அந்நியர்கள் பல சமயங்களில் பத்து, இருபது பவுன் அல்லது நூற்றுக்கணக்கான டாலர்களை மாற்றுவார்கள். கள்ள வியாபாரிகள்

அவற்றைப் பெற்றுக்கொண்டு, அதற்குப் பதிலாக ஜெர்மன் நோட்டுக்களைக் கொடுப்பார்கள். இரவில் அதிக வெளிச்சமும், போலீஸ்காரரும் இல்லாத இடத்தில்தான் அந்த வியாபாரம் அவசரம் அவசரமாக நடைபெறும். அந்நியர்கள் ஜெர்மன் நோட்டுக்களை வாங்கிக்கொண்டு மிக மகிழ்ச்சியுடன் தங்கள் ஹோட்டல்களுக்குத் திரும்புவார்கள். அந்த நோட்டுக்கள் உண்மையான நோட்டுக்களாகவும் இருக்கலாம்; அல்லது கள்ள நோட்டுக்களாகவும் இருக்கலாம். கள்ள நோட்டுக்கள் செலாவணியாகமாட்டா. அந்நியர்கள் பலர் அவ்வாறு பலமுறை ஏமாந்து போயிருக்கின்றனர். அவர்கள் அந்த விவரங்களை யாரிடமும் சொல்ல முடியாமல், திருடனுக்குத் தேள் கொட்டியதைப் போலச் சும்மா இருந்துவிடுவார்கள்.

பிராங்போர்ட் விமான நிலையம் பெரிது. விமானக் கம்பெனியிலிருந்து விமான நிலையத்துக்குப் பிரயாணிகளைப் பஸ்ஸில் அழைத்துச் சென்றனர். பஸ்ஸில் ஏறியபொழுது பஸ் கட்டணம் வசூலித்தனர்.

விமானத்திடலில், ‘பான் – அமெரிக்கன்’ பெரிய விமானம் வந்து நின்றது. பிரயாணிகளின் எண்ணிக்கை சுமார் எண்பது. ரயிலில் மூன்ருவது வகுப்புப் பெட்டிபோல் அவ்வளவு கூட்டம். ஒன்றேகால் மணி நேரத்தில் விமானம் பெர்லினை அடைந்தது.

பிரயாணிகளில் பெரும்பாலோர் ஜெர்மானியர். அவர்கள் ஒருவருடன் ஒருவர் பேசாமலிருந்ததைக் கொண்டே, அவர்கள் ஜெர்மானியர் என்பதைச் சுலபமாகக் கண்டுபிடிக்கலாம். என்னருகில் இருந்தவருடன் பேச முயன்றேன். அவர் கூடியவரை நன்ருக ஆங்கிலம் பேசினர். வியாபாரத்துக்காகப் பெர்லின்

செல்வதாகவும், நாலைந்து தினங்களில் திரும்புவதாகவும் கூறினர்.

“பெர்லினில் அதிகச் செலவில்லாமல் தங்குவதற்கு நல்ல இடம் எங்கே இருக்கிறது?” என்று கேட்டேன்.

“பெர்லினில் இடம் கிடைப்பது சுலபம். அது பழைய பெர்லின் அன்று; அதற்கு இப்பொழுது வியாபார முக்கியத்துவம் கிடையாது. நல்ல ஹோட்டல்கள் பல இருக்கின்றன. அதைத் தவிர, ‘பென்ஷன்’ (Pension) என்றழைக்கப்பெறும் வசதியான விடுதிகள் ஏராளம். என்னுடன் வாருங்கள். நான் வழக்கமாகத் தங்கும் விடுதியில் இடமிருந்தால் அங்கேயே தங்கலாம். இல்லையேல் அருகில் எத்தனையோ உள்ளன. ஏற்பாடு செய்கிறேன்” என்ருர் அவர்.

ஒரு நாட்டில், உள்நாட்டுக்குள்ளே ஓர் ஊரிலிருந்து மற்ருேர் ஊருக்கு விமானப் பிரயாணம் செய்தால், எந்த விதமான சோதனையும் இல்லாமல், எல்லாப் பிரயாணிகளையும் இறங்கிச் செல்ல அனுமதிப்பதுதான் வழக்கம். ஆனல் பெர்லின் அதற்கு விதிவிலக்கு. அங்கே செல்கிறவர்கள் யாராயிருந்தாலும், அவர்கள் ஜெர்மானியர்களாகவே இருந்தாலும் குடியேற்றப் போலீஸ் அதிகாரிகளின் அனுமதி பெற்றுத்தான் உள்ளே செல்லலாம். அவ்வாறே அவர்கள் அனுமதிபெற்றுத்தான் வெளியேறலாம். எல்லோருடைய பாஸ்போர்ட்டுகளையும் சரி பார்த்து முத்திரையிட்டனர். அந்தச் சடங்குகள் சில விநாடிகளில் முடிந்துவிட்டன.

உலகிலுள்ள மிகப் பெரிய விமான நிலையங்களுள் ஒன்று பெர்லின். ஊருக்கு நடுவே அமைந்துள்ள

அந்த நிலையத்தில் தினந்தோறும் நூற்றுக்கணக்கான விமானங்கள் இரவு, பகல் எந்நேரத்திலும் வந்துபோய்க் கொண்டிருந்தன. ஆயிரக்கணக்கான மக்கள் விமானங்களில் பிரயாணம் செய்தனர்.

இப்பொழுது விமானப் பிரயாணம் ரயில் பிரயாணம்போலச் சர்வ சாதாரணமாகிவிட்டது. விமானப் பிரயாணிகளின் சாமான்களுக்குக் காகித அட்டையொன்றில் பிரயாணியின் பெயரையும், செல்லவேண்டிய ஊரையும் எழுதி, பெட்டியில் கட்டித் தொங்கவிட்டார்கள். அதில் ஒரே எண்ணை இரு பகுதிகளில் அச்சிட்டிருந்தார்கள். அதில் ஒரு பகுதியைக் கிழித்துப் பிரயாணிகள் கையில் கொடுத்தார்கள். போய்ச் சேருமிடத்தில், அந்தப் பகுதிச் சீட்டைக் கொடுத்துப் பிரயாணிகள் தங்கள் சாமான்களைப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

“ நாம் செல்லவேண்டிய விடுதி, கடைத் தெருவுக்கு அருகில் இருக்கிறது. வாடகை மோட்டாரில் சென்றால் ஐந்து மார்க் கேட்பார்கள். பஸ்ஸில் சென்றால் செலவு குறைவு ” என்றார் கூடவந்த ஜெர்மானியர்.

இருவரும் பஸ்ஸில் சென்றோம். எங்களுடன் விமானத்தில் வந்த பலர் அதே பஸ்ஸில் ஏறினர். அது மிகவும் வசதியான டவுன் பஸ். கட்டணம் முப்பத்தைந்து காசுதான்.

பிரயாணிகளின் சௌகரியத்துக்காகவே அது கட்டப்பெற்றிருந்ததால், பெரிய சாமான்களை வைப்பதற்குத் தனி இடம் ஒதுக்கியிருந்தனர். அங்கு வைக்கப்பெறும் சாமான்களுக்குப் பஸ் பிரயாணச் சீட்டுவழங்குபவர் (Conductor) தனிக் கட்டணம் வசூலித்தார். சில பிரயாணிகள் தாங்கள் கொண்டுவந்த பெரிய பெட்டிகளைத்

தாங்கள் உட்கார்ந்த ஆசனத்தின் கீழே திணித்துவிட்டனர். அவர்கள் ஆசனத்தில் உட்கார்ந்ததும், அவர்கள் அணிந்திருந்த கனத்த நீளமான கம்பளி மேல் சட்டைகள், அந்தப் பெட்டிகளைப் பெரும்பகுதி மறைத்து விட்டன. அவர்களில் ஒருவர் கண்ணை மூடிக்கொண்டு தூங்குவதுபோலப் பாவனை செய்தார். அது, தாம் சாமர்த்தியமாக மறைத்துவைத்திருந்த பெரிய பெட்டி சீட்டுவழங்குபவர் கண்களுக்குத் தெரியக்கூடாது என்று அவர் பிரார்த்தனை செய்ததுபோலத் தோன்றியது! பிரயாணிகளுடைய சாமர்த்தியங்களைக் கண்டுகொள்ளும் சாமர்த்தியம் சீட்டுவழங்குபவருக்கு இருக்குமல்லவா? அவர் பிரயாணிகளின் கம்பளிச் சட்டைகளை விலக்கி, ஆசனங்களுக்குக் கீழே திணிக்கப்பெற்றிருந்த பெட்டிகளைக் கண்டுபிடித்துக் கட்டணம் வசூலித்தார்.

எனது பெட்டி பெரிது. சாமான்கள் வைப்பதற்காக ஒதுக்கப்பெற்றிருந்த இடத்தில் அதனை வைத்திருந்தேன். சீட்டுவழங்குபவர் கேட்டபோது அது எனது பெட்டி என்று கூறினேன். ஆனால் அவர் என்னிடம் கட்டணம் வசூலிக்கவில்லை. அதே பஸ்ஸில் பல முறை பிரயாணம் செய்திருக்கிறேன். ஒரு முறை மட்டும் இருபத்தைந்து காசு வசூலித்தார். அத்தொகைக்குப் பிரயாணச் சீட்டு ஒன்றைக் கொடுத்தார். சிறிய சாமான்களாய் இருந்தால் விட்டுவிடலாம், பெரிய சாமான்களாய் இருந்தால் கட்டணம் வசூலிக்கலாம். பெட்டி சிறியதா அல்லது பெரியதா என்று பிரயாணிக்கும் சீட்டு வழங்குபவருக்கும் அபிப்பிராய பேதமேற்பட்டால், அந்த விஷயத்தில் சீட்டுவழங்குபவர் கூறும் தீர்ப்பே முடிவானது.

பஸ் நின்ற இடத்திற்கும் நாங்கள் சென்றடைந்த விடுதிக்கும் ஒரு பர்லாங் தூரம். பெரிய கட்டிடத்தின்

ஒரு பகுதியை வாடகைக்கு எடுத்துக்கொண்டு ஒரு குடும்பத்தார் வசித்தார்கள். அப்பகுதியில் ஐந்து அல்லது ஆறு அறைகள் இருந்தன. அவற்றைத் தவிர பெரிய கூடம், சமையற்கட்டு, குளிக்கும் அறைகள் முதலிய மற்ற வசதிகளும் இருந்தன. குடும்பத்தார் தாங்கள் வசிப்பதற்காக ஒன்று அல்லது இரண்டு அறைகளை ஒதுக்கிக்கொண்டு மற்ற அறைகளை வாடகைக்கு விட்டார்கள். உயர்தர விடுதிகளில் உள்ள அறைகள் சுத்தமாகவும், பெரிதாகவும், காற்றோட்டமுள்ளதாகவும் இருந்தன. அந்த அறைக்குத் தினமொன்றுக்கு ஆறு அல்லது ஏழு மார்க் வாடகை. தினந்தோறும் காலை ஆகாரம் அங்கேதான் கட்டாயமாகச் சாப்பிடவேண்டும். அதற்குத் தனியாக இரண்டு மார்க். மொத்தக் கட்டணத்தில், சட்டப்படி பத்துச் சத விகிதம் அதிகமாகச் சேர்த்துக் கொடுக்கவேண்டும். அது அவர்கள் நமக்குச் செய்யும் பணிக்காக. விடுதிகளில் அதிக நாள் தங்கினால், நாள் வாடகையில் சிறிது குறைப்பதோடு, பத்துச் சத விகித அதிகத் தொகையை வசூலிக்காமல் விட்டுவிடுவார்கள்.

அறைச் சாவி, விடுதியின் முகப்புச் சாவி, மாளிகையின் பெரிய வாயிற் கதவுச் சாவி, மின்சார 'லிப்டு'ச் சாவி ஆகியவற்றில் ஒவ்வொன்றைச் சேர்த்து, ஒரு வளையத்தில் கோர்த்து நம்மிடம் கொடுத்துவிடுவார்கள். நினைத்தபொழுது வரலாம்; போகலாம். ஹோட்டலைப் போல அதிகச் செலவோ, அல்லது இரவு முழுதும் சத்திரம்போல ஆள் வந்துபோய்க்கொண்டிருப்பதோ அங்கிராது. மிகவும் அமைதியாக இருக்கும். பொதுவாக அத்தகைய விடுதிகள், ஒரு பெரிய மாளிகையில் மூன்றாவது அல்லது நான்காவது மாடியில் இருந்தன.

சில மாளிகைகளில் ஒன்றுக்கு மேற்பட்ட விடுதிகளும் இருந்தன.

நாங்கள் சென்ற விடுதியில் ஒரே ஓர் அறை தான் அப்பொழுது காலியாக இருந்தது. கூடவந்த ஜெர்மானியர் வழக்கமாகத் தங்கும் இடம் அது. எனவே அவரை அங்கே தங்கும்படிக் கூறினேன். அந்த விடுதியை நடத்திய அம்மாள் அதே வீதியிலுள்ள வேறொரு விடுதிக்கு டெலிபோன் செய்தார். இடம் இருப்பதாகப் பதில் கிடைத்தது. அவருடைய மகள் என்னைப் புது விடுதிக்கு அழைத்துச்சென்று அறிமுகப் படுத்தினர்.

புதுவிடுதியில் எனக்குச் சௌகரியமான இடம் கிடைத்தது. காலையில் எழுந்ததும் ஜன்னல் வழியாகப் பார்த்தேன். எதிரே வீடு ஒன்றும் இல்லை. ஒரு காலத் தில் அந்த இடத்தில் கட்டிடம் இருந்ததாக அறிகுறிகள் தென்பட்டன. கட்டிடம் இடிந்து தரையோடு தரையாகி விட்டது. அந்த வீதியில் பாதிக்குமேல் இடிந்து பாழான கட்டிடங்கள்.

கடைத் தெருவின் பெயர் குர்வுர்ஸ்டெண்டாம். விடுதியிலிருந்து முப்பது அடி தூரம் நடந்து வந்தால் கடைத் தெருவுக்கு வந்துவிடலாம். கடைத் தெருவின் ஒரு கோடியில் பெரிய மாதாகோயில் ஒன்று இருந்தது. குண்டு வீச்சால், அதன் மேல்கோபுரத்தில் பெரும்பகுதி சேதமாகி, அகோரமாக விளங்கிற்று. குண்டு விழுந்த சமயத்தில் கோபுரத்திலிருந்த பெரிய கடிகாரமும் நின்று விட்டது. குண்டு விழுந்த சமயத்தில் எந்த நேரமோ, அதே நேரத்தைத்தான் கடிகாரம் காட்டிற்று. அந்தக் கோயில் சேதமடைந்து அப்பொழுது பத்து ஆண்டு களுக்குமேலிருக்கும்.

கடைத் தெருவில் மாதாகோயில் ஒன்றுதான் பாழடைந்திருந்தது. மற்ற எல்லாவற்றையும் புதுப் பித்துவிட்டனர். மாதாகோயிலைப் புதுப்பித்துக் கட்டு வதற்குப் பொருள் சேர்ப்பதற்காகப் பல கடைகளில் உண்டிப் பெட்டி வைத்திருந்தனர்.

யுத்தத்திற்குப்பின் பல புதிய பெரிய கட்டிடங்களைக் கட்டியிருந்தார்கள். கடைத் தெருவில் எப்பொழுதும் கூட்டம் அதிகம். ஓர் அங்குல இடத்தைக்கூட அவர்கள் வீணுக்கவில்லை.

மற்ற சில வீதிகள் வழியாக நடந்துசென்றேன். பல கட்டிடங்களில் கடைசி இரண்டு மாடிகள் சேத மடைந்து, அவை இடிந்து விகாரமாகத் தோன்றின. அந்தக் கட்டிடங்களிலும் சேதமடையாத பகுதிகளில் மக்கள் வசித்தனர். சில கட்டிடங்களில் கீழ்வீட்டை மட்டும் நாகரிகமாகச் செப்பனிட்டு, கடைகளுக்கு வாட கைக்கு விட்டிருந்தார்கள். அக்கட்டிடத்தின் மேல் மாடிகள் இடிந்து, வசிப்பதற்குத் தகுதியற்றதாகவும், மிகவும் விகாரமாகவும் இருந்தன.

பதினாறு ஆண்டுகளுக்குமுன் அங்கு மாணவனுகச் சென்றபொழுது தங்கியிருந்த விடுதிக்குச் சென்றேன். அக்கட்டிடம் சேதமடையாமல் அப்படியே இருந்தது. விடுதியின் பெயரும் அதேதான். அதே குடும்பத்தார் தான் அந்த விடுதியை அப்பொழுதும் நடத்திவந் தார்கள். விடுதியின் சொந்தக்காரிக்கு வயது எண்ப துக்குமேலிருக்கும். நான் அங்கே தங்கியிருந்தது அவ ருக்குக் கொஞ்சம்கூட ஞாபகமில்லை.

தமிழ்ப் புலவர் பைதான் சாஸ்திரியார் தங்கியிருந்த பகுதி கிழக்கு பெர்லினில் இருந்தது. பல வீதிகளின்

பெயர்கள் மாறியிருந்ததாலும், சரியான விலாசமில்லாத தாலும் அவரைத் தேட முடியவில்லை. சென்ற முறை பெர்லின் செல்வதற்கு முன், அவர் "பிரியமுள்ள செட்டியாரே, பெர்லினுக்கு வாருங்கள். இனிமையான தமிழில் சம்பாஷிப்போம்" என்று எழுதிய கடித வாசகமும், முத்து முத்தாக அவர் எழுதிய தமிழ் எழுத்துக்களும் நினைவுக்கு வந்தன.

ஏற்கெனவே தெரிந்த ஒரு காமிராக் கடைக்காரரின் பெயரும் விலாசமும் என்னிடம் இருந்தன. முன்னர் அவரிடம் மிக உயர்ந்த ரக காமிரா ஒன்று வாங்கினேன். குறிப்பிட்ட பகுதிக்குச் சென்றேன். வீதி இருந்தது; ஆனால் குறிப்பிட்ட எண்ணுள்ள கட்டிடம் அங்கில்லை. தற்செயலாகக் கடைத்தெருவில் அவருடைய கடையைப் பார்த்து உள்ளே சென்றேன். அத்தனை காலத்துக்குப் பிறகு தங்கள் கடையின் பெயரை ஞாபகம் வைத்திருந்து தேடி வந்ததற்காக அவர் வந்தனம் செலுத்தினர்.

கடைத் தெருவிலிருந்து அரை மைல் தூரத்தில் உள்ள டியர் கார்டன் என்ற பகுதிக்குச் சென்றேன். ஒரு காலத்தில் அங்கே ஜன நெருக்கம் மிக அதிகம். அங்கு சென்றபொழுது நான்கு புறங்களிலும் கால் மைல் தூரம் வரையில் வீடுகளே இல்லை. எல்லாக் கட்டிடங் களும் குண்டு வீச்சால் நாசமடைந்து தரையோடு தரை யாக அடிமட்டமாகிவிட்டன. பெர்லின் நகரில் அதைப் போல பாழடைந்த பகுதி வேறொன்றுமில்லை.

யுத்தம் முடிந்தவுடன் பெர்லின் நகரின் நிலை மிகப் பரிதாபமாக இருந்தது. இடிந்து விழுந்த வீடுகளுக்குள் சிக்கிக்கொண்ட பிணங்களை அப்புறப்படுத்தவே பல மாதங்கள் ஆயிற்றும். வீதிகளிலும் வீடுகளிலும் பல மாதங்களாக விளக்கே இல்லை. தண்ணீர்க் குழாய்கள்

அடைபட்டுவிட்டன. எங்கும் ஒரே துர்நாற்றம். குளிர் காயப் போதுமான வசதியில்லே. உணவுக் கஷ்டம் வேறு. எல்லாம் சேர்ந்து ‘நரக வேதனை’போல் இருந்ததாம்.

“யுத்தத்தால் ஏற்பட்ட சேதத்தைக் காட்டிலும், யுத்தத்திற்குப்பின்னர் ஏற்பட்ட சேதம்தான் அதிகம். ருஷ்யத் துருப்புக்கள்தான் முதலில் பெர்லின் நகருக்குள் நுழைந்தன. அவர்கள் ஜெர்மானியரைப் பழிக்குப் பழி வாங்க ஆரம்பித்துவிட்டனர். எந்த வீட்டிலாவது ஹிட்லர் படத்தைக் கண்டால், உடனே அந்த வீட்டில் உள்ளவர்களே அடித்து உதைத்து, அந்த வீட்டையும் தீ வைத்துக் கொளுத்தினர். அம்மாதிரி அவர்கள் தீ யிட்ட சம்பவங்கள் ஏராளம்” என்ருர் ஒரு ஜெர்மானியர்.

“பெர்லினில் பிரிட்டிஷ் ராணுவக் காரியாலயத்தில் வேலேசெய்தவர்களில் பெரும்பாலோர் ஆங்கிலேயர். ஆங்கிலம் தெரிந்த ஜெர்மானியர் சிலரும் அங்கே வேலேசெய்தனர். அப்பொழுது உணவுப் பங்கீடு காலம். சிகரெட்டு, மதுபோன்ற மற்றவைகளும் பங்கீடுதான். ஆங்கிலேயருக்குக் கிடைத்த பங்கீடு மிக அதிகம்; ஜெர்மானியருக்குக் கிடைத்த பங்கீடு மிகக் குறைவு. ராணுவக் காரியாலயத்தில் எல்லோருக்கும் பகல் உணவு இலவசமாக வழங்கினுர்கள். ஆங்கிலேயருக்கும் எங்களுக்கும் தனித்தனியாக உணவு பரிமாறினர். ஆங்கிலேயர்களுக்கு அளித்தது அருமையான உணவு. எங்களுக்குக் கொடுத்த உணவோ, அவர்கள் தம் நாய்களுக்கு இட்ட உணவைவிட மட்டமானது” என்ருர் யுத்தகாலத்தில் பிரிட்டிஷ் ராணுவக் காரியாலயத்தில் வேலேசெய்த ஒரு ஜெர்மானியப் பெண்.

பிரெஞ்சுக்காரர்கள் கடைத்தெருவில் மிகப் பெரிய கட்டிடமொன்றை நிர்மாணித்தனர். அங்கே எல்லாம் பிரெஞ்சுமயம். கட்டிடத்திற்கு உள்ளேயே பிரெஞ்சு திரைப்படக் காட்சிசாலை, பிரெஞ்சு பொருட்காட்சி, பிரெஞ்சு உணவுச்சாலை முதலியன இருந்தன. பிரெஞ்சுத் திரைப்படங்களை பார்க்க யார்வேண்டுமானாலும் கட்டணம் செலுத்தி உள்ளே செல்லலாம். பொருட்காட்சியை யார் வேண்டுமானாலும் இலவசமாகப் பார்க்கலாம். ஆனால் பிரெஞ்சுக்காரர்கள் முட்டாள்தனமான காரியம் ஒன்றைச் செய்தார்கள். உணவுச்சாலைக்குள் அந்நிய நாட்டினரை மட்டுந்தான் அனுமதித்தார்கள். அங்கு செல்பவர்கள் தங்கள் பாஸ்போர்ட்டுகளைக் காண்பித்துத் தாங்கள் அந்நிய நாட்டினர் என்பதை நிரூபிக்க வேண்டும்; அந்நிய நாட்டினர் யாராவது விரும்பினால் ஜெர்மானியரைத் தங்கள் விருந்தினராக அங்கே அழைத்துச் செல்லலாம். ஜெர்மானியர்கள்—அவர்கள் எத்தகைய பதவியில் உள்ளவர்களாய் இருந்தாலும் சரி—தனியாகச் சென்று உணவுகொள்ள அனுமதிக்கவில்லை. தங்கள் நாட்டிலேயே நடைபெறும் ஓர் உணவுச்சாலையில் தங்களையே அனுமதிப்பதில்லையென்றால் ஜெர்மானியாருக்கு எவ்வளவு ஆத்திரம் உண்டாகும்?

"அமெரிக்கர் எப்படி?" என்று ஒரு ஜெர்மானியரைக் கேட்டேன்.

"அவர்களா? அவர்கள் பிரபுக்களைப் போல (Dukes) வாழ்க்கை நடத்துகிறார்கள்" என்றார் அவர்.

பெர்லின் நகரத்தை நான்கு பகுதிகளாகப் பிரித்திருந்தார்கள். ருஷ்யா, அமெரிக்கா, பிரான்சு, பிரிட்டன் ஆகிய ஒவ்வொரு நாட்டுக்கும் ஒவ்வொரு பகுதி.

அவற்றில் பிரிட்டிஷ் பகுதியில், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ராணுவத் தலைமைக் காரியாலயம் இருந்தது. அக் கட்டிடத்தில் காமன்வெல்த் நாடுகள் ஒவ்வொன்றும் தங்கள் காரியாலயங்களை அமைத்திருந்தன. அவற்றிற்கு ராணுவச் சங்கம் (Military Mission) என்று பெயர். அவற்றுக்கும் ராணுவத்திற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. அவை ஒவ்வொன்றும் ஒரு ஸ்தானீகர் காரியாலயம் போன்றவை. பெர்லின் இன்னும் ராணுவ நிர்வாக ஆதரவிலேயே இருந்ததால், காமன்வெல்த் நாடுகளின் காரியாலயங்களை அவ்வாறு அழைத்தனர். இந்திய ராணுவச் சங்கத்தின் வேலை, இந்தியாவைப்பற்றிய உண்மையான விவரங்களைச் சரிவரத் தெரிவிப்பதும், ஜெர்மன் மக்களோடு நல்லுறவு கொள்வதும்தான். அதனை நமது சங்கம் நன்றாகச் செய்துவந்தது.

மேற்கு பெர்லின் நகரசபையில் வேலை செய்து கொண்டிருந்த ஒரு ஜெர்மானியர் வீட்டுக்குத் தேநீர் அருந்தச் சென்றேன். அவர் தேநீர் கொடுத்தபொழுது "இது இந்தியத் தேயிலை. தேயிலை என்றால் எங்களுக்கு உயிர். அதிலும் இந்தியத் தேயிலை மிகப் பிரியம். இந்திய 'மிலிட்டரி மிஷ'னிலிருந்து எங்கள் நகரசபைத் தலைவருக்கு ஒரு கடிதமும், பெட்டி நிறையத் தேயிலைப் பொட்டலங்களும் அன்பளிப்பாக வந்தன. அவற்றில் எனக்கு ஆறு பொட்டலங்கள் கொடுத்தார்கள். பல அந்நிய நாடுகள் தங்களுடைய பெருமைகளை எல்லாம் அழகான புத்தகங்களாக அச்சடித்து இந்நாட்டில் இலவசமாக விநியோகிக்கின்றன. அதைக்காட்டிலும் இந்தத் தேயிலைப் பொட்டலங்களே நல்லுறவை அதிகமாக வளர்க்கக் கூடியவை" என்றார்.

எனது விடுதிச் சொந்தக்காரர் பெயர் முல்லர். அவர் ஜெர்மன் ராணுவத்திலிருந்த சிப்பாய். சென்ற யுத்தத்தில் இத்தாலியில் போரிட்டவர். யுத்தத்திற்குப் பிறகு ராணுவத்தைக் கலைத்துவிட்டபடியால், அவர் பெர்லினுக்கு வந்து சில ஆண்டுகளாக அந்த விடுதியை நடத்தி வந்தார். அவருக்கு அப்பொழுது வயது நாற்பத்தைந்து; அவர் மனைவியின் வயது நாற்பது. அவர்களுக்குக் குழந்தை இல்லை. முல்லருக்கு நன்ருக ஆங்கிலம் பேசவராது; ஆனுல் நாம் சொல்லுவதைப் புரிந்து கொள்வார். அவருடைய மனைவி ஆங்கிலம் கற்று வந்தார். பெர்லினில் இலவசமாக ஆங்கிலம் கற்பித்தனர். பாடப்புத்தகங்களையும் இலவசமாக வழங்கினர். வியாழன்தோறும் வகுப்பு நடைபெற்றது.

முல்லர் தம்பதிகள் மிகவும் அன்புடன் தங்கள் குடும்பத்தில் ஒருவனுகவே என்னை நடத்தினுர்கள். வாரம் மூன்றுமுறை வெந்நீரில் குளிக்க வசதி செய்து கொடுத்தார்கள். அதற்கு என்னிடம் பணம் வசூலிக்கவில்லை. இல்லையானுல் ஒவ்வொருமுறை குளிப்பதற்கும் ஒரு மார்க்—சுமார் ஒரு ரூபாய் இரண்டணு—கொடுக்க வேண்டும். குளிர் காலத்தில் விறகின் விலை அதிகம். வெந்நீர் வேம்பாவுக்கு விறகுதான் போட வேண்டும். அங்கே குளிக்கும் நாட்களைத் தவிர, வேறு நாட்களில் குளிக்க விரும்பினுல் குளிக்கும் விடுதிகளுக்குச் செல்வதுண்டு. அந்நகரில் குளிப்பதற்காகவே சில விடுதிகள் இருந்தன. விடுதிகளில் முழுமையும் ஸ்நான அறைகள் தான். அங்கே குளிப்பதற்கு இரண்டு மார்க் கொடுக்க வேண்டும். ஜெர்மனியில் எல்லோரும் தினந்தோறும் குளிப்பதில்லை. குளிர் காலத்தில் தினந்தோறும் குளிக்க வேண்டுமென்ற அவசியமும் இல்லை. அன்றியும் குடும்பத்தார் முழுவதும் வெந்நீரில் குளிப்ப

தானுல் எவ்வளவு செலவாகும்? இரண்டு மூன்று தினங்களுக்கு ஒரு முறையும், வாரத்திற்கு ஒரு முறையும் குளிப்போரே பலர். மாதமொருமுறை குளிப்பவர்களும் உண்டு.

விடுதியில் ஒன்றரை மாதத்திற்குமேல் தங்கினேன். மேற்கு ஜெர்மனியிலிருந்தும், கிழக்கு ஜெர்மனியிலிருந்தும் பலர் அங்கு வந்தனர். ஆனுல் அவர்கள் அதிக நாள் தங்கவில்லை. அவர்களில் பலருடன் பேசினேன். சிலருக்குத்தான் ஆங்கிலம் தெரியும். மற்றவர்கள் பேசியதை முல்லர் தம்பதிகள் மொழிபெயர்த்துக் கூறினுர்கள். தினந்தோறும் காலையில் ஜெர்மன் பத்திரிகையைப் படித்து, அதிலுள்ள முக்கியமான விஷயங்களைக் கூறினுர் முல்லர். முல்லரின் மனைவி, தாம் வகுப்புக்குச் செல்வதற்குமுன் தம்முடைய பாடங்களையெல்லாம் என்னிடம் படித்துக்காட்டுவது வழக்கம். ஒருநாள் அவருடைய மொழிபெயர்ப்பு நோட்டுப் புத்தகத்தில் பின்வரும் வாசகத்தைக் கண்டேன்.

"ஆங்கிலேயன் எவ்வளவு யோக்கியமானவனே, அவ்வளவு யோக்கியமானவன் அமெரிக்கன்."

அதைப் பார்த்ததும், "ஆங்கிலேயன் யோக்கியமானவன் என்று யார் உங்களுக்குச் சொன்னுர்கள்?" என்றேன்.

அதற்கு அவர், "அதெல்லாம் என்னைக் கேளாதீர்கள். அது புத்தகத்தில் இருக்கிறது" என்று கூறி, தமது பாடப்புத்தகத்தை என்னிடம் கொண்டு வந்து காட்டினுர். அதில் அந்த வாசகம் இருந்தது.

இலவசமாக ஆங்கில வகுப்பு நடத்தியதில், ஆங்கிலேயர்கள் ஆங்கிலமொழியைமட்டும் பரப்பவில்லை; அதோடு தமது கருத்துக்களையும் பரப்பினுர்கள்.

புத்தகத்தில் காணப்பெற்ற வாக்கியத்திலிருந்து ஜெர்மானியருக்கு அமெரிக்கரைக் காட்டிலும் ஆங்கிலேயரிடம்தான் மதிப்பு அதிகம் என்று தெரிந்தது. இல்லேயேல், ஆங்கிலேயனேப் போலவே அமெரிக்கனும் யோக்கியன் என்று சொல்ல வேண்டாமல்லவா ?

அமெரிக்கச் சிப்பாய்களேப்பற்றி முல்லருக்கு நல்ல அபிப்பிராயம் கிடையாது. "இத்தாலியன் சண்டைக்குத் தகுதியில்லே, சமையல் வேலேக்குத்தான் தகுதி. ஜெர்மன் சிப்பாய்களுக்கு இணேயானவர்கள், ருஷ்யாவில் கசாக் எனும் பகுதியிலிருந்துவந்த போர்வீரர்கள்" என்ருர்.

ருஷ்யச் சிப்பாய்களின் திறமையை முல்லர் அபாரமாகப் புகழ்ந்தார். ஆனல் ருஷ்யர்களே அவர் மனமார வெறுத்தார். அப்பொழுது அவருடைய சுயரூபம் வெளிப்பட்டுவிட்டது. "இந்தப் பிரிட்டிஷாரும் அமெரிக்கரும் வாயால் பிதற்றுகிருர்கள். இன்று ஹிட்லர் மட்டும் உயிரோடு இருந்தால் பத்து ஜெர்மன் டிவிஷன்கள் போதும்; ருஷ்யாவை ஒரு மாதத்திற்குள் அடியோடு அழித்துவிடுவோம்" என்று மிக ஆத்திரத்துடன் கூறினுர்:

"இரண்டு யுத்தங்களில் படுதோல்வி யடைந்தும் ராணுவ வெறி இன்னும் உங்களே விட்டபாடில்லேயே" என்றேன்.

கிழக்கு பெர்லினுக்குச் செல்ல விரும்புவதாக முல்லரிடம் கூறினேன்.

"அங்கே பார்ப்பதற்கு ஒன்றுமில்லே" என்ருர் முல்லர்.




"போய்ப் பார்த்துவிட்டுத்தான் வரட்டுமே. கிழக்கு பெர்லினுக்கு ஜாக்கிரதையாகச் செல்லுங்கள். அது மோசமான இடம். அதிக தூரம் போகவேண்டாம். ஸ்டாலினலி என்ற வீதி இருக்கிறது. அதுதான் பார்க்கத்தக்கது, அலெக்ஸாண்ட்ரா பிளாட்ஸ்க்கும் நீங்கள் செல்லலாம். மிருகக்காட்சிச்சாலே என்ற ரயில் நிலேயத்திலிருந்து பூமிக்குக்கீழ் ஓடும் ரயிலில் செல்லுங்கள். பிரயாணச் சீட்டு இருபது காசுதான். ஆனல் திரும்பி வரும்பொழுது கிழக்கு பெர்லின் ரயில் நிலேயங்களில் மேற்கு ஜெர்மன் நாணயங்களே வாங்கமாட்டார்கள். கிழக்கு ஜெர்மன் நாணயம் கொடுத்தால்தான் பிரயாணச் சீட்டு வாங்கலாம். உங்களிடம் கிழக்கு ஜெர்மன் நாணயம் இல்லாவிட்டால், பாவம், அங்கிருந்து நீங்கள்

நமது விடுதிக்கு நடந்துதான் வரவேண்டும். என்னிடம் கிழக்கு ஜெர்மன் நாணயம் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கிறேன்" என்று அவர் மனைவி சொல்லி, தமது பணப்பெட்டியிலிருந்த சில்லரைக் காசுகளைப் பொறுக்கி, என்னிடம் நாற்பது காசு கொடுத்தார். அவை கனமில்லாத அலுமினிய நாணயங்கள்.

முல்லர், பெர்லின் நகரத்துப் படமொன்றைக் கொண்டுவந்து, கிழக்கு பெர்லின் எல்லைகளை விளக்கி, பார்க்கவேண்டிய இடங்களைக் குறிப்பிட்டுக் காட்டினர்.

மேற்கு பெர்லினிலிருந்து கிழக்கு பெர்லின் செல்லவும், கிழக்கு பெர்லினிலிருந்து மேற்கு பெர்லின் செல்லவும் தடைகள் ஒன்றுமில்லை. என்ருலும், பொதுவாக ஆங்கிலேயர், அமெரிக்கர், பிரெஞ்சுக்காரர் முதலியோர் கிழக்கு பெர்லினுக்குத் தனியாகச் செல்வதில்லை; ராணுவத்தார் மட்டுமல்ல, சாதாரண யாத்திரிகர்களும்கூட தனியே செல்லப் பயந்தார்கள். ஒரு வேளை தங்களை உளவாளிகள் என்று கருதி, பிடித்துச் சிறையில் அடைத்துவிடுவார்களோ என்ற அச்சம்தான் அதற்குக் காரணம். ருஷ்யர்களும் மேற்கு பெர்லினுக்குத் தனியாகச் செல்வதில்லை. அதற்கும் அதே அச்சம்தான் காரணம். நம்மைப்போன்ற நடுநிலைமை நாட்டினர்—அதிலும் சிறப்பாகக் கறுப்பு நிறத்தினர்—கிழக்கிலும் மேற்கிலும் தாராளமாகச் செல்லலாம். ஆனால் பாஸ்போர்ட்டைமட்டும் சட்டைப்பையில் எப்பொழுதும் வைத்திருக்க வேண்டும்.

கிழக்கு பெர்லினுக்கும் மேற்கு பெர்லீனுக்கும் இடையே செல்வதற்குத் தடைகிடையாது. என்ருலும் கிழக்கு பெர்லினிலிருந்து மேற்கு பெர்லினுக்கு வருகிற கிழக்கு பெர்லின் வாசிகளை, சந்தேகப்பட்டால்

சோதனையிட்டார்கள். பலர் கிழக்கு பெர்லினிலிருந்து சாமான்களைத் திருட்டுத்தனமாக மேற்கு பெர்லி னுக்குக் கொண்டு வந்ததே அதற்குக் காரணம். கிழக்கு—மேற்கு என்று குறிப்பிட்ட எல்லையில் உள்ள வீதிகளில், தங்கள் தங்கள் எல்லைக் கோட்டில் மேற்கு ஜெர்மன் போலீசாரும், கிழக்கு ஜெர்மன் போலீசாரும் இரவு பகலாக நின்று காவல் புரிந்தனர். இரண்டு எல்லைக் கோடுகளுக்குமிடையே சுமார் பத்து கஜ தூரம் இடைவெளி இருந்தது. ஜனங்கள் எவ்விதத் தடையு மின்றி, நடைபாதைகளில் நடந்துசென்று எல்லையைக் கடந்தனர். ஆனால் ஓர் எல்லையிலிருந்து மற்றோர் எல்லைக்குள் மோட்டாரில் செல்வதானால் ராணுவ அதிகாரிகளின் அனுமதி பெறவேண்டும். கிழக்கு பெர்லினுக்கும் மேற்கு பெர்லினுக்குமிடையில் பஸ் போக்குவரத்து கிடையாது.

பூமிக்குக்கீழ் ஓடும் ரயில் மிகவும் சௌகரியமானது. மேற்கு பெர்லின் நிர்வாகத்தினரும், கிழக்கு பெர்லின் நிர்வாகத்தினரும் சேர்ந்து அதை நடத்தினார்கள். நாம் எவ்வளவு தூரம் பிரயாணம் செய்தாலும் ஒரே கட்டணம்—இருபது காசுதான். நாம் எந்தப் பகுதியில் ரயிலேறுகிறோமோ, அந்தப் பகுதி நாணயத்தைக் கொடுக்க வேண்டும்.

ரயிலில் சென்றபொழுது, கிழக்கு பெர்லின் எல்லை வந்துவிட்டது என்று எனக்குச் சுலபமாகத் தெரிந்தது. சிவப்பு நிறமுள்ள கம்யூனிஸ்டு கொடிகளையும். கார்ல் மார்க்ஸ் படத்தையும் கிழக்கு பெர்லினில் காணலாம். அன்றியும் கிழக்கு பெர்லின் ரயில் அதிகாரிகள் தங்கள் மேற்சட்டைகளில் அணிந்திருந்தது சிவப்பு நிறப்பட்டை; மேற்கு பெர்லின் ரயில் அதிகாரிகள்

தங்கள் மேற்சட்டைகளில் அணிந்திருந்தது பச்சை நிறப்பட்டை.

அறிஞர் கார்ல் மார்க்ஸ் 1867 ஆம் ஆண்டில் ஜெர்மனியில் பிறந்தவர். அவர் எழுதிய காபிடல் (Capital) என்ற பிரபலமான நூல்தான் ருஷ்யப் பொதுவுடைமைக் கொள்கைக்கே ஆதாரம். அந்நூலுக்கு வியாக்கியானம் எழுதிய பிரெடரிக் எங்கல்ஸ் என்பவரும் ஜெர்மானியரே. கார்ல் மார்க்ஸ் ஜெர்மானியராய் இருந்தும், அவர் கம்யூனிஸ்டு என்ற காரணத்தால், அவருடைய படத்தை ஜெர்மனியில் பகிரங்கமாக வைக்கவில்லை. யுத்தத்திற்குப்பின் கிழக்கு ஜெர்மனியில்தான் அவருடைய படத்தைக் கவர்ச்சியாகவும் பெரிதாகவும் அச்சிட்டுப் பல இடங்களில் ஒட்டியிருந்தார்கள். கிழக்கு பெர்லினில் அவருடைய பெயரால் பொருட்காட்சிச்சாலை ஒன்றையும் அமைத்திருந்தார்கள்.

கிழக்கு பெர்லினில் ஒரு ரயில் நிலையம் முற்றிலும் பளிங்குக் கற்களால் அமைக்கப் பெற்றிருந்தது. ஹிட்லர் மாளிகையிலிருந்த பளிங்குக் கற்களைக் கொண்டுவந்து அந்த நிலையத்தைக் கட்டினார்கள் என்று கேள்வியுற்றேன்.

ரயில் பெட்டி ஒவ்வொன்றிலும் அறிவிப்புப் பலகைகள் இருந்தன. அவை ருஷ்ய, ஆங்கில, பிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய நான்கு மொழிகளில் எழுதப் பெற்றிருந்தன.

குறிப்பிட்ட ரயில் நிலையம் வந்ததும், இறங்கிப் படிக்கட்டுகள் வழியாக மேலே ஏறி வீதிக்கு வந்தேன். ருஷ்யாவையும், அதைச்சார்ந்த கம்யூனிஸ்டு நாடுகளையும், மற்றவர்கள் 'இரும்புத்திரை நாடுகள்' என்று

அழைப்பார்கள். 'இரும்புத்திரை'க்குள்ளே நான் சென்றது அதுவே முதன்முறை.

வீதியில் ஜன நடமாட்டம் மிகக் குறைவு. ஒன்றிரண்டு டிராம் வண்டிகள் ஓடின. பெரிய சிவப்புக் கொடிகள் கட்டிடங்களின்மீது பறந்தன. பாழடைந்த கட்டிடங்களே அதிகம். பழைய ஸ்டாம்புகள் விற்ற கடையும், சிகரெட் விற்ற சிறிய கடையும்தான் அந்த வீதியில் இருந்தன. அவை இரண்டும் பெட்டிக் கடைகள். ஊரே துக்கத்தில் ஆழ்த்திருந்ததுபோலத் தோன்றியது. வீதியில் நடந்துசென்றவர்களில் ஒருவர் முகத்திலாவது களையே இல்லை—தெம்பும் இல்லை. வழியில் சென்ற முப்பது வயதுப் பெண் ஒருத்தியிடம், "அம்மா, உண்டெர்டென் லிண்டன் எங்கே யிருக்கிறது?" என்று கேட்டேன். அவர் நன்ருக ஆங்கிலம் பேசினுர். செல்லவேண்டிய வழியைக் காட்டினுர். இருவரும் ஒரே வழியில் சிறிது தூரம் செல்ல வேண்டியிருந்தது. அவர் என்னுடன் பேசுவதற்கு மிகவும் பயந்தார். தாம் ஒரு பள்ளி ஆசிரியை என்றும், தமக்குப் போதுமான சம்பளம் கிடைத்ததாகவும் எனது கேள்விகளுக்குப் பதிலளித்தார்.

'உண்டெர்டென் லிண்டன்' என்ருல் 'மரத்தடிக்குக் கீழே' என்பது பொருள். அப்பொழுது அங்கே மரத்தைப் பார்ப்பதே அபூர்வமாயிருந்தது. அந்த வீதி மிகவும் உலகப் பிரசித்திபெற்ற வீதிகளில் ஒன்று. ஒரு காலத்தில் ஜெர்மனியின் உயிர்நாடியே அதுவாகத் தான் இருந்தது. அவ்வாறு புகழ்பெற்ற அது இப்பொழுது சீர்குலைந்திருந்தது. சில கட்டிடங்கள் அடியோடு இடிந்துவிட்டன. ஆனுல் குட்டிச்சுவர்களை யெல்லாம் இடித்து, அவற்றை அப்புறப்படுத்தி, அந்த

இடங்களைக் காலிமனைகளாக வைத்திருந்தனர். என்ற போதிலும் பாழடைந்த சின்னங்கள் பல இருந்தன; அது நீளமும் அகலமும் உள்ள விசாலமான வீதி.

அந்தப் பெரிய வீதியில், பாழடைந்த கட்டிடங்களும், சேதமடைந்த 'ஒப்பரா ஹவுஸ்' என்னும் சங்கீத நாடகமேடையும் தவிர, நடுத்தரமான உணவுச்சாலை, கம்யூனிஸ்டு சீனுவைப்பற்றிய சிறிய நிரந்தரப் பொருட்காட்சி மண்டபம், ஹாம்போல்ட் சர்வகலாசாலை, ருஷ்யத் தூதரின் காரியாலயம், சிறிய படக்கடை முதலிய சில கட்டிடங்கள்தான் இருந்தன. மக்கள் நடமாட்டம் மிகமிகக் குறைவு.

சிறிய படக்கடைக்குள் நுழைந்தேன். உள்ளே குப்பையும் கூளமுமாக இருந்தது. வயதான ஒரே ஒருவர்மட்டும் அங்கிருந்தார். கடையில் வேறுயாருமில்லை. ஸ்டாலின், லெனின், கார்ல் மார்க்ஸ் முதலிய படங்களே அதிகமாக இருந்தன. இயற்கைக் காட்சிப் படங்கள் சில இருந்தன; ஆனால் அவை மிகப் பழையவை.

"பதினுன்கு ஆண்டுகளுக்குப் பிறகு இந்த ஊருக்கு வந்திருக்கிறேன். அந்தக் காலத்தில் இந்த உண்டெர் டென் லிண்டன் எப்படியிருந்தது? இப்பொழுது அதைப் பார்க்கப் பரிதாபமாய் இருக்கிறது" என்றேன்.

அவர், 'ஆம்' என்ருர். அவருக்கு ஆங்கிலம் சுமாராகத் தெரியும். கொஞ்சகாலம் லண்டனில் வசித்தாராம்.

"வியாபாரம் எப்படி யிருக்கிறது?" என்றேன்.

"பாதகமில்லை" என்ருர்.

"இந்தப் படங்களை விற்பதால் கிடைக்கும் வருமானம் வாழ்க்கை நடத்துவதற்குப் போதுமானதா?" என்று கேட்டேன்.

அவருக்குப் பதில் சொல்ல விருப்பந்தான்; ஆனால், ஏதோ ஒரு மாதிரியான பயம் இருந்தது. பேச்சை வளர்க்க அவர் விரும்பவில்லை. "ஏதோ வாழ்க்கை நடக்கிறது" என்றார். அவருடைய பதிலில், வருத்தமும் வெறுப்பும் கலந்திருந்தன. அப்பொழுது யாரோ ஒருவர் கடைக்குள் நுழைந்தார். உடனே விடைபெற்று வெளியே வந்தேன்.

வீதிக்கோடியில் புத்தப் புதிய பிரமாண்டமான கட்டிடமொன்றைக் கண்டேன். கிழக்கு பெர்லினிலேயே அதுதான் பெரிய கட்டிடம் என்று சுலபமாகச் சொல்லிவிடலாம். அது ருஷ்யத் தூதரின் காரியாலயம்.

அதற்கு அடுத்தாற் போலிருந்தது உண்டெர்டென் லிண்டன் வீதியின் அழகான முகப்பு வளைவு (Arch). அதில் ஒரு பகுதி சேதமடைந்திருந்தது. வளைவுக்குச் சிறிது தூரத்தில் மேற்கு பெர்லின் எல்லை ஆரம்பம். மேற்கு பெர்லின் அரசியல் புரட்சிக்காரர்கள் அந்த எல்லையில் வந்து கூட்டம் நடத்திக் கலகம் செய்தார்கள். கிழக்கு பெர்லின் அரசியல் புரட்சிக்காரர்களும் இளைத்தவர்கள் அல்லர். ஜெர்மன் 'டிரேட் மார்க்குள்ள' ஜனநாயகமும் பொதுவுடைமையும் அங்கேதான் சந்தித்தன; சில சமயங்களில் கை கலந்தன.

சிறிது நேரத்திற்கெல்லாம், ருஷ்யத் தூதர் காரியாலயத்துக்கெதிரே பெருங்கூட்டத்தைக் கண்டேன். பெரும்பாலோர் ராணுவ உடை தரித்திருந்தனர். பலர் கட்டிடத்திலிருந்து வெளியே வந்துகொண்டிருந்தனர்.

ஏதோ விருந்து சாப்பிட்டு வந்தவர்களைப்போல் தோன்றினர்கள். நாற்பது அல்லது ஐம்பது மோட்டார்கள் நின்று கொண்டிருந்தன. கூட்டத்தின் மத்தியில் சென்றுவிட்டேன். எனக்கு ஒரு மாதிரி நடுக்கம் ஏற்பட்டது.

அங்கே நின்றுகொண்டிருந்த ராணுவ அதிகாரி ஒருவரிடம் சென்று, "அலெக்ஸாண்ட்ரா பிளாட்ஸுக்குச் செல்ல வழி எது?" என்று கேட்டேன்.

செல்லவேண்டிய திசை எனக்குத் தெரியும். நான் ஊருக்குப் புதியவன் என்பதும், யாத்திரிகன் என்பதும், அவருக்குத் தெரியவேண்டும் என்பதே எனது நோக்கம். ஏதோ அரைகுறையான ஆங்கிலத்தில் பேசி எனக்கு வழி காட்டினர். உடனே அருகிலிருந்த ராணுவ அதிகாரி ஒருவரிடம் ஏதோ கூறினர். சில விநாடிகளில் ஒரு பெரிய 'மெர்சிடீஸ்' மோட்டார் எங்கள் எதிரே வந்து நின்றது. ஓர் அதிகாரி கதவைத் திறந்து ஏறினர். பிறகு என்னை ஏறும்படி சைகை செய்தார். அதன் பின்னர் மற்றோர் அதிகாரியும் ஏறி உட்கார்ந்து கொண்டார். பின்புறத்தில் இரண்டு ராணுவ அதிகாரிகளுக்கிடையே அமர்ந்தேன். மோட்டார் வேகமாகச் சென்றது. அந்த இரண்டு ராணுவ அதிகாரிகளும் ருஷ்யர்களா அல்லது கிழக்கு ஜெர்மானியர்களா என்பது எனக்குத் தெரியவில்லை. அன்றியும் என்னை மோட்டாரில் அழைத்துச் சென்றது மரியாதையா அல்லது ஆபத்தா என்பதும் புரியவில்லை.

சிறிதுதூரம் சென்றதும் மோட்டார் நின்றது. ஓர் அதிகாரி கீழே இறங்கினர். என்னையும் இறங்குமாறு கூறினர். "இதுதான் அலெக்ஸாண்ட்ரா பிளாட்ஸ்" என்று மரியாதையுடன் சொன்னர். அவர்கள்

இருவருக்கும் வந்தனம் செலுத்தினேன். எனக்கு ஒரே ஆச்சரியம்!

அலெக்ஸாண்ட்ரா பிளாட்ஸ் பல வீதிகள் சந்திக்கும் இடம். வியாபார நிலையங்கள் பல அங்கே இருந்தன. பெரிய ரயில் நிலையம் ஒன்றும் இருந்தது. ரயிலுக்குப் போவோரும் வருவோரும் அதிகம். வியாபார நிலையங்களிலும் கூட்டம் அதிகம். ஏராளமான பெட்டிக் கடைகள் இருந்தன. அங்கே நூற்றுக்கணக்கானவர்கள் 'சாண்ட்விச்'களையும், சூடான பலகாரங்களையும் வாங்கி, வீதியில் நின்றுகொண்டே சாப்பிட்டனர். ஆனால், மக்களிடையே மகிழ்ச்சியோ அல்லது கலகலப்போ இல்லை. பெரும்பாலோர் உற்சாகமற்றவர்களாக இருந்தனர். சிலர் நடைப்பிணங்கள்போலத் தோன்றினர். அமைதி நிலவிற்று. இனிய சங்கீதத்தை ஒலிபரப்பினர். அமைதியின் காரணமாக சங்கீதத்தின் ஒலியே அந்த இடம் முழுதும் நிரம்பியிருந்தது. ஒலிபரப்பு மிக மெல்லியதாக இருந்ததால், இனிய மிருதுவான சங்கீதம், காதுகளுக்கு இன்பத்தை அளித்தது. ஆனால், பாலில் விஷத்தைக் கலப்பதுபோல, ஒலிபரப்பின் இடையிடையே அமெரிக்கரைப்பற்றி வசைபுராணம் பாடினார்கள். மொழி புரியாவிட்டாலும் வசை பாடினார்கள் என்பது தெரிந்தது.

அங்கிருந்து ஸ்டாலினலி அதிக தூரமில்லை. ஆயினும், பல வீதிகள் ஒன்றாகக் கூடியதால், வழி எது என்று விசாரித்தேன். எனக்கு வழி காட்டியது நடுத்தர வயதுள்ள ஒரு பெண். அவளுக்கு ஆங்கிலம் தெரியவில்லை. உடைமேல் அணியும் குளிர்ச்சட்டை (Overcoat) இல்லாமல் குளிரால் நடுங்கிக்கொண்டிருந்தாள். ஜெர்மனியில் குளிர்ச்சட்டை அணியாதவர்கள்—அணிய

வசதியில்லாதவர்கள்—இருவரைப் பார்த்தேன். அவர் கள் இருவரும் கிழக்கு ஜெர்மன் பெண்கள்.

அந்தப் பெண் குளிரால் நடுங்கியதைப் பார்த்த பொழுது பரிதாபமாக இருந்தது. வழி காட்டியதற்காக நன்றி செலுத்தி, நன்றிக்கு அறிகுறியாக ஐம்பது காசு கொடுத்தேன். சுற்றும் முற்றும் பார்த்த பின்னர் அதைப் பெற்றுக்கொண்டாள். நான் கொடுத்தது மேற்கு ஜெர் மன் நாணயம். அங்கே மேற்கு ஜெர்மன் நாணயத்தை யாரும் வாங்கக்கூடாது; மாற்றவும் கூடாது என்பது கடுமையான சட்டம். மீறினுல் கொடிய தண்டனையாம். அது எனக்குப் பின்னர்தான் தெரியும். அதனுல்தான் அந்தப் பெண் பயத்துடன் சுற்றும் முற்றும் பார்த் திருக்கவேண்டும்.

உலகத்தில் உள்ள மிக அற்புதமான வீதிகளில் ஒன்று ஸ்டாலினலி. பலமுறை, அதனை இரவில் பார்த் திருக்கிறேன். நீளமும், மிக அகலமுமுள்ள வீதி. வீதியின் இரு புறங்களிலும் ஒரே உயரமுள்ள ஐந்தாறு மாடிக் கட்டிடங்கள். அவற்றில் அத்தனை நாகரிக வசதி களும் இருந்தன. இரவில் ஏராளமான மின்சார விளக்கு கள் பிரகாசித்தன. சிறிது தூரம் சென்றதும் பிரசார இலாகாக் கட்டிடத்தைப் பார்த்தேன். அதன் எதிரே பெரிய ஸ்டாலின் சிலை ஒன்றை அழகாக அமைத்திருந் தார்கள். அலெக்ஸாண்ட்ரா பிளாட்ஸில் கேட்ட அதே இனிய மிருதுவான சங்கீதத்தையும், அதே வசை புரா ணத்தையும் ஸ்டாலினலியிலும் கேட்டேன்.

பல கட்டிடங்களில் எச். ஓ. (H. O.) என்ற பெரிய எழுத்துக்கள் பொறிக்கப்பெற்றிருந்தன. அதனை அவர் கள் 'ஹா ஓ' என்று கூறினுர்கள். நாம் 'எச்' என்பதை அவர்கள் 'ஹா' என்று சொல்லுகிருர்கள். அதற்கு

(Hondels Organizātion) என்பது முழுப்பெயராம். கிழக்கு பெர்லினில் உள்ள வியாபாரங்கள் அனைத்தும் அதனுடைய ஏகபோக உரிமை. அது அரசாங்கத்தாரால் நடத்தப் பெற்றது. ஹோட்டல்கள், உணவுச்சாலைகள், திரைப் படக் காட்சிச்சாலைகள், நாடகம், சங்கீதக்கச்சேரி முதலிய அனைத்தும் அரசாங்கத்தாரால் அல்லது அவர்களுடைய ஸ்தாபனங்களால் நடத்தப்பெற்றன. நூல் வெளியீடுகளும், பத்திரிகைகளும் அவ்வாறே. தனிப்பட்டவர்கள் நடத்திய தொழில் ஒன்றுமே இல்லை என்று கூறலாம். பழைய ஸ்டாம்பு, செய்திப்பத்திரிகை விற்பனைபோன்ற பெட்டிக்கடை வியாபாரங்களும், வீதிகளில் சென்று தட்டுக்களில் சிகரெட் முதலியன விற்கும் அற்ப வியாபாரங்களும்தான் தனியார்ப் பகுதியில் இருந்தன. சாண்ட்விச் பலகாரம் முதலிய உணவுப்பொருள் விற்ற பெட்டிக் கடைகள் அனைத்தும் ஹா ஓவின் கிளைகள். ஹா ஓ வியாபார நிலையங்கள் மிகப் பெரியவை. மேற்கு பெர்லினில் பெரிய வியாபார நிலையங்களைப் போலவே, அங்கும் ஏராளமான சாமான்கள் இருந்தன. சில வியாபார நிலையங்கள் நான்கு மாடியுள்ளவை. அத்தனை மாடிகளிலும் கண்ணுக்குக் கவர்ச்சியாகச் சாமான்களை அடுக்கியும் பரப்பியும் வைத்திருந்தார்கள். அங்கில்லாத சாமான்களே கிடையா; ஆனால் விலை மிக அதிகம். ஒரு ஜதை பூட்ஸ் நூற்று அறுபது மார்க்; அதாவது சுமார் நூற்று எண்பது ரூபாய்!

கிழக்கு ஜெர்மன் நாணயத்துக்கும் மேற்கு ஜெர்மன் நாணயத்துக்கும் ஒரே மதிப்பு என்று பெயர். ஆனால், நடைமுறையில் அவ்வாறில்லை. அப்பொழுது மேற்கு பெர்லினில், ஒரு மேற்கு ஜெர்மன் மார்க் நாணயத்துக்கு ஐந்து கிழக்கு ஜெர்மன் மார்க் நாணயம் கொடுத்தார்கள். சிறிது காலத்துக்குமுன் ஒரு மேற்கு ஜெர்மன் மார்க்

நாணயத்துக்கு, ஒன்பது கிழக்கு ஜெர்மன் மார்க் கிடைத்ததாக அறிந்தேன். ஆரம்பகாலத்தில் யார் வேண்டுமானாலும் கிழக்கு பெர்லின் சென்று வேண்டிய சாமான்களை வாங்கலாம். எனவே, ஒன்றுக்கு ஒன்பது பங்கு அதிகப் பணம் கிடைத்ததால் மேற்கு பெர்லின் வாசிகள் பலர் தினந்தோறும் அதிகாலையில் கிழக்கு பெர்லின் சென்று அங்கிருந்த காய்கறி, முட்டை, இறைச்சி எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு வந்தார்கள். கிழக்கு பெர்லினில் உள்ளவர்கள் வழக்கமாக வேலைக்குச்சென்று, மாலையில் வீட்டுக்குத் திரும்பியதும் சாமான் வாங்கக் கடைக்குச் சென்றபொழுது அங்கே ஒன்றுமே இல்லை. பின்னர், கிழக்கு பெர்லின் வாசிகள் மட்டும்தான் கடைகளில் சாமான்கள் வாங்கலாம் என்று சட்டமியற்றினர். அவர்களும் தங்களுடைய அடையாளச் சீட்டைக் காட்டவேண்டும். கிழக்கு மேற்கு பகுதிகளில் உள்ள அத்தனை ஜெர்மானியருக்கும் தனித் தனி அடையாளச் சீட்டு உண்டு. அதில், அவர்கள் பெயர், விலாசம், பிறந்த தேதி, தொழில் முதலியவை குறிக்கப்பெற்றிருந்தன. அவர்களுடைய புகைப்படம் ஒன்றையும் அதில் ஒட்டியிருந்தனர்.

கிழக்கு பெர்லினில் உணவுப் பங்கீடு இருந்தது. வெண்ணெய், இறைச்சி முதலியவை பங்கீடுப் பொருள்கள். பங்கீடுப் பொருள்களை விற்பதற்காகவே தனிக் கடைகள் இருந்தன. அவையும் ஹா ஓவைச் சேர்ந்தவைதான். ஒவ்வொருவருக்கும் அளவைக் குறிப்பிட்டுப் பங்கீடுச் சீட்டு வழங்கினார்கள். பங்கீடுப் பொருள்களைப் பெறுவதற்காக மக்கள் கடைகளில் வரிசையாகக் காத்து நின்றனர். பங்கீடுக் கடைகளிலே பங்கீடுப் பொருள்களின் விலை மிகக் குறைவு. ஒருவர் தமது பங்கீடுச் சீட்டில் கண்டிருந்த அளவைவிட

அதிகமாக பொருள்கள் வேண்டுமென்று விரும்பினுல், வியாபார நிலையத்துக்குச் சென்று அதிகமாகப் பணம் கொடுத்துத் தமக்கு அதிகமாய் வேண்டியவற்றை வாங்க லாம். பங்கீடுக் கடை விலையைக் காட்டிலும் வியாபார நிலையத்து விலை பல மடங்கு அதிகம்.

மேற்கு பெர்லினிலிருந்து தினந்தோறும் ஆயிரக் கணக்கான மக்கள் கிழக்கு பெர்லின் சென்று வந்தனர். அவர்கள் கிழக்கு பெர்லினில் உள்ள உணவுச் சாலை களில் சாப்பிடலாம்; தங்களுக்கு வேண்டியவரை மது அருந்தலாம்; ஆனுல் போத்தல்களை விலைக்கு வாங்க முடியாது. ஆளுக்கொரு சிகரெட் பெட்டியும், தீப்பெட்டி யும் விலைக்கு வாங்கலாம்; பத்திரிகைகளும் பிரசாரப் புத்தகங்களும் வாங்கலாம்; பாடப்புத்தகங்கள், பொது அறிவை வளர்க்கும் புத்தகங்கள் வாங்கமுடியாது. படக் காட்சி, நாடகம், சங்கீதக் கச்சேரி முதலியவற்றுக்குச் செல்லலாம்.

கிழக்கு பெர்லினிலிருந்து மேற்கு பெர்லின் செல் கிறவர்கள், மேற்கு பெர்லினில் எந்தச் சாமானை வேண்டு மானுலும் வாங்கலாம்; தடையே கிடையாது. ஆனுல், நாணயமாற்றத்தில்தான் நஷ்டம் அதிகம். ஐந்து கிழக்கு ஜெர்மன் மார்க்குக்கு ஒரு மேற்கு ஜெர்மன் மார்க் தான் கிடைத்தது.

ஸ்டாலினலியில் தொழிலாளருக்கு வீடு வாடகைக் குக் கிடைத்தது. வீடு என்பது மூன்று அல்லது நான்கு அறைகள் கொண்ட பகுதி. உள்ளே சென்று பார்க்க வாய்ப்புக் கிடைக்கவில்லை. அதைப்பற்றிய திரைப்படம் ஒன்றைப் பார்த்தேன். அமெரிக்கரும் பொருமைப்படத் தக்கவாறு, அந்த வீடுகளில் நவீன நாகரிக வசதிகள் அமைந்திருந்தன.

பல மணி நேரம் நடந்ததால், பெரிதும் அலுப்பாக இருந்தது. மேற்கு பெர்லினுக்குத் திரும்ப எண்ணி னேன். வழியில் சிறு பெட்டிக் கடையில், கிழக்கு பெர் லின் காட்சிகளை அச்சிட்ட கார்டுகள் விற்றனர். சில கார்டுகளை விலைக்கு வாங்கி, அதற்குள்ள தொகையை மேற்கு ஜெர்மன் நாணயத்தில் கொடுத்தேன். கடைக் காரர் அதனை வாங்க மறுத்துவிட்டார். என்னிடம் போதிய கிழக்கு ஜெர்மன் நாணயம் இல்லாததால், கார்டுகளைத் திருப்பிக் கொடுக்க நேர்ந்தது.

பூமிக்குக்கீழ் செல்லும் ரயில் நிலையத்துக்குச் சென்று பிரயாணச் சீட்டு வாங்குவதற்கு மேற்கு ஜெர்மன் நாண யத்தைக் கொடுத்தேன். அங்கும் வாங்க மறுத்துவிட்ட னர். அப்பொழுதுதான் முல்லரின் மனைவி கொடுத்த கிழக்கு ஜெர்மன் காசுகள் உதவியாக இருந்தன.

விடுதிக்குத் திரும்பினேன். அப்பொழுது முல்லர் முக்கியமான வேலையொன்றில் தமது கவனம் பூராவை யும் செலுத்தியதால் நான் வந்ததைக் கவனிக்கவில்லை. அவர் டோடோ (Toto)வுக்கு நம்பர் எழுதிக்கொண்டிருந் தார். டோடோ என்பது ஒரு போட்டிப் பந்தயம். அந் தப் பந்தயக் கூப்பன்களை விலை கொடுத்து வாங்கி, அதில் எண்களைப் பூர்த்தி செய்யவேண்டும். எங்கேயோ நடந்த கால் பந்தாட்டப் போட்டியின் முடிவைப் பொறுத் தது அதில் கிடைத்த பரிசு. ஆனால் பரிசுத் தொகை மிக அதிகம். மேற்கு ஜெர்மனியில் அப்பொழுது டோடோப் பித்து அதிகம். உழைக்காமலேயே ஓர் இரவில் பணக்காரராக வேண்டுமென்று, பலர் தங்கள் பணத்தை இழந்தார்கள்.

முல்லரின் மனைவி எனது 'அனுபவங்களை'த் தெரிந்து கொள்ள விரும்பினார்.

"அம்மா, நீங்கள் நாற்பது காசு கொடுத்தது நன்மையாக முடிந்தது. இல்லையானல் கிழக்கு பெர்லினிலிருந்து மேற்கு பெர்லின் எல்லைவரை சுமார் மூன்று மைல் நடந்துவர நேர்ந்திருக்கும்" என்று கூறி வந்தனம் செலுத்தினேன்.

ருஷ்யத் தூதர் காரியாலயத்தின் எதிரே, இரண்டு ராணுவ அதிகாரிகள் என்னை மோட்டாரில் ஏற்றிச் சென்ற விவரத்தைக் கூறினேன்.

உடனே முல்லர் தமது வேலையை விட்டுவிட்டு, "இல்லை, இல்லை. அதெல்லாம் பிரசாரம்; அன்போடு செய்வதன்று. நீங்கள் அந்நியர் என்பது உங்கள் நிறத்திலேயே தெரிகிறது. உங்களுக்கு இந்தமாதிரி உதவி செய்தால், உங்களூரில் கிழக்கு பெர்லினைப் பற்றிச் சொல்லுவீர்கள் அல்லவா? அதற்காகத்தான் இவ்வளவும். இது அரசியல் பிரசாரம்" என்ருர்.

"ஸ்டாலினலி வீதி அற்புதமாக அமைந்திருக்கிறது" என்றேன்.

"ப்ரீமா" என்ருர். அதாவது முதல்தரம் என்று அர்த்தம்.

"ஸ்டாலினலி வீதியில் தொழிலாளர்களுக்கு எவ்வளவு வசதிகள் செய்திருக்கிருர்கள்!" என்றேன்.

"அதை எல்லாம் நம்பாதீர்கள். அது வெறும் பிரசாரத்துக்காகத்தான். ஒரு வீதியைத் தவிர மற்றப் பகுதிகள் எல்லாம் பாழடைந்திருப்பதைக் கண்டிருப்பீர்கள். ஸ்டாலினலி வீதியில் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களுக்குமட்டும் வீடு கொடுப்பதால் என்ன பயன்? பதினுயிரக்கணக்கான தொழிலாளர்கள் சகிக்க

முடியாத துர்நாற்றமுள்ள பாழடைந்த கட்டிடங்களில் குளிர்காய்வதற்கு எவ்வித வசதியும் இல்லாமல் அவதிப் படுகின்றனர். தொழிலாளர்களுக்கு வசதியான வீடுகள் கட்டிக்கொடுத்திருப்பதெல்லாம், வெளியுலகத்தை மயக்குவதற்கான கம்யூனிஸ்டுப் பிரசாரம்" என்ருர் முல்லர்.

அதே கட்டிடத்தில் குடியிருந்த இளவயதுள்ள ஜெர்மன் பெண் ஒருத்தி அப்பொழுது அங்கு வந்தாள். அவர் முல்லர் குடும்பத்திற்குச் சிநேகமானவள். முல்லர் அவளை அறிமுகப்படுத்துகையில், "இவள் கணவனுடன் கிழக்கு பெர்லினில் வசித்துவந்தாள். இவளுடைய கணவனை ருஷ்யர்கள் எங்கோ கூட்டிக் கொண்டு போய்விட்டார்கள். ஒருவேளை சைபீரியாவுக் குக் கொண்டுபோய் இருக்கலாம். இரண்டு வருஷங்க ளாக ஒரு தகவலுமே இல்லை" என்ருர்.

"பாவம்; இவர் எப்படி வாழ்க்கை நடத்துகிருர்?" என்று கேட்டேன்.

"இவள் வீட்டிலேயே ஒரு தையல் இயந்திரத்தை வைத்துக்கொண்டு பெண்களுக்கு வேண்டிய ஆடை களைத் தயாரித்துக் கொடுக்கிருள். மேற்கு ஜெர்மன் அரசாங்கத்தார் இவளுக்கு மாதந்தோறும் எண்பது மார்க் ஜீவனும்சமாகக் கொடுக்கிருர்கள். இவள் கணவன் எப்பொழுது வருவான் என்று தெரியாது. ருஷ்யாவுக் குச் சென்றவர் திரும்புவது ஏது? அந்தப் பாவிகள் தங்களுக்கு வேண்டாதவர்களைக் கொலைகூடச் செய்து விடுவார்கள்" என்ருர் முல்லர்.

"யுத்தகாலத்தில் யூதர்களை நீங்கள் என்ன செய்தீர் கள்?" என்றேன்.

உடனே முல்லர், மிக்க ஆத்திரத்துடன், "அது வேறு விஷயம். யூதர்கள் அயோக்கியர்கள்; போக்கிரி கள்; தேசபக்தி யில்லாதவர்கள். யுத்தகாலத்தில் ஜெர் மானியர் நாட்டுக்காகப் போர்க்களத்திற்குச் சென்ற பொழுது, இந்த யூதர்கள் வியாபாரம்செய்து கொழுத்த லாபம் சம்பாதித்தார்கள். துரோகிகள்" என்ருர்.

"யூதர்கள் கொள்ளை லாபம் சம்பாதித்திருந்தால், அவர்களுடைய சொத்துக்களை எல்லாம் பறிமுதல் செய்வதோடு நின்றிருக்கலாமே. எதற்காக அவர்களைக் கொலை செய்யவேண்டும்? அதுதான் போகட்டும். அவர்களுடைய மனைவி மக்களையும் ஏன் கொல்ல வேண்டும்? அவர்கள் என்ன பாவம் செய்தனர்?" என்றேன்.

யூதர்களைக் கொலைசெய்தது தவருன காரியம் என்ற எண்ணமே முல்லருக்கு உண்டாகவில்லை. அவர் மீண் டும் ஆத்திரத்துடன், "ஹிட்லர் இருந்தபொழுது இந்த யூதர்கள் எல்லாம் உயிருக்குப் பயந்து ஓட்டம் பிடித்தார் கள். இப்பொழுது ஒவ்வொருவராக இந்த நாட்டுக்குள் வந்துகொண்டே யிருக்கிருர்கள்" என்ருர்.

விடுதியில் தங்கியிருந்த ஹாம்பர்க் நகரத்து வியா பாரி ஒருவர் எங்களுடன் சம்பாஷணையில் கலந்து கொண்டார்.

"என்ன இருந்தாலும் அமெரிக்கர்கள் நல்லவர்கள். சென்ற ஆண்டில் கிழக்கு ஜெர்மனி வழியாக மேற்கு பெர்லினுக்கு ரயில் வரக்கூடாதென்று ருஷ்யர்கள் தடை செய்தனர். அப்பொழுது அமெரிக்கரும் பிரிட்டிஷாரும் உணவுப் பொருள்களை விமானங்களில் கொண்டுவந்து குவித்தனர். நிமிஷத்திற்கு ஒரு விமானம் பெர்லினில் வந்து இறங்கிற்று" என்ருர் முல்லர்.

"அப்படியானல் அமெரிக்கர்களுக்கு நீங்கள் நன்றி செலுத்த வேண்டாமா?" என்றேன்.

உடனே ஹாம்பர்க் வியாபாரி, "அதெல்லாம் வெறும் அரசியல் பிரசாரம். ருஷ்யர்கள் தடைவிதித்த தால், தங்கள் கௌவரத்திற்குப் பங்கம் வந்துவிட்டதே என்பதற்காகத்தான் அமெரிக்கர்கள் விமானங்களில் உணவுப்பொருள் கொண்டுவந்து குவித்தனர். ஜெர் மானியர் கஷ்டப்படுகிறார்களே என்ற பச்சாதாபத்தினல் அன்று. இரண்டு ஆண்டுகளுக்குமுன் மேற்கு பெர்லின் வாசிகள் குளிர்காலத்தில் பட்டினியால் வாடி மடிந்தார் களே? அப்பொழுது இந்த அமெரிக்கர்கள் என்ன செய்தார்கள்? எல்லாம் வெளியுலகத்தை ஏமாற்றுவ தற்கான பிரசாரம் இது" என்ருர். முல்லர் ஒன்றுமே பதில் சொல்லவில்லை.

"எங்கள் மீது ஒருவருக்குமே உண்மையான அன்பு கிடையாது. கம்யூனிஸத்தை எதிர்ப்பதற்காகத்தான் அமெரிக்கர் இவ்வளவு உதவியும் செய்கின்றனர். இதை நாங்கள் நன்கு அறிவோம். ஜெர்மனி பெரிய நாடு. யுத்தத்தில் நாங்கள் தோல்வியடைந்தது உண்மை. அதன் கஷ்டங்களை நன்ருக அனுபவிக்கிருேம். அமெ ரிக்கா நல்ல கறவைப் பசு; முடிந்தவரையிலும் கறக் கிருேம். ஜெர்மனி அபாரமாக முன்னேறி வருகிறது. அதன் அபிவிருத்தியைக்கண்டு பிரிட்டன் நடுங்குகிறது. பிரான்ஸுக்கும் எங்களுக்கும் ஜன்மப் பகை. ருஷ்யர் எங்களைப் பழிக்குப் பழி வாங்கினர். அவர்கள் எங்களை வெறுக்கின்றனர். அமெரிக்கர்களோ ருஷ்யாவுக்கு விரோதமாகச் சண்டைபோட எங்களை உபயோகிக்க முயலுகின்றனர். ஜெர்மனி மீண்டும் பலம்பெற்ருல் என்ன ஆகும்? அந்நியர் ஒருவரையும்—அவர் ருஷ்ய

ராயினும் சரி, அமெரிக்கராயினும் சரி—இந்நாட்டில் தங்க அனுமதியோம். அமெரிக்காவுடனேயே நாங்கள் சண்டை போடும்படி நேர்ந்தாலும் நேரலாம். யார் கண்டார்கள் ?" என்ருர் ஹாம்பர்க் வியாபாரி.

"ராணுவப் பயிற்சி இளைஞர்களுக்கு அவசியம். சிறு வயதிலேயே ராணுவப் பயிற்சி அளித்தால்தான் அவர்களுக்கு ஒழுங்கும் கட்டுப்பாடும் உண்டாகும். இல்லையேல் அவர்கள் மனம்போன போக்கெல்லாம் போய்க் கெட்டுவிடுவார்கள்" என்ருர் முல்லர்.

ஹிட்லர் மறைந்தாலும் ஹிட்லரின் கொள்கை அந்த நாட்டிலிருந்து மறையவில்லை !

* * *

மேற்கு பெர்லினில், இந்திய ராணுவச் சங்கக் காரியதரிசியாக இருந்தவர் பாலச்சந்திர மேனன். அப்பொழுது அவர்தான் முழுப்பொறுப்பையும் ஏற்று நடத்தி வந்தார். ஒரு நாள் தமது வீட்டுக்கு உணவருந்த வரும்படி டெலிபோன் செய்தார். அங்கு செல்லும் டிராம் வண்டியின் எண் என்ன என்பதையும் தெரிவித்தார்.

அவர் வீட்டுக்குச் செல்ல டிராம்வண்டியில் ஏறினேன். அது புதிதாகவும், நவீனமாகவும், அழகாகவும் இருந்தது. அதில் பிரயாணிகள் அதிகமாக இல்லை. வண்டியின் ஒரு கோடியில் பிரயாணச் சீட்டு வழங்குபவருக்குத் (Conductor) தனி ஆசனம் இருந்தது. அதற்கருகே இரு புறங்களிலும் கதவுகள் இருந்தன. அதன் வழியாகத்தான் பிரயாணிகள் ஏறவேண்டும். மறு கோடியில் உள்ள கதவுகள் வழியாகத்தான் பிரயாணிகள் இறங்கவேண்டும். எல்லாக் கதவுகளும் மின்சாரத்தால் இயங்கின. மின் விசை சீட்டு வழங்குபவர் ஆசனத்துக்கு அருகில் இருந்தது. சீட்டு வழங்கிய இளைஞர்

நன்றாக ஆங்கிலம் பேசினார். அமெரிக்காவில் தாம் சில மாதங்கள் தங்கியிருந்ததாகக் கூறினார்.

"படிப்புக்காகச் சென்றீர்களா?" என்று கேட்டேன்.

"இல்லை. யுத்தக் கைதியாகச் சென்றேன்" என்றார்.

"அமெரிக்காவைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்றேன்.

"அமெரிக்கர்கள் என்னை மிகவும் நன்றாக நடத்தினார்கள். அது நல்ல நாடு. அவர்களை நான் நேசிக்கிறேன்" என்றார்.

யுத்தக்கைதியாக இருந்த ஒருவர் அம்மாதிரி சொல்லக்கேட்டது அதுவே முதன்முறை. தமக்கு மாதந்தோறும் சுமார் இருநூறு மார்க் சம்பளம் கிடைப்பதாகவும், சாதாரணமான வாழ்க்கை நடத்த அத்தொகை போதுமானது என்றும் அவர் கூறினார்.

"இம்மாதிரி வசதியான டிராம்வண்டிகளை நான் இதுவரை பார்த்ததில்லை" என்றேன்.

"இவற்றைக் குறித்து நாங்களும் பெருமையடைகிறோம். இரண்டு புது வண்டிகள்தான் இதுவரை செய்திருக்கிறார்கள். இவ்வருஷக் கடைசிக்குள் பல வண்டிகள் தயாராகிவிடும்" என்றார்.

இறங்கவேண்டிய இடத்தில் என்னை இறக்கிவிட்டு, செல்லவேண்டிய வீட்டுக்கு வழியையும் அவர் காட்டினார்.

ஒரு பெரிய வீட்டின் முன்புறத்தில் கொடிக்கம்பம் ஒன்றில் இந்தியாவின் மூவர்ணக்கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது. ஒரு ஜெர்மன் வேலைக்காரி

கதவைத் திறந்தாள். பாலச்சந்திர மேனனும் அவர் மனைவியும் புன்முறுவலுடன் வரவேற்றனர். பாலச்சந்திரன் நடுத்தர வயதுடையவர். வேறு நாடுகளின் தூதர் காரியாலயத்து அதிகாரிகள் சிலரையும் அவர் விருந்துக்கு அழைத்திருந்தார். மற்ற உணவுவகைகளுடன் சாம்பாரும் ரசமும் இருந்தன.

உணவுக்குப்பின், விருந்தினர்கள் அந்நியநாட்டு விஷயங்கள் குறித்து விவாதித்தார்கள். அரசியல் சம்பந்தமாக, சங்கடமான கேள்விகள் கேட்டபொழுது, பாலச்சந்திரன் பட்டும்படாமலும் பதில் கூறினார்.

பாலச்சந்திரன் எனக்குப் பலமுறை விருந்தளித்தார். ஒவ்வொரு முறையும் அந்நியநாட்டு 'ராஜதந்திர வகுப்பினர்' சிலர் விருந்துக்கு வந்தார்கள். பெரும்பாலும் அவர்களில் யாராவது ஒருவர், தம் வீட்டிற்குத் திரும்பியபொழுது என்னைத் தமது மோட்டாரில் அழைத்துச்சென்று எனது விடுதியில் இறக்கி விடுவார். அவர்களில் ஒருவர் பாலச்சந்திரன் தம்பதிகளைப்பற்றி மிக உயர்வாகவும் பெருமையாகவும் கூறினார். பெர்லினில் இருந்த அந்நியநாட்டு 'ராஜதந்திரக்' குழுவினர்களிலே, நமது நாட்டுப் பிரதிநிதிக்கு நல்ல பெயர் என்பதையறிய மகிழ்ந்தேன்.

பாலச்சந்திரன் வசித்த வீடு இந்திய அரசாங்கத்தாருடையது. வெளிநாட்டில் தங்கள் கௌரவத்தைக் கருதி அவ்வளவு பெரிய வீடு வைத்திருந்தார்கள். அதைச் சுத்தமாக வைத்துக்கொள்ளவே பல வேலையாட்கள் வேண்டியிருந்தது. வீட்டின் பின்புறத்தில் விசாலமான தோட்டமும், பெரிய தடாகமும் இருந்தன. யுத்தத்திற்குமுன் அது ஒரு பணக்கார யூதரின் வீடாம்.

அவர் தனியாக ஓய்வெடுத்துக் கொள்வதற்காகக் கட்டின சிறிய பங்களாவாம் அது. சிறிய பங்களாவே ஒரு பெரிய மாளிகை போலிருந்தால், அவர் வசித்த வீடு எவ்வளவு பெரிதாக இருந்திருக்க வேண்டும்? யூதர்கள் அவ்வாறு ராஜபோக வாழ்க்கை நடத்தியது ஜெர்மானி யர்களுக்கு வெறுப்பையும் அதிருப்தியையும் உண்டாக் கியது.

கிழக்கு, மேற்கு பகுதிகள் உள்பட பெர்லின் நகரின் நிலப்பரப்பு முந்நூற்று நாற்பத்தொரு சதுரமைல்; மக்கள் தொகை சுமார் முப்பத்து நான்கு லட்சம்.

பெர்லினில் தங்கியிருந்த ஒன்றரை மாத காலத்தில் பலமுறை கிழக்கு பெர்லினுக்குச் சென்றேன். தேவை யான கிழக்கு ஜெர்மன் நாணயங்களை மேற்கு பெர்லி னில் வாங்கிக்கொண்டேன். விடுதியைவிட்டு வெளியே சென்றபொழுது, எனது இரு சட்டைப்பைகளிலும் நாணயங்களை எடுத்துச் சென்றேன். ஒரு பையில் மேற்கு ஜெர்மன் நாணயம், மற்றொரு பையில் கிழக்கு ஜெர்மன் நாணயம்.

கிழக்கு பெர்லினில் நடைபெற்ற சங்கீத நாடகங்கள் மேற்கு பெர்லினைவிடச் சிறந்தவை என்று கேள்வியுற் றேன். பூமிக்குக்கீழ் ஓடும் ரயில் பாதையை, கிழக்கு மேற்கு பெர்லின் ஆகிய இரண்டும் சேர்ந்து நிர்வகித்த தால், கிழக்கு மேற்கு பகுதிகளில் நடைபெற்ற நாடகம், நடனம், சங்கீதக் கச்சேரி, திரைப்படம் முதலிய நிகழ்ச்சி களின் விளம்பரச் சுவரொட்டிகளை எல்லா ரயில் நிலையங் களிலும் ஒட்டியிருந்தார்கள். ஒவ்வொரு சுவரொட்டி யிலும் அந்த வாரம் முழுவதும் உள்ள நிகழ்ச்சிகளின் விவரங்கள் இருந்தன. சில சுவரொட்டிகளில் அந்த

மாத முழுவதும் உள்ள நிகழ்ச்சி நிரல் அச்சிடப்பெற் றிருந்தது. சில நிகழ்ச்சிகளுக்கு அனுமதிச் சீட்டுக்கள் முழுவதையும் முன்கூட்டியே விற்றுவிட்டால், அந்தக் குறிப்பிட்ட நிகழ்ச்சி அச்சடித்திருந்த இடத்தில் சிவப்பு மையால் பெரிய எழுத்துக்களில் 'இடமில்லை' என்று அச்சடித்துவிட்டனர். கிழக்கு பெர்லினில் நடைபெற்ற சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளுக்கு இரண்டு வாரங்களுக்கு இடமில்லை என்று அச்சடித்திருந்ததைப் பார்த்தேன்.

கிழக்கு பெர்லினில் ஒரு சங்கீத நாடக சாலைக்குச் சென்றேன். அப்பொழுது மாலை ஆறு மணி இருக்கும். இடமே இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அங்கிருந்து திரும்பியபொழுது இரண்டு ஜெர்மானியர்கள் அவசர மாக என்னிடம் வந்தார்கள்.

"எங்களிடம் இரண்டு அனுமதிச் சீட்டுக்கள் இருக் கின்றன. இரண்டையும் பதினறு மார்க் கொடுத்து வாங்கினேம். எதிர்பாராத சில அசெள்கரியங்களால் இன்று எங்களால் செல்ல முடியவில்லை. பத்து மார்க் கொடுத்தால் இரண்டு சீட்டுக்களையும் கொடுத்துவிடு கிரேம்" என்று அவர்கள் கூறினர்கள். ஐந்து மார்க் கொடுத்து ஒரு சீட்டுமட்டும் வாங்கிக்கொண்டேன்.

இரவு எட்டு மணிக்குத்தான் நிகழ்ச்சி ஆரம்பம். எனவே அருகிலிருந்த பெரிய உணவுச் சாலைக்குச் சென்றேன். அங்கே பரிமாறியவர்களில் ஆங்கிலம் தெரிந்த ஒருவர் என்னிடம் வந்து, உணவு வகையை விளக்கிக் கூறினர். ருஷ்ய, அர்மீனிய தேசத்து உணவு வகைகள் சில இருந்தன. அர்மீனிய தேசத்து உணவு களில், நமது நாட்டு உணவைப்போன்ற ஒருவகை உணவு இருந்தது. அதனைச் சமைத்திருந்த முறை நன்ருக இருந்தது; ஆனல் அவர்கள் உபயோகித்த

உணவுப்பொருள்களின் தரம் மிகக் குறைவு. மேற்கு பெர்லினில் கிடைத்த பண்டங்களைவிட, கிழக்கு பெர்லினில் கிடைத்த பண்டங்கள் மிகவும் மட்டரகமானவை. சர்க்கரைக்குப் பதிலாக 'சாக்ரீன்' உபயோகித்தார்கள். வெண்ணெய்க்குப் பதிலாக 'மார்கரீன்' என்ற கொழுப்பை உபயோகித்தார்கள். ஆனால் கிழக்கு பெர்லினில் முட்டைகள்மட்டும் தினந்தோறும் புதிதாகக் கிடைத்தன.

உணவுக்குப் பின், அருகில் நடைபெற்ற கேளிக்கை நிறைந்த ஒரு சிறு பொருட்காட்சிக்குச் சென்றேன். அங்கே ஏராளமான மின்சார விளக்குகள் எரிந்தும், வெளிச்சம் பிரகாசமாக இல்லை. பல சில்லறைக் கடைகள் இருந்தன. சூதாட்டங்கள் பல நடந்தன. சில கடைகளில் அதிர்ஷ்டச் சீட்டுகள் இருந்தன. துண்டுக் காகிதங்களைச் சுருட்டி ஒரு பெட்டிக்குள் வைத்திருந்தனர். இருபது காசு கொடுத்து ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தால், அதில் என்ன எழுதியிருந்ததோ, அந்தச் சாமான்களைக் கொடுத்தார்கள். பெரும்பாலான துண்டுக் காகிதங்கள் வெறுங் காகிதங்களாகவே இருந்தன. அதிர்ஷ்டவசமாகச் சாமான்கள் கிடைத்தாலும், அவை ஒன்றுக்கும் உதவாதவை.

நமது நாட்டில் திருவிழாக்களில் குழந்தைகள் சுற்றும் ராட்டினங்களைப்போல, அங்கு இரண்டு ராட்டினங்கள் இருந்தன. அவை பெரியவை; மின்சாரத்தால் இயங்கின. குழந்தைகள் மட்டுமின்றி, வயதுவந்தோர்களும் அவற்றில் ஏறி மகிழ்ந்தார்கள்.

அங்கு கூட்டம் அதிகமில்லை. அங்கு வந்திருந்தோரில் பலருடைய ஆடை, அழுக்காக மட்டுமின்றிக்

கந்தலாகவும் இருத்தது. சிலருடைய முகங்களில் வறுமை தாண்டவமாடிற்று.

ஏழேமுக்கால் மணிக்கு நாடகசாலைக்குச் சென்றேன். அங்கே ஏராளமான மக்கள் கூடியிருந்தனர். அவர்களில் பெரும்பாலோர் மேற்கு பெர்லின் வாசிகள். பொதுவாக எல்லோருமே நன்ருக ஆடையணிந்திருந்தனர். நாடக சாலை புதிய கட்டிடம்; அது பெரிதாகவும், அழகாகவும் இருந்தது. ஆசனங்கள் வசதியாக இருந்தன. எல்லா நாற்காலிகளும் ஒரே மாதிரி வசதியானவை. ஆனல், உட்காரும் தூரத்துக்குத் தக்கவாறு கட்டணத்தில் வித்தியாசம் உண்டு; கட்டணம் மூன்று மார்க் முதல் பதினைந்து மார்க் வரை. எட்டு மணிக்கு நாடகசாலை நிரம்பிவிட்டது. மக்கள் அமைதியாக இருந்தனர். எனது பக்கத்திலிருந்த மேற்கு பெர்லின்வாசி மிக நன்ருக ஆங்கிலம் பேசினுர்.

"இன்று நடைபெறுவதாக இருந்த சங்கீத நாடக நிகழ்ச்சியை ரத்துச் செய்துவிட்டார்கள். ருஷ்யாவிலிருந்து மூன்று சிறந்த சங்கீத வித்வான்கள் வந்திருக்கிருர்கள். இன்று, ஒரு நாள் மட்டும்தான் அவர்கள் பாடுவார்கள். எனவே இன்று நீங்கள் இங்கு வந்தது அதிர்ஷ்டவசமேயாகும்" என்ருர் அவர்.

மணி எட்டேகால் ஆயிற்று; ஆனல் நிகழ்ச்சி ஆரம்பமாகவில்லை. மணி எட்டரையும் ஆயிற்று. அப்பொழுதும் ஆரம்பமாவதற்கான அறிகுறிகள் ஒன்றையும் காணேம். ஆனல் மக்கள் மிக்க அமைதியுடன் இருந்தனர்.

"ஏன் தாமதமாகிறது?" என்று பக்கத்திலிருந்தவரைக் கேட்டேன்.

“ருஷ்யர்கள் எப்பொழுதுமே இப்படித்தான்; குறித்த காலத்தில் வரமாட்டார்கள். அது அவர்கள் வழக்கம்” என்ருர் சிரித்துக்கொண்டே.

எட்டே முக்கால் மணிக்கு நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. மேடையில் சுமார் முப்பதுபேர் கொண்ட வாத்தியக் கோஷ்டியினர் அமர்ந்திருந்தனர். அவர்கள் அத்தனை பேரும் கிழக்கு ஜெர்மானியர். சிறிது நேரத்தில் ஒரு ருஷ்யர் மேடையில் தோன்றினர். அவர் அரை மணி நேரத்திற்கு அதிகமாக பிடில் வாசித்தார். அந்த நேரம் போனதே தெரியவில்லை. மக்கள் அனைவரும் அந்த இனிய ஓசையில் மெய்ம்மறந்திருந்தனர்.

அடுத்து வந்தவர் ஒரு ருஷ்யப் பாடகர். அவர் பாடியது ருஷ்ய மொழியில்; மிகவும் கம்பீரமான சாரீரம். மொழி தெரியாவிட்டாலும் மக்கள் அதனை ரசித்தனர்.

கடைசியாக மேடையில் தோன்றியவர் ஒரு ருஷ்யப் பெண். அவர் பியானே வாசித்தார். வாசிப்பு மிக அபாரமாக இருந்தது. அவர் வாசித்து முடிந்ததும், மக்கள் அனைவரும் எழுந்து நின்று கைகொட்டி ஆர வாரம் செய்து, அவருடைய மேதையைக் கௌரவித்த காட்சி மிகவும் உருக்கமாக இருந்தது.

அந்தக் கச்சேரியில் அரசியலோ அன்றிப் பிர சாரமோ இல்லை. ருஷ்யர் பாடிய பாட்டுக்களில் ஏதா வது இருந்தாலும், அது யாருக்கும் புரிந்திராது. உயர்ந்த சங்கீதம், மக்களைப் பரவசப்படுத்தி எவ்வாறு மெய்ம்மறக்கச் செய்கிறது என்பதற்கு அந்தக் கச்சேரி ஒரு சிறந்த உதாரணம்.

கச்சேரி முடிந்ததும் நாடகசாலையைவிட்டு வெளியே வந்தேன். அப்பொழுது, “செட்டியார்! சௌக்கியமா?”

என்ற குரல் கேட்டது. கிழக்கு பெர்லினிலே, "இரும்புத் திரைக்குப் பின்னே", பெயரைச் சொல்லி, தமிழிலே பேசுவது யார் என்று ஆச்சரியத்தோடு திரும்பிப் பார்த்தேன். அவர்தான் ஸ்ரீ வேங்கடேசம். அவர் ஐதராபாத்தில் பிறந்த தெலுங்கர். எட்டு மாதங்களுக்கு முன்னர் அமெரிக்காவில் கொலம்பஸ் என்ற ஊரில் ஒரு நாள் அவருடன் தங்கியிருந்தேன். தாய்நாடு திரும்பும் வழியில் அவர் பெர்லினுக்கு வந்திருந்தார். அவருடன் இரண்டு இந்திய மாணவர்களும் பிரயாணம் செய்தனர்.

மறுநாள் காலையில், மேற்கு பெர்லினில் வேங்கடேசத்தை அவர் தங்கியிருந்த ஹோட்டலில் சந்தித்தேன். இரண்டு நாட்கள் மட்டுந்தான் அவர் பெர்லினில் தங்கினார். அவ்வூரை விட்டுச் செல்லுமுன் நல்ல புகைப்படக் கருவி (Camera) வாங்க வேண்டுமென்று அவருக்கு ஆவல். அக் கருவிக்குப் பேர்பெற்றது ஜெர்மனிதான். பல கடைகளுக்குச் சென்றோம். அங்கே உயர்ந்த புத்தப் புதிய கருவிகள் பல இருந்தன. பெர்லினுக்கு அதிகமான யாத்திரிகர் வராததால், அவற்றுக்கு அதிகமான கிராக்கி இல்லை. எனவே விலையில் பத்து முதல் பதினைந்து சதவிகிதம் கழிவு தந்தார்கள். வியாபாரிகளைத் தவிரத் தனிப்பட்டவர்களுக்குக் கழிவு தருவது சட்டவிரோதம்.

"உங்களுக்காகக் கழிவு தருகிறோம். இதை யாரிடமும் சொல்லாதீர்கள்" என்று ஒவ்வொரு கடைக்காரரும் எங்களிடம் கூறினார்கள். எங்களுக்கு மட்டுமன்று; எல்லோருக்குமே கடைக்காரர்கள் அவ்வாறுதான் கூறி வந்தனர்.

காமிராவைத் தவிர ரேடியோ, டேப் ரிகார்டர் என்னும் ஒலிப்பதிவு இயந்திரம், தூரதிருஷ்டிக் கண்ணாடி முதலியனவும் கடைகளில் ஏராளமாக இருந்தன.

அமெரிக்கச் சாமான்களைக் காட்டிலும் ஜெர்மன் சாமான்கள் கவர்ச்சியாக இருந்தன. அவற்றை அடுக்கியும் பரப்பியும் வைத்திருந்த அழகே தனி.

* * *

பிராங்போர்ட்டிலிருந்து வால்த்தரின் காரியதரிசி கடிதம் எழுதினார். அவர் பாரிஸ் நகரிலிருந்த வால்த்தருடன் டெலிபோனில் பேசியதாகவும், அம்மாதம் பதினாரும் தேதி இரவு ஹாம்பர்க் நகரிலோ அல்லது பதினெட்டாம் தேதிக்குமேல் பிராங்போர்ட்டிலோ, இரண்டில் எது சௌகரியமோ அங்கே சந்திக்கலாம் என்று வால்த்தர் கூறியதாக எழுதியிருந்தார். எதிர்பார்த்ததைவிட அதிக நாள் பெர்லினில் தங்க தீர்மானித்தேன். வால்த்தரைச் சந்திப்பதற்குப் பிராங்போர்ட் சென்று திரும்புவதைக் காட்டிலும் ஹாம்பர்க் சென்று திரும்புவதுதான் செலவு குறைவு. குறிப்பிட்ட நாளில் பிரயாணமானேன்.

வழக்கம்போல, விமானத்தில் கூட்டம் அதிகம். எனக்கு அடுத்தாற்போலிருந்த பிரயாணி ஒரு பெண். அவருடைய சொந்த ஊர் ஹாம்பர்க். ஜெர்மனியில் பிரபலமான ஒரு பாடகிக்குத் தாம் காரியதரிசியாகப் பணியாற்றுவதாகக் கூறினார்.

“இதோ பாருங்கள்; இந்த விமானத்தில் எத்தனை பிரயாணிகள்? யாராவது ஒருவரோடு ஒருவர் பேசுகிறார்களா? எல்லாம் சிடுமூஞ்சிகள்; ஜெர்மானியரே இப்படித்தான்” என்றார்.

“தாங்களும் ஒரு ஜெர்மானியர்தானே?” என்றேன்.

அதற்கு அவர், “எனது தந்தை ஜெர்மானியர்; தாய் ஸ்பெய்ன் தேசத்துக்காரி” என்றார். தாய் பிறந்த நாட்டை மிகப் பெருமையுடன் சொன்னார்.

ஹாம்பர்க்கில் உள்ள இந்திய ஸ்தானிகர் காரியால யத்துக்குச் சென்றேன். அங்கும் எனக்கு ஒரு கடிதம் இருந்தது. வால்த்தரின் காரியதரிசி, பெர்லின் விலாசத் துக்கு எழுதிய கடிதத்தின் நகல் ஒன்றை, ஹாம்பர்க் விலாசத்துக்கும் அனுப்பி, தமது கடமையைச் சரிவரச் செய்திருந்தார்.

வால்த்தர் தங்குவதாக இருந்த ஹோட்டலுக்குச் சென்றேன். அவரைப்பற்றி ஒரு தகவலும் இல்லை. அவர் ஹாம்பர்க்கில் ஒருநாள்மட்டும் தங்குவதாக ஏற்பாடு. இரண்டு மணி நேரத்துக்கு ஒருமுறை அந்த ஹோட்டலுக்குச் சென்று விசாரித்தேன்.

மேற்கு ஜெர்மனியிலேயே பெரிய வியாபார ஸ்தலம் ஹாம்பர்க். அதன் ஜனத்தொகை சுமார் பதினேழு லட்சம். பெர்லினைக் காட்டிலும் அவ்வூரில் வாழ்க்கைச் செலவு அதிகம். குண்டு வீச்சால் அதிகமாகச் சேத மடைந்த ஊர்களில் ஹாம்பர்க் ஒன்று. ஆனால் அந்த ஊரைப் பார்த்தால் அங்கே குண்டுகள் விழுந்ததாகவே கூறமுடியாது. இடிந்த கட்டிடத்தைப் பார்க்கவே முடி யாது. சில ஆண்டுகளுக்குமுன் அவ்வூர் குண்டு வீச் சால் பெரும் சேதமடைந்தது என்பதைக் காட்டும் அறி குறியோ அல்லது சின்னமோ எங்குமே தென்படவில்லை. யுத்தத்திற்குப் பிறகு பல பெரிய புதிய கட்டிடங்களைக் கட்டினார்கள். சில கட்டிடங்கள் ஆறு மாடிகள் உள் ளவை. புதிய கட்டிடவேலை ஓயாது நடந்துகொண்டே இருந்தது.

ஊருக்குள்ளே ஒரு பெரிய ஏரி; அதைச் சுற்றிலும் நான்கு வீதிகள். அவற்றில் மூன்று வீதிகள் முழுவதி லும் பெரிய வியாபார நிலையங்கள் இருந்தன. ஏரிக்குள் ளேயே கரையோரங்களில் சில சிறிய கட்டிடங்கள்

இருந்தன. அவையனைத்தும் உணவுச்சாலைகள். இரவு நேரத்தில் பல வர்ணமுள்ள ஆயிரக்கணக்கான மின்சார விளக்குகள் பிரகாசித்தன. அவற்றின் சாயல் ஏரித் தண்ணீரில் தோன்றியது ஓர் அற்புதமான காட்சி!

ஜெர்மனிக்குத் துறைமுகங்கள் இரண்டு. ஒன்று ஹாம்பர்க்; மற்றொன்று பிரெமன். ஹாம்பர்க்கில் பிரதானமான தொழில் கப்பல் கட்டுவது.

நல்ல உணவுச்சாலையொன்றைத் தேடிக் கடைத் தெருவுக்குச் சென்றேன். உணவுச்சாலைகளில் அன்று தயாரித்துள்ள உணவு வகைகளின் பெயர்களையும், அவற்றின் விலை விவரங்களையும் எழுதி வெளியில் தொங்கவிட்டிருந்தார்கள். அதைப் படித்துவிட்டு, என்ன சாப்பிடலாம் என்பதை முன்கூட்டியே முடிவு செய்து கொள்ளலாம். நமக்கு விருப்பமான உணவு அங்கே இல்லை என்றால், வேறு உணவுச்சாலைக்குச் செல்லலாம்.

ஒரு சாதாரணமான கட்டிடத்தில் மாடிக்குச் செல்லும் படிக்கட்டு வாயிலில், உணவு வகைகள் எழுதியிருந்த காகிதம் ஒன்றை ஒட்டியிருந்தார்கள். அந்த உணவுச்சாலை இரண்டாவது மாடியில் உள்ளது. தினந்தோறும் பகல் பன்னிரண்டு முதல் பிற்பகல் மூன்று மணி வரையிலும்தான் அது திறந்திருக்குமென்று அதில் எழுதியிருந்தார்கள். அதில் கண்ட உணவுவகை மிகச் சில. இரண்டாவது மாடிக்குச் சென்று உணவுச்சாலையை அடைந்தேன். அங்கே நாற்பது பேர் உட்கார வசதியிருந்தது. சுமார் முப்பதுபேர் அப்பொழுது உணவருந்தினர். இடம் சுத்தமாக இருந்தது; ஆனால் கவர்ச்சியாக இல்லை. இரண்டு பெண்கள் உணவு பரிமாறினர். யாருமே அவசரப்படவில்லை. சாதாரண உணவுச்சாலைகளில் உள்ளதைப்போல, அங்கே சத்தம் கிடையாது.

சாப்பிட்டவர் அனைவருமே நடுத்தர வகுப்பினர். பெரும்பாலோர் அருகிலுள்ள வியாபார நிலையங்களில் உள்ள ஊழியர்கள். அவர்கள் அங்கே வழக்கமாகச் சாப்பிடுகிறவர்கள் என்று அறிந்தேன். சாப்பிடமுடியாத அவ்வளவு அதிகமாக உணவு பறிமாறினர்கள். சாப்பாடு, வீட்டுச் சமையல்போல இருந்தது. விலையும் குறைவு. உணவின் விலையோடு ஒட்டிக்கொண்டிருக்கும் பத்துச் சதவிகிதம் இனமும் அங்கில்லை.

* * *

"உங்கள் ஊரைப்பற்றி ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனல் அது எவ்வளவுதூரம் உண்மையென்று தெரியாது" என்று ஹாம்பர்க் நகரில் ஒரு வியாபாரியைக் கேட்டேன்.

"என்ன கதை?" என்றார்.

"முதலாவது உலக யுத்தம் நடைபெற்றபொழுது, லண்டனில் உள்ள ஒரு தினப்பத்திரிகையில், அதனுடைய ஹாம்பர்க் நிருபரிடமிருந்து கிடைத்த செய்திகள் வெளிவந்தன. எல்லாம் தவருன யுத்தச் செய்திகள். அந்த நிருபருக்கு ஹாம்பர்க் எங்கே உள்ளது என்பதே தெரியாதாம். அவர் லண்டனில் தமது பத்திரிகைக் காரியாலய அறையில் இருந்துகொண்டே ஹாம்பர்க்கிலிருந்து எழுதுவதாக ஏமாற்றிவந்தார். சில நாட்களில் இது அம்பலத்துக்கு வந்தது. பத்திரிகையில் ஏதாவது பொய்யான செய்தி வெளியானல், அதனை 'ஹாம்பர்க் நியூஸ்' என்று ஏளனமாகச் சொல்லுவார்களாம். 'ஹாம்பர்க் நியூஸ்' என்பது நாளடைவில் 'ஹம்பக் நியூஸ்' ஆகமாறிவிட்டதாம்" என்றேன்.

அவர் ஒன்றுமே பதில் சொல்லாமல் சிரித்தார். நான் கூறிய கதையையும் 'ஹம்பக்' என்று அவர் நினைத்திருக்கக் கூடும் அல்லவா?

ஒரு ஜெர்மானிய இளைஞரைச் சந்தித்தேன். அவர் நன்ருக ஆங்கிலம் பேசினர். அமெரிக்காவில் பதினறு ஆண்டுகளுக்குமுன் சந்தித்த ஒரு நண்பரை மீண்டும் சந்திக்க வந்திருப்பதாகக் கூறினேன். அரசியலைப்பற்றிப் பேச்சு வந்தது. நான் சந்திக்கப்போகும் நண்பர் அந்தக் காலத்தில் ஒரு நாஜியாக இருந்தார் என்றேன். ஹிட்லரின் ஆட்சியில், அவருடைய கட்சியான நாஜி (Nazi) கட்சியொன்றுதான் இருந்தது. ஜெர்மானியர்களில் பெரும்பாலோர் நாஜிகளாக இருந்தனர்.

"இப்பொழுது உங்கள் நண்பர் என்ன செய்கிருர்?" என்று கேட்டார்.

"எஃகுத் தொழிற்சாலைக் காரியாலயத்தில் முக்கிய அதிகாரியாக இருக்கிருர்" என்றேன்.

உடனே அவர் "நாஜி—எஃகு-யுத்தம்" (Nazi-Steel-War) என்று மெதுவாகவும், அழுத்தமாகவும் வெறுப்புடன் கூறினர். நாஜி கொள்கைக்கும், எஃகுக்கும் யுத்தத்துக்கும் நெருங்கிய தொடர்பு என்பதால், நாஜி இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் எஃகுத் தொழிற்சாலைகளில் வேலை செய்தால், அதன் விளைவு யுத்தம்தான் என்பது அவர் கூறியதன் கருத்து.

இளைஞருடைய தந்தை ஜெர்மானியர்; தாய் யூதர். அவருடைய தாயை யுத்தகாலத்தில் படாதபாடு படுத்தினர்களாம். அவரும் கஷ்டங்களுக்குள்ளானதாகக் கூறினர். நாஜி என்ருலே அவருக்கு நஞ்சு.

* * *

ஹாம்பர்க் ரயில் நிலையம் மிகப் பெரிது. அங்கே ஏராளமான கடைகளும் உணவுச்சாலைகளும் இருந்தன.

எல்லா நாட்டுப் பத்திரிகைகளும் அங்கே கிடைத்தன. அங்குள்ள ஓர் உணவுச்சாலையில் ஐஸ்மோர் விலை பத்துக்காசு; காப்பியின் விலை ஐம்பதுகாசு. ஜெர்மனியில் பிரபலமான 'பீர்' என்னும் குடிவகையின் விலை காப்பி யின் விலையைவிடக் குறைவு.

ரயில் நிலையத்துக்கு எதிரே ஓர் இந்தியரைச் சந்தித் தேன். தாம் ஒரு பத்திரிகை நிருபர் என்றும், பம்பாய் ராஜ்யத்தைச் சேர்ந்த கோலாப்பூர் வாசி என்றும் கூறி னார். தாம் குறிப்பிட்ட எந்தப் பத்திரிகையிலும் வேலைக்கு இல்லையென்றும், பல இந்தியப் பத்திரிகை களுக்குக் கட்டுரைகள் எழுதுவதாகவும் சொன்னார்.

"இந்தியப் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதி அதனால் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு ஒருவர் எப்படி வாழ்க்கை நடத்தமுடியும் — அதுவும் வெளி நாட்டிலே ?" என்றேன்.

"நான் ஜெர்மன் பத்திரிகைகளுக்கும் கட்டுரைகள் எழுதுகிறேன். எனக்கு ஜெர்மன் மொழி தெரியாது. ஆங்கிலத்தில் எழுதும் எனது கட்டுரைகளை ஒரு நண்பர் மொழிபெயர்க்கிறார். இந்நாட்டில் கட்டுரைகளுக்கு நல்ல சன்மானம் தருகிறார்கள். இந்தியப் பத்திரிகைகளை மட்டும் நம்பியிருந்தால் பட்டினிதான்" என்றார்.

வால்த்தர் வரவே இல்லை; எனக்குத் தகவலும் தெரிவிக்கவில்லை. எனவே தாமஸ் குக் காரியாலயத் துக்குச் சென்று, அன்று 'இரவு சர்வீஸ்' விமானத்தில் பெர்லின் செல்ல விரும்புவதாகக் கூறினேன். அங் கிருந்த இளைஞர் விமானக் கம்பெனிக்கு டெலிபோன் செய்தார். அதிர்ஷ்டவசமாக இடம் இருந்தது. எனது பெயரைச் சொல்லியபொழுது ஒவ்வோர் எழுத்தாக

உச்சரித்தார். கேட்கிறவருக்கு அந்த உச்சரிப்பு சரியாகப் புரியாவிட்டால், அந்த எழுத்து இன்ன வார்த்தையில் உள்ள முதல் எழுத்தைப் போன்றது என்று சொல்லுவது வழக்கம். அந்த இளைஞர் செட்டியார் என்ற பெயரின் ஆங்கில முதல் எழுத்தை உச்சரித்தபொழுது, "C for Churchill" என்றார். சர்ச்சில் என்ற பெயரில் உள்ள முதலாவது எழுத்தைப்போல என்று பொருள். எனது பெயரில் இரண்டாவது ஆங்கில எழுத்து எச். "H for Hitler" என்றேன். அதாவது ஹிட்லர் என்ற பெயரில் உள்ள முதலாவது எழுத்துப்போல என்று பொருள். ஹிட்லர் என்று நான் கூறியதும் அவர் உடனே உரக்கச் சிரித்துவிட்டார். சென்ற முறை அந்நாட்டுக்குச் சென்றிருந்தபொழுது, 'ஹிட்லர்' என்ற பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே மக்கள் நடுங்கினார்கள்.

* * *

பெர்லினில் பழைய விடுதிக்கே வந்து சேர்ந்தேன். ஹாம்பர்க்கில் எனக்கு நேர்ந்த ஏமாற்றத்தைக் குறித்து வால்த்தருக்கு எழுதினேன்.

"உடல் நலமின்மையால் ஹாம்பர்க் செல்லவில்லை. நீங்கள் நிச்சயமாக ஹாம்பர்க்கில் என்னைச் சந்திப்பதாக எனது காரியதரிசி என்னிடம் கூறவில்லை. சந்திக்க முடியாமல் போனதற்கு மிகவும் வருந்துகிறேன்" என்று வால்த்தர் பதில் எழுதினார். அந்த விவரத்தை நார்வே ஜானுக்கும், ஹாலந்து வால்ட்டுக்கும் உடனே தெரிவித்தேன்.

மேற்கு பெர்லினில் ஏராளமான திரைப்படக் காட்சிச்சாலைகள் இருந்தன. அவற்றில் பெரும்பாலும் அமெரிக்கப் படங்களையே திரையிட்டனர். இத்தாலிய

பிரெஞ்சுப் படங்களையும் பார்த்தேன். ஜெர்மனியில் தயாரித்த படங்கள் பெரும்பாலும் மட்டரகம். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை காலையிலும், பல காட்சிச்சாலைகளில் அறிவு வளர்ச்சிக்கான நல்ல படங்களைத் திரையிட்டனர்.

மேற்கு பெர்லினில் ஒரு காட்சிச்சாலையில் செய்திப் படங்களைமட்டும் திரையிட்டனர். அங்கே அடிக்கடி சென்றேன். இந்தியாவைப்பற்றிய செய்தியொன்றைப் பார்த்தேன். புதுடில்லியில் புது வீடுகள் கட்டிய காட்சியைப் படம் பிடித்திருந்தனர். அதில் 'சுதந்திர உலகத்துக்குச் செய்திகளை'த் திரையிட்டார்கள். கம்யூனிஸம் பரவாத நாடெல்லாம் அவர்களுக்குச் 'சுதந்திர உலகம்'.

கிழக்கு பெர்லினில் உள்ள ஒரு ரயில் நிலையக் கட்டிடத்தில் அமைக்கப்பெற்றிருந்த செய்திப்படக் காட்சிச் சாலைக்குப் பல முறை சென்றேன். ஒருமுறை இந்தியச் செய்தியொன்றை அங்கே பார்த்தேன். அவர்களும் 'சுதந்திர உலகச் செய்திகளை' மட்டும்தான் திரையிட்டார்கள். ஆனால் அது முற்றிலும் வேறான 'சுதந்திர உலகம்'.

அந்த இரண்டு 'சுதந்திர உலகங்'களிலுமுள்ள பொதுவான தேசம் இந்தியாதான்!

* * * *

மேற்கு பெர்லினில் உள்ள மிருகக்காட்சிச்சாலை உலகப் பிரசித்திபெற்றது. யுத்தத்தின்போது அங்கிருந்த மிருகங்கள் அனைத்தையும் சுட்டுக்கொன்றுவிட்டனர். யுத்தத்திற்குப் பின்னர்தான் கொஞ்சம் கொஞ்சமாக மிருகங்களைச் சேகரித்து வந்தனர். அங்கிருந்த யானை, இந்தியாவின் அன்பளிப்பு. மிருகக் காட்சிச்சாலைக்குள் செல்வதற்குப் பிரவேசக் கட்டணம்

ஒரு மேற்கு ஜெர்மன் மார்க், அல்லது இரண்டு கிழக்கு ஜெர்மன் மார்க்.

மேற்கு பெர்லினில் பார்க்கவேண்டிய முக்கியமான இடம் ஒலிம்பிக் விளையாட்டு அரங்கு. அங்கேதான் சென்றமுறை ஒலிம்பிக் விளையாட்டுப் பந்தயங்கள் நடைபெற்றன. ஜெர்மனிக்கும் மற்ற தேசங்களுக்குமிடையே நடைபெற்ற கால்பந்தாட்டப் போட்டிகள் அனைத்தும் ஒலிம்பிக் அரங்கில் நடைபெற்றன.

ஊருக்கு நடுவே உயரமாக அமைந்திருந்தது 'புஸ்டார்ம்' என்னும் கோபுரம். அதன் உயரம் நானூறு அடி. மேலே செல்ல மின்சார 'லிப்டு'கள் இருந்தன. போகும் வழியில் பாதி உயரத்தில் உணவுச்சாலை ஒன்றிருந்தது. உச்சியிலிருந்து, ஊர் முழுவதும் நன்ருகத் தெரிந்தது.

பொருட்காட்சிச்சாலையும் பார்க்கத்தக்க ஒன்று. அது இரண்டு மாடிகளுள்ள புதிய பெரிய கட்டிடம். யுத்த காலத்தின்போது, காட்சிச்சாலையில் இருந்த பொருள்களை எல்லாம் ஊருக்கு வெளியே கொண்டுபோய் ரகசியமாகப் புதைத்துப் பத்திரப்படுத்தி வைத்திருந்தார்களாம். பொருட்காட்சிச்சாலையில் ஜெர்மானியப் பொருள்களைக் காட்டிலும், மற்ற நாடுகளைப் பற்றியுள்ள பொருள்கள் தான் அதிகம்.

பொருட்காட்சிச் சாலையின் ஒரு பகுதியில் சிறந்த ஓவியங்கள் காட்சியளித்தன. மற்ருெரு பகுதியில் எஸ்கிமோ மக்களைப் பற்றிய காட்சிப் பொருள்களும், ஆஸ்திரேலியாவுக்கு அருகேயுள்ள நியூகினியைப் பற்றிய காட்சிப் பொருள்களும் இருந்தன. பிறிதொரு புறத்தில் திபேத் நாட்டு புத்தக் கோயிலைப் போல ஒன்றை அமைத்து, அதில் விக்கிரகங்களை வைத்திருந்

தார்கள். அங்கே சென்ருல் திபேத் நாட்டுக் கோயில் ஒன்றில் இருப்பது போன்ற உணர்ச்சியே எற்படும். இந்தியாவைப்பற்றிய காட்சிப் பொருள்களில், தமிழ் நாட்டு ஆலயங்கள், தேர் திருவிழாவைச் சித்தரிக்கும் சிறிய நெட்டித்தட்டை 'மாதிரிகள்' குறிப்பிடத்தக்கவை.

பெர்லினில் ஊரையடுத்து ஏராளமான காடுகள் இருந்தன. அவை அதன் தனிச் சிறப்பு. விடுமுறை நாட்களில் ஆயிரக்கணக்கான மக்கள் காடுகளுக்குள் சென்று மைல் கணக்காக நடந்து திரும்பினுர்கள்.

மேற்கு பெர்லினில் ரூர் போஸ்ட் என்ற ஓர் அறிவிப் புப் பலகையைக் கண்டேன். அது ஒரு வசதியான தபால் ஏற்பாடு. மேற்கு பெர்லினில் பல தபால் நிலேயங்கள் இருந்தன. அவற்றில் முக்கியமான நிலேயங்களில் 'ரூர் போஸ்ட்' இருந்தது. நகரிலேயே ஒரு பகுதியிலிருந்து மற்ருெரு பகுதியிலுள்ள ஒருவருக்குக் கடிதம்—தந்தி யைப் போன்று சுருக்கமாக—எழுதி, அதனேத் தபால் நிலேயத்தில் கொடுத்தால், அவர்கள் உடனே, பூமிக்குக் கீழே செல்லும் ஒரு குழாய் வழியாக, குறிப்பிட்ட மற் ருெரு பகுதிக்கு அனுப்புவார்கள். அதனேத் தந்தியைப் போலப் பாவித்து, உடனே உரியவரிடம் சேர்ப்பித்து விடுவார்கள். அதற்கு 'ரூர் போஸ்ட்' என்று பெயர். தந்தி கொடுத்தால், அதில் எழுதிய வாசகம் இருக்குமே தவிர, நமது கையெழுத்து அதில் இராது. ரூர் போஸ்ட் ஏற்பாட்டில், நாம் கைப்பட எழுதிய கடிதமே உரியவர்க ளிடம் தந்தியைப்போல விரைவாகச் சேர்ந்துவிடும். தந்திக் கட்டணத்தைவிட, ரூர் போஸ்ட் கட்டணம் குறைவு. மேற்கு—கிழக்கு பெர்லினுக்கு இடையே தந்தி, தபால் போக்குவரத்துக்கள் இருந்தன; ஆனுல் டெலி போன் வசதிமட்டும் இல்லே.

வெகு காலமாகப் பெர்லினில் வசித்துவந்த இந்தியர் ஒருவரைச் சந்தித்தேன். அவர் ஒரு குஜராத்தி. அவர் மனைவி ஒரு ஜெர்மானியர். பெர்லினுக்கு வந்து இருபத்தெட்டு ஆண்டுகள் ஆகிவிட்டதாக அவர் கூறினர். யுத்த காலத்தில் தம்மைக் கொடுமைப்படுத்தியதாகவும், யுத்தத்திற்குப் பின் தரகு வியாபாரம் செய்துகொண்டு சிறிது செளகரியமாய் இருப்பதாகவும் கூறினர். சொந்த மோட்டார் வைத்திருந்தார். எனக்குத் தெரிந்த பழைய காலத்து இந்தியர்கள் சிலரைப்பற்றி விசாரித்தேன். சிலர் இறந்துவிட்டதாகவும், சிலர் யுத்தத்தின்போது ஊரை விட்டு ஓடிவிட்டதாகவும் கூறினர். பெர்லினில் உள்ள இந்தியர்கள் எண்ணிக்கை நாற்பது; அவர்களில் பெரும்பாலோர் மாணவர்கள் என்று கூறினர்.

மற்றுமோர் இந்தியரைத் தற்செயலாக வீதியில் சந்தித்தேன். அவர் எல்லைப்புற மாகாணத்தைச் சேர்ந்த பத்தான் முஸ்லிம். அவர் ஜெர்மனிக்கு வந்து முப்பது ஆண்டுகள் ஆயிற்றும். யுத்த காலத்தில் நேதாஜி சுபாஷ் சந்திர போஸுடன் நெருங்கிப் பழகியதாகவும் கூறினர்.

"கிழக்கு பெர்லினில் எனக்கு இரண்டு வீடுகள் இருக்கின்றன. அவற்றை விற்றவுடன் தாய்நாடு திரும்ப ஆவலாய் இருக்கிறேன்" என்றார் அவர்.

"கிழக்கு பெர்லினில் உள்ள வீடுகளை நீங்கள் எப்படி விற்க முடியும்? அப்படியே விற்றாலும் அந்தப் பணத்தை எவ்வாறு வெளியே கொண்டுவர முடியும்?" என்றேன்.

"ஆம். அவ்வாறு செய்வதற்கு ருஷ்ய ராணுவ அதிகாரிகளின் அனுமதி வேண்டும்" என்றார்.

"நமது நாட்டு ஸ்தானிகர் மூலமாக, ருஷ்ய ராணுவ அதிகாரிகளுக்கு எழுதலாமே?" என்றேன்.

"ருஷ்யர்கள் போக்கே ஒரு மாதிரி; ஸ்தானிகர் மூலம் போவதை அவர்கள் விரும்பமாட்டார்கள். சட்டம் பேசினுல் தொல்லேதான் விளேவிப்பார்கள். இது அவர்களுடைய குணம். அவர்களே அடிக்கடி பார்த்து எனது கஷ்டங்களேச் சொல்லி வருகிறேன். பொதுவாக மனம் இரங்குவார்கள். நான் தாய்நாடு திரும்புவது, அவர்கள் மனமிரங்குவதைப் பொறுத்திருக்கிறது" என்ருர்.

"கிழக்கு பெர்லின் ஹம்போல்ட் சர்வகலாசாலேயில் டாக்டர் முகர்ஜியும் அவர் மனேயும் ஆசிரியர்களாக இருக்கிருர்கள். அவர்கள் உயர்ந்த பண்புடையவர்கள். சௌகரியப்பட்டால் அவர்களேச் சந்தியுங்கள்" என்றும் கூறினுர்.

சில தினங்களுக்குப் பிறகு ஒரு நாள், கிழக்கு பெர்லின் சர்வகலாசாலேக்குச் சென்றேன். டாக்டர் முகர்ஜியைப் பார்க்க விரும்புவதாகக் கூறினேன். அடுத்த வீதியில் உள்ள கட்டிடத்தில் இந்தியச் சரித்திர இலாகா Indology Department இருப்பதாகவும், அங்கே சென்று பார்க்கலாம் என்றும் கூறி வழிகாட்டினர்.

அது மூன்று மாடிகள் உள்ள மிகப்பெரிய கட்டிடம். மின்சார 'லிப்டு' உபயோகத்தில் இல்லே; முறிந்து விழுந்து கிடந்தது. கட்டிடத்தையும் சரியாகச் செப்பனிடவில்லே. வாயிலில் நின்ற வேலேயாளிடம் அனுமதி பெற்றுத்தான் உள்ளே செல்லவேண்டும். எனது நிறத்தைப் பார்த்தவுடன், அவர் எவ்விதத் தடையுமின்றி மேலே செல்லும்படி புன்முறுவலுடன் சைகை செய்தார். படிக்கட்டின் வழியாக மூன்ருவது மாடிக்குச்

சென்றேன். அது குளிர்காலம். வெப்பத்தை உண்டாக்க எத்தகைய வசதியும் செய்யாததால், கட்டிடத்திற்குள்ளும் குளிராகவே இருந்தது. அங்கிருந்த குமஸ்தாவிடம் விஷயத்தைக் கூறினேன். அவருக்கு ஆங்கிலம் தெரியவில்லை. அதுமட்டுமன்று; நான் சொன்னதையும் தவருகப் புரிந்துகொண்டார். அவ்வாறு சொல்லுவதைவிட, அவருக்குப் புரியும்படியாகச் சொல்லக்கூடிய திறமை எனக்கில்லை என்று கூறுவதுதான் உண்மை.

"இப்பொழுதுதான் வகுப்பு ஆரம்பமாயிற்று. முக்கால் மணி நேரத்தில் வந்துவிடுவார்" என்று வேருெருவர் அரைகுறை ஆங்கிலத்தில் கூறினுர்.

உட்காருவதற்கு இடமில்லாததால் நடைபாதையிலேயே உலாவிக் கொண்டிருந்தேன். கட்டிடத்தின் கோடியில் ஒரு வகுப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. நடைபாதையில் இருந்தால் அந்த வகுப்பு நடப்பதைக் காணலாம்.

ஆசிரியர் ஓர் இளைஞர். வகுப்பில் இருந்தவர் எட்டுப் பேர்; அனைவரும் பெண்கள். பத்தடி நீளமான மேஜை. அதன் கோடியில் ஆசிரியருக்கு ஒரு நாற்காலி. மேஜையின் இரு புறங்களிலும் இருந்த சாய்மானம் இல்லாத பெஞ்சுகளில் மாணவிகள் உட்கார்ந்திருந்தனர்.

சுமார் ஐந்து நிமிஷம் உலாவிக் கொண்டிருந்தேன். உட்கார இடமில்லாமல் நான் தவித்ததைக் கண்ட ஒரு மாணவி, வகுப்புக்கு வந்து பெஞ்சில் உட்காரும்படிச் சைகை செய்தாள்; ஆசிரியரும் அதை ஆமோதித்தார்.

அது ருஷ்ய மொழி வகுப்பு. ஒரு மாணவிக்காவது அதனைக் கற்றுக்கொள்வதில் உற்சாகமில்லை என்று நன்ருகத் தெரிந்தது. விருப்பமில்லாமல், கட்டாயத்துக்காக அதைப் பயின்றனர். ஆசிரியர் என்னுடன்

ஆங்கிலத்தில் பேசினர். நான் கூறியவை யெல்லாம் அவருக்குப் புரிந்தன; ஆனல் அவரால் சரளமாகப் பேச முடியவில்லே. இந்தியாவைப்பற்றிச் சில கேள்வி கள் கேட்டார். எனது பதில்களே மாணவிகளுக்கு ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த்துக் கூறினர். பேச்சின் மத்தியில், அமெரிக்காவில் ஹாலிவுட்டில் சில காலம் தங்கியிருந்தேன் என்று கூறினேன். அவ் வளவுதான். ஆசிரியர் உள்பட அனேவரும் புத்தகங்களே மூடி வைத்துவிட்டனர். அன்றைய பாடம் ருஷ்ய மொழி அன்று; ஹாலிவுட்டைப் பற்றித்தான். நான் கூறியவற்றை ஆசிரியரும் மாணவிகளும் மிக்க ஆவ லுடன் கேட்டனர். இடையே, "உங்களுடைய பாடத்தை நான் தடைசெய்ய விரும்பவில்லே" என்றேன். ஒரு மாணவி முகத்தைச் சுளித்துக்கொண்டு, மிகவும் வெறுப் புடன், "இதை (பாடப்புத்தகத்தை) நாங்கள் விரும்ப வில்லே" என்ருள். மற்ற மாணவிகளும் அதை ஆமோ தித்தனர். ஆசிரியருக்கும் ருஷ்ய மொழியில் விருப்ப மில்லேயாதலால், ஹாலிவுட்டைப்பற்றிய விவரங்களேத் தொடர்ந்து கூறும்படி வேண்டினர். வகுப்பு முடியப் போகும் தருணத்தில், டாக்டர் முகர்ஜியைப் பார்க்க வந்திருப்பதாக ஆசிரியரிடம் கூறினேன்.

"டாக்டர் முகர்ஜி இன்று வரவில்லே. இலாகாத் தலேவர் டாக்டர் வான்ரூபன்தான் இன்று வகுப்பு நடத்துகிருர்" என்ருர் ஆசிரியர்.

"டாக்டர் முகர்ஜியைத்தான் நான் பார்க்க வந்திருக் கிறேன். அவர் எப்பொழுது வருவார் என்பதைத் தயவு செய்து விசாரித்துச் சொல்லுங்கள்" என்றேன்.

ஆசிரியர், டாக்டர் முகர்ஜி வீட்டுக்கு டெலிபோன் செய்தார்; வீட்டில் யாருமில்லே. பின்னர் குமஸ்தாவிடம்

சென்று சிறிது நேரம் பேசினர். பாட அட்டவணைப் புத்தகத்தைப் பார்த்து, "திங்கள், வியாழக்கிழமைகளில் மட்டும்தான் டாக்டர் முகர்ஜிக்கு வகுப்புகள் உள்ளன" என்ருர். ஆசிரியருக்கு நன்றி செலுத்தி விடை பெற்றேன்.

ஒருநாள், கிழக்கு பெர்லினில் மிகப் பிரபலமான Komisch Oper என்ற சங்கீத நாடக சாலைக்குச் சென்றேன். அன்று நடந்தது பழைய காலத்து ஜெர்மனியைப் பற்றிய சங்கீத நாடகம். மொழி புரியவில்லை; ஆனல் சங்கீதம் கேட்பதற்கு இனிமையாக இருந்தது. காட்சி ஜோடனைகள் சிறந்த முறையில் அமைந்திருந்தன. சிலருடைய நடிப்பு உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. நாடகத்தில் வந்த ஒரு ராஜாவை, கோமாளியைப் போலச் சித்தரித்துக் காட்டினர். அது நன்ருகவும் பொருத்தமாகவும் இருந்தது

ஊர் சுற்றிப் பார்க்கும் ஆசையில், கிழக்கு பெர்லினி லிருந்து மேற்கு பெர்லினுக்கு ஒரு முறை நடந்து வந்தேன். மேற்கு பெர்லினில் நீளமான வீதிவழியாக நடந்தேன். அந்த வீதியின் பெயர், 'ஜூன் 17–ஆம் தேதி வீதி'. பெயரைப் படித்ததும் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. அதன் விவரம் என்ன என்று ஓர் இளைஞரைக் கேட்டேன்.

"சென்ற ஜூன் மாதம் 17–ந் தேதியன்று கிழக்கு-மேற்கு பெர்லின் எல்லையில் உள்ள ஒரு கட்டிடத்தை நெருப்பு வைத்துக் கொளுத்திவிட்டனர். அதைச் செய்தது மேற்கு பெர்லினில் உள்ள 'காலிகள் கூட்டம்'. காலிகளுக்குப் பண உதவி செய்து தூண்டிவிட்டது அமெரிக்கர். கட்டிடத்தை நெருப்பு வைத்துக் கொளுத்தியதுமல்லாமல், கிழக்கு பெர்லினுக்குள் புகுந்து

ஆர்ப்பாட்டம் செய்தனர். கூட்டத்தில் கண்ணியமான மனிதர்களே இல்லை" என்றார்.

"காலிகள் கூட்டம் மேற்கு பெர்லினில் மட்டுந் தான் இருக்கிறதா?" என்றேன்.

"இல்லை. இல்லை. கிழக்கு பெர்லினிலும் ஒரு காலிகள் கூட்டம் இருக்கிறது. அதற்குப் பணம் கொடுத்து ஆதரவு காட்டுவது ருஷ்ய அரசாங்கம். அந்தக் கூட்டத்திலும் கண்ணியமானவர்களைக் காண முடியாது" என்றார். ஆனால் ஒரு விஷயத்தில், ருஷ்யாவின் நடவடிக்கையை அவர் பாராட்டினார்.

"மேற்கு பெர்லின் காலிகள் கிழக்கு பெர்லினுக்குள் புகுந்ததும், அவர்கள் வலியச் சண்டைக்கு வருகிறார்கள் என்பது ருஷ்யர்களுக்குத் தெரிந்துவிட்டது. ருஷ்யர்கள் தங்கள் 'டாங்கு'களை வீதிகளில் ஓட்டினர்; ஆனால் ஒரு வரையாவது சுடவில்லை. தங்களுடைய பலத்தைக் காட்டினார்களே தவிர, அதனை உபயோகிக்கவில்லை. அவர்கள் நடந்துகொண்டது மிகவும் புத்திசாலித்தனம்" என்றார்.

கம்யூனிஸத்தில் பற்றுடைய மேற்கு ஜெர்மானியர் ஒருவரைச் சந்தித்தேன்.

"அமெரிக்கர் ஏவிவிட்ட காலிகள் சண்டைக்காக வலியச் சென்றனர்; ஆனால் தங்கள் முயற்சியில் தோல்வியடைந்தனர். ருஷ்யர்கள் கண்ணியமாக நடந்துகொண்டதால் சண்டைக்கு வழியில்லாமல் போயிற்று. தோல்வியை ஒப்புக்கொள்ளத் தைரியமில்லாமல், 'ஜூன் 17-ந்தேதி சுதந்திர யுத்தம்' என்று ஆர்ப்பாட்டம் செய்தனர். அதன் ஞாபகார்த்தமாக விசேஷ தபால்தலை வெளியிட்டனர். ஒரு பெரிய வீதியின் பெயரையே, 'ஜூன் 17-ந்தேதி வீதி' என்று

மாற்றினர். என்றபோதிலும் அவர்களுடைய மதிப்புக் குறைந்துவிட்டது. இழந்துபோன கௌரவத்தை மீண்டும் பெறுவதற்காக, அமெரிக்கர் மேற்கு பெர்லினில் கிழக்கு பெர்லின் அனுதைகளுக்கு மட்டும் துணி, உணவு முதலியவற்றை இலவசமாக வழங்கி வருகின்றனர். ஆயிரக்கணக்கான அனுதைகள் கிழக்கு பெர்லினிலிருந்து இங்கு நடந்து வருகிருர்கள் என்பது உண்மை. ஆனல் மேற்கு பெர்லின் அனுதைகளுக்கு மட்டும் இந்த மாதிரி கிழக்கு பெர்லினில் துணி, உணவு இலவசமாகக் கிடைத்தால், ஆயிரக்கணக்கான அனுதைகள் கிழக்கு பெர்லினுக்கு நடந்து செல்வார்கள் என்பதில் ஐயமில்லை" என்ருர் அவர்.

'ஜூன் மாதம் 17-ந்தேதி சுதந்திர யுத்தத்தை'க் குறித்து, கிழக்கு—மேற்கு பெர்லினில் வெளியான பத்திரிகைகள் பலவற்றைப் பார்த்தேன். சில பத்திரிகை நிருபர்கள், ஒரு சம்பவத்தை அவசியம் நேரும்பொழுது தங்கள் பத்திரிகை முதலாளிகளின் கொள்கைகளுக்கு ஏற்பத் திரித்து எழுதுவது உண்டு. ஆனல் ஒரே சம்பவத்தை நம்பமுடியாதபடி வெவ்வேருக எழுத முடியும் என்பதை அந்தப் பத்திரிகைகள் மூலம்தான் அறிந்தேன். சம்பவத்தைக் குறித்துப் பல படங்கள் பிரசுரமாயின. ஆனல் ஒரே ஒரு படந்தான் கிழக்கு மேற்குப் பத்திரிகைகளில் பொதுவாக வெளியாயிற்று; அதற்கும் தலைப்புக்கள் வெவ்வேறு.

'சுதந்திர யுத்தத்தில்' காயமடைந்த 'வீரர்களை' அந்தந்தப் பகுதிகளில் உள்ள வைத்தியசாலைகளுக்கு எடுத்துச் சென்றனர்.

மேற்கு பெர்லின் நகர மேயர், வைத்தியசாலையில் காயமடைந்து படுக்கையில் இருந்த வீரனுக்கு ஒரு பூச்

செண்டு கொடுத்தார். ஆனால் அவருடைய முகம் 'காமிரா' வைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தது. அது மேற்கு பெர்லின் பத்திரிகைகளில் வெளியான படம்.

கிழக்கு பெர்லின் நகர மேயர், வைத்தியசாலையில் காயமடைந்து படுக்கையில் இருந்த வீரனுக்கு ஒரு பூச் செண்டு கொடுத்தார். ஆனால் அவருடைய முகம் 'காமிரா'வைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தது. அது கிழக்கு பெர்லின் பத்திரிகைகளில் வெளியான படம்.

கிழக்கு—மேற்கு பெர்லின் வைத்தியசாலைகளில், படுக்கைகளில் இருந்த 'வீரர்'களின் தலையில் கட்டுக் கட்டப்பெற்றிருந்தது. ஆனால் அந்த 'வீரர்'களுக்கு ஏற் பட்டிருந்தது உண்மையான காயமா, அல்லது 'அரசியல்' காயமா என்பது தெரியவில்லை என்று சிலர் கூறினர். கிழக்கு—மேற்கு பெர்லினில் நடைபெற்ற பிரசார யுத் தங்களில் அது ஒன்று.

மேற்கு பெர்லினிலேயே பத்திரிகைகளின் யுத்தம் ஒன்றும் நடைபெற்றது. இருபத்தொரு லட்சம் ஜனத் தொகை கொண்ட அந்த ஊரில் பத்து தினசரிப் பத்திரி கைகள் இருந்தன. தினந்தோறும் மொத்தம் எட்டு லட்சம் பிரதிகள் செலவாயின. அன்றியும் கிழக்கு பெர்லினில் வெளியான ஆறு கம்யூனிஸ்டுப் பத்திரிகை களும் மேற்கு பெர்லினுக்குப் பரவின.

ஹாம்பர்க்கில் ஒரு தினப் பத்திரிகை புது விதமாக வெளியாயிற்று. செய்திகள் எல்லாம் படங்களாகவே வெளியாயின. நாலே பக்கம்; விலை பத்துக் காசுதான். தினந்தோறும் ஹாம்பர்க்கிலிருந்து ஒரு லட்சத்து அறுப தாயிரம் பிரதிகள் பெர்லினுக்கு வந்தன. அவற்றில் ஒரு லட்சத்து முப்பதாயிரம் பிரதிகளுக்குக் குறையாமல் பெர்லினில் விற்பனையாயிற்று. அப்பத்திரிகை தினந்

தோறும் ஹாம்பர்க்கிலிருந்து ஜெர்மன் தபால் ரயில் பெட்டியில் வந்தது. அது அமெரிக்க ராணுவ ரயில் வண்டியுடன் இணைக்கப்பெற்றிருந்தது.

அதுவரை பெர்லினில் வெளியான தினப் பத்திரி கைகள் நல்ல லாபம் சம்பாதித்தன. சமீப காலம்வரை தனிப் பிரதியின் விலை பதினைந்து காசு. புதிதாக வந்த பத்துக் காசு ஹாம்பர்க் பத்திரிகை போட்டியை உண் டாக்கிவிட்டது.

ஹாம்பர்க்கிலிருந்து வெளிவந்த பத்திரிகையையும், மேற்கு பெர்லினில் தினந்தோறும் ஒரு லட்சத்து எண்ப தாயிரம் பிரதிகள் விற்பனையான 'மார்கன் போஸ்ட்' என்ற பத்திரிகையையும், இன்னும் பல பத்திரிகைகளை யும் நடத்தியவர் கார்ல் உல்ஸ்டீன் என்ற யூதர். ஹிட்லர் ஆட்சிக்கு முன் அவருடைய பத்திரிகை ஸ்தாபனம் ஜெர்மனியிலேயே பெரிது. ஹிட்லர் ஆட்சியில் அவரை அடித்துத் துரத்திவிட்டனர். யுத்தம் முடிந்ததும் கார்ல் உல்ஸ்டீன் ஜெர்மனியில் பழைய தொழிலுக்கே வந்து விட்டார். பத்திரிகை யுத்தம் ஆரம்பமானதற்குக் காரணம் கார்ல் உல்ஸ்டீன்தான். மேற்குப் பெர்லினில் அமெரிக்கப் பகுதியிலிருந்து, "சற்றே தயவு செய்து" (Moment Bitte) என்ற பெயரால் ஒரு தினசரிப் படச் செய்திப் பத் திரிகையை வெளியிட கார்ல் உல்ஸ்டீன் விரும்பினர். எனவே அமெரிக்க ராணுவ அதிகாரிகளிடம் அனுமதி கேட்டார்.

மேற்கு ஜெர்மனியில் பத்திரிகை வெளியிடுவதானல் மேற்கு ஜெர்மன் அரசாங்கத்தார் அனுமதி போதும். ஆனல் பெர்லினில் பத்திரிகை வெளியிட எந்தப் பகுதி யில் பத்திரிகை அச்சாகிறதோ—அதாவது அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ருஷ்யா—பகுதிகளில் அந்தந்தப்



உண்டெர்டென்லிண்டன் வீதியில் ருஷ்யத் தூதராலயம்



ஹிட்லரின் இடிந்த மாளிகை

பகுதியார்தான் அனுமதி கொடுக்க வேண்டும். தங்களுடைய அரசியல் கொள்கைகளுக்கு விரோதமான பத்திரிகைகள் வெளிவரக்கூடாது என்பதற்காக அந்தக் கட்டுப்பாடு. இல்லையானால், அமெரிக்கப் பகுதியிலிருந்து கம்யூனிஸ்டுப் பத்திரிகையும், ருஷ்யப் பகுதியிலிருந்து அமெரிக்கப் பத்திரிகையும் வெளிவரலாம்.

"புதிதாகப் பத்திரிகை வெளியிட அனுமதி கொடுக்கக் கூடாது" என்று மேற்கு பெர்லினில் உள்ள மூன்று அரசியல் கட்சிகளும் அமெரிக்க அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டன. மூன்று அரசியல் கட்சிகளும் ஒன்று சேர்ந்தது அந்த ஒரு விஷயத்தில்தான். அமெரிக்கர் அதை லட்சியம் செய்யாமல் அனுமதி அளித்தனர். அதனை ஆட்சேபித்து மூன்று அரசியல் கட்சிகளும், பிரதிநிதிகள் சபையில் கண்டனத் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றின.

"பெர்லினின் நிலைமையைத் தனியாகப் பரிசீலனை செய்யவேண்டும். ஏற்கெனவேயுள்ள பத்திரிகைகளே அதிகம். அவை பலதிறப்பட்டவை. பல பத்திரிகைகள் மிகவும் பணக்கஷ்டத்தில் நடைபெறுகின்றன. புதிதாகப் பத்திரிகை ஆரம்பித்துப் போட்டியை உண்டாக்குவது விரும்பத்தக்கதன்று" என்பது அரசியல் கட்சிகளின் ஆட்சேபம்.

".கார்ல் உல்ஸ்டீனின் பத்திரிகைகள் கம்யூனிஸ்டுகளைத் தீவிரமாகத் தாக்குவதில்லை" என்பது சில பத்திரிகைகளின் கூக்குரல்.

"கார்ல் உல்ஸ்டீன் அமெரிக்கப் பிரஜை; ஆகவேதான் இந்தச் சலுகை" என்பது சிலருடைய குற்றச்சாட்டு.

"மேற்கு வல்லரசுகளின் பாதுகாப்புக்குத் தீங்கு நேராத வகையில் ஒரு பத்திரிகை இருக்குமானுல், அதற்கு அனுமதி மறுக்க எந்தவிதமான காரணமும் இல்லே. நன்ருகவும், நேர்மையாகவும், சுதந்திரமாகவும் தொண்டுசெய்யும் பத்திரிகைகள் உண்டாவதற்குப் பத்திரிகைப் போட்டி மிக அவசியம்" என்பது அமெரிக்க அதிகாரிகளின் கருத்து.

"சற்றே தயவுசெய்து" வெளிவந்தது.

* * *

விடுதிக்குப் பலதிறப்பட்டவர்கள் அடிக்கடி வந்தனர். அவர்கள் சில நாட்கள் தங்கினர். கிழக்கு ஜெர்மனியிலிருந்து நடுத்தர வயதுள்ள ஒரு பெண் விடுதியில் தங்குவதற்கு வந்தாள். விடுதியில் தங்குபவர்கள் தங்கள் ஊர், பெயர், விலாசம் முதலியவற்றை, அதற்கென உள்ள பதிவுப்புத்தகத்தில் எழுதிக் கையெழுத்திட வேண்டும். அந்த விவரங்களேயெல்லாம் விடுதியின் சொந்தக்காரர் போலீசாருக்குத் தெரிவிக்கவேண்டும்.

"தயவுசெய்து என்னுடைய பெயரைப் பதிவுப் புத்தகத்தில் எழுதாதீர்கள். அவ்வாறு எழுதினுல் போலீசார் ஏதாவது தொந்தரவு செய்வார்கள்" என்ருள் அவள்.

விடுதிச் சொந்தக்காரரும் அவள் பெயரைப் பதிவு செய்யாமலேயே, அவளே விடுதியில் தங்க அனுமதித்து வாடகையைப் பெற்றுக்கொண்டார். அவள் இரண்டு நாட்கள்தான் பெர்லினில் தங்கினுள். தினந்தோறும் இரண்டு படக்காட்சிகளுக்குச் சென்ருள். ஒவ்வொரு வேளேயும், வெவ்வேறு உணவுச் சாலேகளில் சாப்பிட்டாள். கையில் இருந்த பணம் தீரும்வரை, கண்ட கண்ட சாமான்களேயெல்லாம் வாங்கி மூட்டை கட்டினுள். அவருடைய உணவுப் பங்கீடுச் சீட்டை என்னிடம் காண்பித்தாள்.

"எனது குழந்தைக்குப் போதுமான பங்கீடு தருகி ருர்கள். ஆனல் எனக்கும் எனது கணவருக்கும் கொடுக்கும் பங்கீடு போதாது" என்ருள்.

மேற்கு ஜெர்மனி வியாபாரி ஒருவரை விடுதியில் சந்தித்தேன். அவருடைய தொழில் என்னவென்று விசாரித்தேன்.

"கிழக்கு பெர்லினில் உள்ள சில பீங்கான் பொம்மை களைத் திருட்டுத்தனமாகக் கொண்டு வருபவர்களிட மிருந்து, அவற்றை விலைக்கு வாங்குவதுதான் எனது தொழில்" என்ருர் அவர்.

பீங்கான் சாமான் செய்வதில் பேர்பெற்ற தொழிற் சாலைகள் கிழக்கு ஜெர்மனியில்தான் இருந்தன. பொம் மைகளும் கவர்ச்சியாக இருந்தன. பொம்மைகள் அணிந் திருந்த ஆடைகள், பீங்கான் வேலைப்பாடுதான்; ஆனல் பார்வைக்குத் துணிபோல இருந்தது. மிகவும் அழகான வேலைப்பாடு அது. அமெரிக்கர்களுக்கு அந்தப் பொம் மைகளில் அசாத்திய மோகம். அத்தகைய பொம்மைகள் கிழக்கு பெர்லினில் ஏராளம். ஆனல் கிழக்கு ஜெர்மன் வாசிதான் தமது அடையாளச் சீட்டைக் காண்பித்து அதனை விலைக்கு வாங்கமுடியும். பலர் அவற்றை வாங் கித் திருட்டுத்தனமாக மேற்கு பெர்லினுக்குக் கொண்டு வந்தார்கள். பொம்மையின் விலை கிழக்கு பெர்லினில் பத்து மார்க்; அதாவது மேற்கு பெர்லினில் இரண்டு மார்க்குக்குச் சமம். அதனை மேற்கு ஜெர்மன் வியா பாரிகள் மூன்று மார்க் விலை கொடுத்து வாங்கி, அமெரிக் கர்களுக்கு ஐந்து மார்க் விலைக்கு விற்ருர்கள். கிழக்கு ஜெர்மனியிலிருந்து மேற்கு ஜெர்மனிக்குத் திருட்டுத்தன மாகக் கடத்தப்பெற்ற சாமான்களில், பொம்மைகளுக்குத் தான் கிராக்கி அதிகம்.

கிழக்கு பெர்லின் சர்வகலாசாலையில் டாக்டர் ராமகிருஷ்ண முகர்ஜியையும், அவருடைய மனைவி பிரபாவதி தேவியையும் சந்தித்தேன். சரித்திரப் பேராசிரியரான டாக்டர் முகர்ஜி இந்தியச் சரித்திரத்தைப் போதித்தார். பிரபாவதி தேவி டாக்டர் பட்டம் பெறுவதற்காக அங்கு பயின்றார்; அதேசமயத்தில் அங்குள்ள சில மாணவர்களுக்கு வங்காள மொழி போதித்தார். அப்பொழுது டாக்டர் முகர்ஜிக்கு வயது நாற்பது; இங்கிலாந்தில் பல ஆண்டுகள் பயின்று பட்டம் பெற்றதாகக் கூறினார்.

"நானும் எனது மனைவியும் இங்கு வந்து ஓர் ஆண்டுக்கு மேலாகிறது. மூன்றாண்டுகள் இங்கு வேலை செய்ய வேண்டும் என்பது ஒப்பந்தம்" என்றார் டாக்டர் முகர்ஜி.

பிரபாவதி தேவியின் வகுப்பில் பயின்ற மாணவர்கள் எட்டுப்பேர். வங்காள மொழி முக்கியமான மொழி என்பதற்காக அதனைக் கற்றுக்கொடுக்கவில்லை. வேறு இந்திய மொழி கற்றுக்கொடுக்க ஆளில்லாததால், இதையாவது கற்றுக்கொள்ளட்டும் என்று ஏற்பாடு செய்திருந்தார்கள். ஹிந்தி, தமிழ் முதலிய மொழிகளைத் தக்க ஆசிரியர்களைக்கொண்டு பயிற்றுவிக்கச் சர்வகலாசாலை அதிகாரிகள் முயன்று வந்ததாக அறிந்தேன். ஆசிரியர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்தனர். டாக்டர் முகர்ஜிக்கும் அவர் மனைவிக்கும் மாதமொன்றுக்கு 3,500 மார்க்—சுமார் நாலாயிரம் ரூபாய் கிடைத்தது; அதில் ஐந்தில் ஒரு பகுதி வருமான வரி. கிழக்கு ஜெர்மன் மார்க் — சட்டப்படி — மேற்கு ஜெர்மன் மார்க்குக்குச் சமம். என்றாலும், நடைமுறையில் அவ்வாறில்லை. மேற்கு ஜெர்மன் நாணயத்தின் மதிப்பு ஒரு ரூபாய் இரண்டணா; ஆனால் கிழக்கு ஜெர்மன்

நாணயத்தின் அப்போதைய மதிப்பு மூன்றரை அணுத் தான் !

"இங்கு சிறிதுகாலம் ஹோட்டலில் தங்கியிருந் தோம். மிகுந்த சிரமத்தின்பேரில் ஒரு வீடு வாடகைக் குக் கிடைத்தது. ஆனுல் அங்கே கட்டில், படுக்கை, நாற்காலி மேஜை முதலிய சாமான்கள் ஒன்றுமே இல்லே. அவற்றை வாங்குவதற்குப் பத்தாயிரம் மார்க் செலவாயிற்று. ஊரை விட்டுப் போகும் பொழுது அவற்றை விற்றுவிடுவோம்" என்ருர் டாக்டர் முகர்ஜி.

சாப்பாட்டைப்பற்றி விசாரித்தபோது, "இந்த நாட்டில் பள்ளிக்கூட ஆசிரியர்கள் எல்லோரும் 'ஏ' வகுப்பு நகரவாசிகள். நாங்கள் அதிகமாக மூளையை உபயோகப்படுத்தி வேலே செய்வதால், எங்களுக்கு இரட்டிப்பு உணவுப் பங்கீடு" என்ருர் பிரபாபதி தேவி.

கம்யூனிஸ்டு ஆட்சியில் வகுப்பு வித்தியாசமே இல்லேயென்று நினேத்திருந்தேன். சில நாடுகளில் பணக்காரர்கள் 'ஏ' வகுப்பு நகரவாசிகள். கம்யூனிஸ்டு ஆட்சியில் படித்தவர்கள் 'ஏ' வகுப்பு நகர வாசிகள். எனவே கம்யூனிஸ்டு ஆட்சியிலும் வகுப்புமுறை ஒழிய வில்லே. மற்ற நாடுகளில் பணக்காரர்கள் வகித்த முதலிடத்தை, கம்யூனிஸ்டு ஆட்சியில் படித்தவர்கள் வகித்தனர். அதுதான் வித்தியாசம்.

முகர்ஜி தம்பதிகளுடன், சர்வகலாசாலே உணவுச் சாலேயில், ஆசிரியர்களுக்காக ஒதுக்கப்பெற்ற பகுதியில் சாப்பிட்டேன். ஆள் ஒன்றுக்கு மூன்று மார்க். வேண் டிய மட்டும் உணவு பரிமாறினர்; ஆனுல் சுவையற்ற உணவு.

அதே உணவுச் சாலேயில் மாணவர்களுக்குத் தனிப் பகுதி ஒதுக்கியிருந்தனர். மாணவர்களுக்குச் சிலவகை

உணவு கொடுக்கவில்லை. மாணவர் உணவின் விலை அறுபத்தைந்து காசுதான்.

சர்வகலாசாலையில் பயின்ற மாணவ மாணவிகளுக்குக் கட்டணம் கிடையாது. அது மட்டுமன்று; அவர்கள் ஒவ்வொருவருக்கும் அரசாங்கத்தார் மாதம் ஐந்நூறு மார்க் வீதம் உபகாரச் சம்பளம் கொடுத்தனர்.

"எனது மனைவியும், நானும் கம்யூனிஸ்டுகள் அல்லர். எங்களுடைய வேலையைத் தவிர மற்ற காரியங்களில் நாங்கள் தலையிடுவதில்லை. லண்டனிலிருந்து புறப்பட்டபொழுது, சில நண்பர்கள் கிழக்கு பெர்லினுக்கு நான் செல்வதை விரும்பவில்லை. எனது விருப்பப்படி பாடம் சொல்லித்தர சுதந்திரம் இருக்காது என்று கூறினர். இங்கே எனக்கு எந்தவிதமான தடையுமில்லை" என்றார் டாக்டர் முகர்ஜி. அவர்களுடைய அன்புக்கு நன்றி செலுத்தி விடைபெற்றேன்.

* * *

கிழக்கு பெர்லினில் இரண்டு புத்தகக் கடைகள் மட்டும் பார்த்தேன். அங்கே, ருஷ்யத் தலைவர்களின் வரலாறு போன்ற பிரசாரப் புத்தகங்களும், விஞ்ஞானம் ஓவியம் ஆகிய துறைகளிலுள்ள சில புத்தகங்களும் இருந்தன.

மேற்கு பெர்லினில் பல புத்தகக் கடைகள் இருந்தன. ஜெர்மன் மொழியில் மட்டுமல்லாமல், ஆங்கிலம் பிரெஞ்சு மொழியில் உள்ள புத்தகங்களும் இருந்தன. "ஹிட்லரின் கொடுங்கோன்மை" என்ற ஆங்கிலப் புத்தகத்தைப் பார்த்தேன். ஹிட்லர் எழுதிய "மெயின் காம்ப்" என்னும் சுயசரிதத்தை விற்ற அதே மக்கள் தான் இதையும் விற்றார்கள். ஆங்கிலப் புத்தகங்களில் பெரும்பான்மை மட்டரகமான அமெரிக்க நாவல்களே.

மகாத்மா காந்தி சரித்திரம், தாகுரின் நூல்கள், பஞ்ச தந்திரக் கதை முதலியன ஜெர்மன் மொழியில் வெளி வந்திருந்தன. அவற்றுள் சில யுத்தத்திற்கு முன்பு அச்சிடப் பெற்றவை. ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகாநந்தர் போன்ற பெரியார்களின் புத்தகங்கள் பல கவர்ச்சியாக இருந்தன. அவை யனைத்தும் சுவிட்ஸர்லாந்து நாட்டில் அச்சிடப் பெற்றவை. சுவாமி சிவாநந்தரின் பல நூல்கள் ஜெர்மன் மொழியில் வெளி வந்திருந்தன, காமசூத்திரம் என்னும் இந்திய நூலின் மொழி பெயர்ப்பு, பெட்டிக் கடைகள் உள்பட எல்லா இடங்களிலும் கிடைத்தது. அதைத் தவிர, பல நாட்டுத் தத்துவ நூல்களும், கணிதம், விஞ்ஞானம், இயந்திர நுட்பம், ஓவியம் ஆகிய பல்வேறு துறைகளில் ஏராள மான புத்தகங்களும் இருந்தன. ஜெர்மன் மொழியில் வெளிவந்திருந்த பிரயாண நூல்கள் ஏராளம்.

* * *

ஜெர்மனியின் எதிர்காலத்தை நிர்ணயிப்பதற்காக, அட்லாண்டிக் மகா சமுத்திரத்திலுள்ள பெர்மூடாத் தீவில் மூன்று வல்லரசுகள் கூடி யோசித்தன. நான்கு வல்லரசு மகாநாட்டுக்கு ருஷ்யா சம்மதிக்கவே, பெர்மூடா வில் பேசுவதற்கு விஷயமில்லாமல் போய்விட்டது.

பெர்மூடா மகாநாட்டைப்பற்றி மேற்கு பெர்லின் பத்திரிகைகள் கொஞ்சமும் அக்கறை காட்டவில்லை. 'மார்கன் போஸ்ட்' பத்திரிகையில் அது சம்பந்தமாகக் கேலிச் சித்திரம் ஒன்று வெளியாயிற்று. பெர்மூடா என்னும் உண்மையான தீவில், மூன்று வல்லரசுத் தலைவர்களும் கூடிப் பேசுவதுபோலவும், அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைப் பெர்லின் என்னும் அரசியல் தீவில் உள்ள மக்கள் ஆவலுடன் கவனிப்பது போலவும் அது சித்தரித்தது.

விடுதியில் தங்கியிருந்த சிலருடன் பெர்மூடா மகா நாட்டைப்பற்றிப் பேசினேன். சிலர் சாதகமாகப் பதிலளித்தனர். சிலர் அலட்சியமாகப் பேசினர். ஆனால் யாருக்குமே உற்சாகமில்லை.

பதினறு ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவில் வால்த்தருடன் பேசிக்கொண்டிருந்தபொழுது, "இந்தியா ஒரு தேசமன்று" என்றார் வால்த்தர்.

"ஏன் அவ்வாறு சொல்லுகிறீர்கள்?" என்று ஆத்திரத்துடன் கேட்டேன்.

"யார் தங்களைத் தாங்களே ஆளுகிறார்களோ அவர்கள்தான் ஒரு நாட்டினர். இந்தியா பிரிட்டிஷாரால் ஆளப்பெறுகிறது. எனவே அது ஒரு நாடு அன்று. பூகோளத்தில் உள்ள ஒரு நிலப்பரப்பு. அவ்வளவுதான்" என்றார்.

இவ்வளவு விரைவாகச் சரித்திரம் மாறும் என்று அப்பொழுது கனவிலும் கருதியதில்லை. "ஜெர்மனி ஒரு நாடு அன்று" என்று கூறினேன்.

விடுதியில் இருந்த பிரயாணிகள் சிலருக்கு மிகவும் ஆத்திரமாக இருந்தது. "யார் தங்களைத் தாங்களே ஆளுகிறார்களோ அவர்கள்தான் ஒரு நாட்டினர். இந்தியாவின் எதிர்காலத்தைத் தலைநகரான புது டில்லியில் இந்தியப் பிரதிநிதிகள் நிர்ணயிக்கின்றனர். மேற்கு ஜெர்மனியின் எதிர்காலத்தை பெர்மூடாத்தீவில் மூன்று வல்லரசுகள் நிர்ணயிக்கின்றன. கிழக்கு ஜெர்மனியின் எதிர்காலத்தை மாஸ்கோவில் உள்ள ருஷ்யர்கள் நிர்ணயிக்கின்றனர்" என்றேன்.

மேற்கு ஜெர்மனியில் வேலையில்லாத் திண்டாட்டத்தைப்பற்றிய பேச்சு வந்தது. "மேற்கு பெர்லினில்

உள்ள இருபத்தொரு லட்சம் மக்களில் வேலையில்லாதவர் தொகை மூன்று லட்சம்" என்றார் ஒருவர்.

"இங்கு ஒரு வேலை காலியாக இருந்தால், கிழக்கு பெர்லினிலிருந்து வரும் ஓர் 'அகதி'க்கு அந்த வேலை கிடைக்கிறது. ஆனால் மேற்கு பெர்லினிலேயே வேலையில்லாமல் இருப்பவர்களைக் கவனிப்பதில்லை. எல்லாம் அரசியல் பிரசாரம்" என்றார் மற்றொருவர்.

கிழக்கு பெர்லின் வாசிகள் சிலர் மேற்கு பெர்லினில் வேலை செய்தனர். அதைப்போல மேற்கு பெர்லின் வாசிகள் சிலர் கிழக்கு பெர்லினில் வேலை செய்தனர். மேற்கு பெர்லினில் பிரிட்டிஷ், பிரெஞ்சுப் பகுதியிலிருந்து பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் தினந்தோறும் கிழக்கு பெர்லின் சென்று வேலை செய்தனர். அமெரிக்கப் பகுதியில் உள்ள யாரும் கிழக்கு பெர்லினுக்கு வேலைக்குச் செல்லக்கூடாது என்று அமெரிக்க ராணுவ அதிகாரிகள் தடை விதித்தனர். தினந்தோறும் மேற்கு பெர்லினிலிருந்து கிழக்கு பெர்லினுக்குச் சென்று திரும்பிய தொழிலாளர் எண்ணிக்கை சுமார் பத்தாயிரம். அவர்கள் அனைவரும் கிழக்கு பெர்லினில் இருந்த ஒரு தொழிற்சங்க அங்கத்தினர்கள். கிழக்கு பெர்லினில் வேலை செய்த மேற்கு பெர்லின் தொழிலாளியின் சம்பளத்தில் ஐந்தில் இரண்டு பங்கை, மேற்கு ஜெர்மன் அரசாங்கம், மேற்கு ஜெர்மன் மார்க்காகக் கொடுத்தது. உதாரணமாக, ஒரு தொழிலாளி வாரத்திற்கு முப்பது கிழக்கு ஜெர்மன் மார்க் சம்பளம் பெறுவதாக வைத்துக் கொள்வோம். அதில் ஐந்தில் இரண்டு பங்கான பன்னிரண்டு கிழக்கு மார்க்கை மேற்கு ஜெர்மன் அரசாங்கம் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக பன்னிரண்டு மேற்கு ஜெர்மன் மார்க் கொடுத்தது. அத்தகைய உதவியால்தான் தொழிலாளர்கள் வாழ்க்கை நடத்த முடிந்தது.

மேற்கு பெர்லினில் வேலை செய்த கிழக்கு பெர்லின் வாசிகளின் எண்ணிக்கை தெரியவில்லை. ஆனால் மேற்கு பெர்லினில் வேலைசெய்து, மேற்கு ஜெர்மன் மார்க் சம்பளம் வாங்கிய கிழக்கு பெர்லின் வாசிகள் உண்மையிலேயே அதிர்ஷ்டசாலிகள்.

கிழக்கு ஜெர்மனியிலிருந்து மேற்கு ஜெர்மனிக்குப் பல்லாயிரக்கணக்கான மக்கள் சென்றுவிட்டனர் என்பது உண்மை. ஆனால் உணவுக் கஷ்டத்தினால்தான் அவர்கள் வெளியேறினார்கள் என்பது முற்றிலும் சரியன்று. உணவுக் கஷ்டத்தால் ஓடிவந்தவர் சிலர் இருக்கலாம். ஆனால் தங்கள் திறமைக்கு ஏற்றபடி அதிகமாகச் சம்பாதிக்கச் சந்தர்ப்பங்களும், உல்லாச வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய வசதிகளும் கிழக்கு ஜெர்மனியில் இல்லாதிருந்ததும் அதற்குக் காரணமாக இருக்கலாம்.

கிழக்கு பெர்லினில், அட்லர் ஹோட்டலுக்குச் சென்றேன். ஒரு காலத்தில் அது உலகப் பிரசித்திபெற்றிருந்தது. ஆனால் அப்பொழுது ஒரு மூன்றாந்தர ஹோட்டலைப்போல இருந்தது. அங்கே உணவருந்துகையில் ஒரு ஜெர்மானியரிடம் உரையாடினேன். அவர் கிழக்கு ஜெர்மனியிலிருந்து வந்த தொழிலதிபர்.

"நான் சிறு தொழிற்சாலை யொன்றை நடத்திவருகிறேன். அங்கு உற்பத்தியாகும் சாமான்களை உள்நாட்டில் விற்கவோ அல்லது வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவோ எனக்கு உரிமை கிடையாது. அனைத்தையும் அரசாங்கத்தாரே எடுத்துக்கொண்டு, அதற்கு அவர்களே நிர்ணயிக்கும் விலையைக் கொடுக்கின்றனர்" என்று அரைகுறையான ஆங்கிலத்தில் கூறினார் அவர்.

கிழக்கு பெர்லினில் கேளிக்கைகளோ, களியாட்டங்களோ கிடையா; உணவும் மட்ட ரகம். கிழக்கு பெர்லின்

வாசிகள் மேற்கு பெர்லினுக்கு வந்து ஒன்றுக்கு ஐந்து மடங்கு அதிகப்பணம் கொடுத்து காப்பி சாப்பிட்டார்கள். சிகரெட் வாங்கினுர்கள்.

"நாஜிகள் எங்களைக் கொடுமைப்படுத்தினுர்கள். ருஷ்யர்கள் எங்கள் உறவினர்களைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள். அவர்களை அந்தப் பாவிகள் என்ன செய்தார்களோ?" என்று கூக்குரலிட்டால் போதும். அவர்கள் அனைவருக்கும் நாற்பது மார்க்குக்குக் குறையாமல் உபகாரப் பணம் கிடைத்துவிடுமாம். அவ்வாறு மேற்கு ஜெர்மனியில் முப்பது லட்சம் பேருக்குமேல், மாதம் நாற்பது மார்க்குக்குக் குறையாமல் அரசாங்கத்தாரிடம் உபகாரப் பணம் பெற்றுவந்தனர். ஆனுல் வாழ்க்கை நடத்துவதற்கு நாற்பது மார்க் போதாது. எனவே உபகாரப் பணம்பெற்ற மேற்கு பெர்லின் வாசிகள் பலர் கிழக்கு பெர்லினுக்குச் சென்று வந்தனர். அங்கே உணவு, மது, சிகரெட் முதலியன மட்ட ரகமாய் இருந்தாலும், நாணய மாற்றுதலில் இருந்த லாபத்தின் காரணமாக தங்களிடமிருந்த சொற்ப பணத்தைக்கொண்டு நிறையச் சாப்பிட முடிந்தது. அம்மாதிரியான பலரைக் கிழக்கு பெர்லின் உணவுச் சாலைகளில் பல முறை பார்த்திருக்கிறேன். அவர்களுடன் பேச ஆரம்பித்தால், அவர்கள் முதன் முதலாக "நான் மேற்கு பெர்லினிலிருந்து வந்திருக்கிறேன்" என்பார்கள். கிழக்கு பெர்லின் வாசிகளைவிடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்பது மேற்கு பெர்லின் வாசிகளின் மனப்பான்மை.

"நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள்?" என்று என்னுடன் உணவருந்திய மேற்கு பெர்லின் வாசியொருவரைக் கேட்டேன். அவருக்கு நாற்பது வயதிருக்கலாம்.

"நான் ஒரு வேலையில்லாதவன் (unemployer)" என்றார் அவர். 'வேலையில்லாதவன்' என்பதை ஆங்கிலத்தில் unemployed என்று சொல்லுவார்கள். அவர் சொல்லிய முறை வேடிக்கையாக இருந்ததால், எங்களுடன் உணவருந்தியவர்களில் ஆங்கிலம் தெரிந்த ஒருவர் சிரித்தார். வேலையில்லாதவரான மேற்கு பெர்லின் வாசி யுத்தகாலத்தில் லண்டனில் மூன்று ஆண்டுகள் வசித்ததாகக் கூறினார்.

"அங்கே என்ன செய்துகொண்டிருந்தீர்கள் ?" என்றேன்.

"அங்கேயும் நான் ஒரு வேலையில்லாதவன்" என்று பெருமையுடன் கூறினார். ஆங்கிலம் அறிந்த அன்பர் மீண்டும் சிரித்தார்.

"மேற்கு பெர்லினில் உள்ள அரசாங்க ஊழியர்கள் கிழக்கு பெர்லினுக்கு வந்து சாப்பிடலாம் ; குடிக்கலாம். ஆனால் கிழக்கு பெர்லின் பத்திரிகைகள் படிக்கக்கூடாது. படக்காட்சி, நாடகம், சங்கீதக் கச்சேரி முதலியவற்றிற்குச் செல்லக்கூடாது. அப்படிச் சென்றதை யாராவது கண்டுவிட்டால் அவர்கள் உத்தியோகம் போய்விடும். என்ன 'இரும்புத் திரை' பாருங்கள் ?" என்றார் அங்கிருந்தவர்களில் ஒருவர்.

"ஆம். அதேமாதிரியான 'இரும்புத் திரை' மேற்கு பெர்லின் செல்லும் கிழக்கு பெர்லின் வாசிகளுக்கும் உண்டு" என்றார் மற்றொருவர்.

மேற்கு பெர்லினில் எது வேண்டுமானாலும் வாங்கலாம். ஜெர்மானியருக்கு வாழைப்பழம், அன்னாசிப் பழம் முதலியவை மிகப் பிரியம். அவை வெளிநாட்டிலிருந்துதான் வரவேண்டும். யுத்த காலத்தில் ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் உள்ள குழந்தைகள் வாழைப்

பழத்தைப்பற்றிப் படித்தார்களே தவிர அதனைப் பார்த்த தில்லை. மேற்கு பெர்லினில் நல்ல வாழைப்பழம் ஒன்று ஏழணு. புதிய அன்னசிப் பழம் ஒன்று எட்டேகால் ரூபாய்! கிழக்கு பெர்லினில் அவை கிடைப்பது அபூர்வம்.

* * *

பெர்லினைவிட்டுப் புறப்படும் நாள் நெருங்கிற்று. கிழக்கு பெர்லின் சென்று முகர்ஜி தம்பதிகளிடம் விடை பெற்றேன். பிரபாவதி தேவி, ஒரு ஜெர்மன் மாணவரை அறிமுகப்படுத்தி, "இவர் ஒருவர்தான் இங்கே தமிழ் படிக்கும் மாணவர்" என்றார்.

மாணவர் மெதுவாக — ஆனால் சுத்தமாகத் தமிழ் பேசினார். அப்பொழுது பைதான் சாஸ்திரியாரின் நினைவு எனக்கு வந்தது. என் கையிலிருந்த தமிழ்ப் பத்திரிகை ஒன்றை அவரிடம் கொடுத்தேன். அவர் அதில் சில வாக்கியங்களைப் படித்து, அதனைச் சுமாரான ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கூறினார்.

"நீங்கள் யாரிடம் தமிழ் பயின்றீர்கள்?" என்றேன்.

"எனது ஆசிரியர் கிழக்கு ஜெர்மனியில் லிப்ஸீக் சர்வகலாசாலையில் இருக்கிறார். அங்கேதான் படித்தேன்" என்றார் அவர்.

விடைபெற்றபொழுது, "போய் வாருங்கள் ஐயா" என்று அன்புடன் கூறினார்.

அவர் அணிந்திருந்த ஆடையைப் பார்த்தபொழுது எனக்குப் பரிதாபமாக இருந்தது. அது அவருடைய வறுமையை விளக்கிற்று.

* * *

"கிழக்கு ஜெர்மனியும் மேற்கு ஜெர்மனியும் என்று வது ஒன்றுபடுமா?" என்று எனக்கு நானே கேட்டுக்

கொண்டேன். பதில் தெரியவில்லை. கிழக்கு பெர்லினிலும் மேற்கு பெர்லினிலும் அக்கேள்வியைப் பலரிடம் கேட்டேன்.

" ஒருபொழுதும் சேராது " என்றனர் சிலர்.

" சேரத்தான் வேண்டும் " என்றனர் சிலர்.

" எப்பொழுது சேரப்போகிறதோ ?" என்றனர் சிலர்.

அதில் சலித்துப் போய்விட்டதால் அதைப்பற்றிக் கருதாமலேயே, மக்கள் தங்கள் அன்றாட வாழ்க்கையை நடத்திவந்தனர்.

ஜெர்மானியர் சென்ற இரு நூற்றாண்டுகளில் பதினேழு முறை போரிட்டுள்ளனர். சென்ற யுத்தத்தின் போது — 1941-45–ஆம் ஆண்டுகளில், அமெரிக்காவில் சிலர், ஜெர்மனியிலுள்ள ஆண்களை எல்லாம் வைத்திய முறைப்படி மலடுகள் ஆக்கிவிடவேண்டும் என்றும், ஜெர்மனியின் தொழிற்சாலைகளை யெல்லாம் அடியோடு நாசமாக்கிவிடவேண்டுமென்றும் கிளர்ச்சி செய்தார்கள்.

" ஐரோப்பாவில் கம்யூனிஸ்டு அல்லாத நாடுகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஐரோப்பியச் சேனை ஒன்றை அமைத்தல்வேண்டும். அதில் ஜெர்மன் ராணுவமும் பங்கு கொள்ளவேண்டும். ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டுவதே இதன் நோக்கம் " என்று அமெரிக்கர் யோசனை கூறி, அதற்காக முயன்றனர்.

" ருஷ்யா ஒருவேளை படையெடுத்தால், அதனைத் தடுப்பதற்காக அந்த ஐரோப்பியச் சேனை அமைக்கப் பெறுகிறது " என்று சிலர் கூறினர்கள்.

ஐரோப்பாவில் அமைதியை நிலைநிறுத்துவதற்காக அமைக்கப்பெறும் ஐரோப்பியச் சேனையில் தானும் பங்கு

கொண்டு தொண்டாற்றத் தயாராய் இருப்பதாக ருஷ்யா அறிவித்தது. யாரைத் தடுப்பதற்காக அந்தச் சேனை அமைக்கப்பெறுகிறதோ, அதில் அவர்களும் வந்து கலந்துகொள்வதாகக் கூறினார்கள்!

ஜெர்மன் ராணுவத்தைப் புதுப்பிப்பதில் பிரான் ஸுக்குக் கொஞ்சம்கூடச் சம்மதமில்லை. தங்கள் விருப் பப்படி ஐரோப்பியச் சேனை அமைக்க ஒப்புக்கொள்ளா விட்டால், தாங்கள் கொடுத்துவந்த 'உதவி'யை நிறுத்தி விடுவதாக பிரான்ஸை அமெரிக்கா மிரட்டிற்று.

"ஜெர்மனி இல்லாமல் ஐரோப்பா இல்லை. ஜெர் மானியரின் உதவியில்லாமல், ருஷ்யாவின் படையெடுப் பைச் சமாளிக்க முடியாது. ஜெர்மானியர் எப்படியும் தங்கள் ராணுவத்தை அமைத்துக் கொள்வார்கள். ஐரோப்பியச் சேனையில் அவர்களையும் சேர்த்துவிட்டால் நல்லது. அப்பொழுது ஜெர்மன் ராணுவத்தின்மீது நமக்குச் சிறிதாவது ஆதிக்கம் இருக்கும். அதுதான் புத்திசாலித்தனம்" என்பது பிரிட்டனின் கருத்து.

ஜெர்மனியின் பிரச்னை தீராத பிரச்னையாக இருந்து வருகிறது.

ஜெர்மானியர், தங்களுடைய வியாபாரப் பொருள் களை ஜன்னல்களில் அழகாக அடுக்கிவைப்பதில் மிகவும் பேர் பெற்றவர்கள். அதற்கு 'ஜன்னல் அலங்காரம்' என்று பெயர். ஒவ்வொரு வாரமும் புது முறையில் அலங்கரிப்பார்கள். கிழக்கு பெர்லினையும், மேற்கு பெர்லி னையும் பார்த்துவிட்டு நாம் ஒரு முடிவுக்கு வருவது கஷ்டமான காரியம். கிழக்கு பெர்லினிலும், மேற்கு பெர்லினிலும் காண்பன எல்லாம் ருஷ்யாவும், மேற்கு வல்லரசுகளும் தங்கள்தங்கள் கொள்கைகளைப் பெருமை

யுடன் உலக மக்களுக்கு விளம்பரப்படுத்திக் காட்டுவ தற்காகச் செய்யும் 'ஜன்னல் அலங்காரமே' ஆகும்.

* * *

பெர்லினில் ஒரே மூடுபனி. மூன்று நாட்களாக விமானப் போக்குவரத்து நின்றுவிட்டது. லண்டனில் கப்பல் ஏற வேண்டிய நாள் நெருங்கிற்று. என்ன செய்வதென்று தெரியவில்லை. ரயிலிலோ அல்லது பஸ்ஸிலோ செல்வதானல் கிழக்கு ஜெர்மனியைக் கடந்து செல்ல வேண்டும். அதற்கு அனுமதி கிடைக்காது.

விமான நிலையத்தில் நூற்றுக்கணக்கான பிரயாணிகள் நாள் கணக்கில் காத்திருந்தனர். விமான நிலையம் ஒரு சத்திரம் மாதிரி ஆகிவிட்டது. நான்காவது நாளும் மூடு பனிதான். என்ருலும் தைரியமாக விமானத்தை ஓட்டினுர்கள்.

விமானத்தில் ஏறினேன்; ஆனல் விமானம் உடனே செல்லவில்லை. நான் இருந்த விமானத்திற்கு முன்னே, ஐந்து விமானங்கள் பறப்பதற்காகத் தயாராக நின்று கொண்டிருந்தன; பின்னே ஆறு விமானங்கள் வரிசையாகக் காத்துக் கொண்டிருந்தன. இன்னும் சில விமானங்கள் வரிசையில் நிற்பதற்காக வந்து கொண்டிருந்தன. ஒரு விமானம் புறப்பட்டு மேலே சென்று சில நிமிஷங்கள் பறந்த பின்னர்தான் மறு விமானம் புறப்படலாம். விமானம் புறப்படுவதற்கு அரைமணி நேரமாயிற்று. பிரயாணிகள் ஒருவரோடு ஒருவர் பேசவில்லை. பெரும்பாலோர் கடுமையான முகத்துடன் காட்சியளித்தனர். விமானம் மூடுபனியைத் தாண்டி மேலே சென்றதும் சூரிய வெளிச்சம் நன்ருகத் தெரிந்தது. களங்கமற்ற வானம்; சூரியன் நன்ருகப் பிரகாசித்தது. சூரியனைப் பார்த்தே நாலைந்து நாட்களாகி விட்டன. சூரிய ஒளி

விமானத்திலுள்ள கண்ணுடி ஜன்னல்களின் வழியாக உள்ளே புகுந்து, பெரும்பாலான பிரயாணிகளின் முகங்களில் பரவிற்று. கடுமையாக இருந்த முகங்கள் மலர்ந்தன. முகத்தில் மட்டுமன்று; அவர்கள் உள்ளத்திலும் ஒளி வீசியதாகத் தோன்றியது. எல்லோருடைய முகங்களிலும் புதிய மகிழ்ச்சி தோன்றிற்று. அவர்கள் புத்துயிரும் புத்துணர்ச்சியும் பெற்றவர்கள் போலத் தோன்றினர். சுமுகமான சூழ்நிலே. அத்தகைய அற்புதமான மாறுதல்கள் எல்லாம் சில விநாடிகளுக்குள் நிகழ்ந்தன.

ஜெர்மனியில் பல ஆண்டுகளாகச் சூழ்ந்திருக்கும் " அரசியல் மூடுபனி " நீங்கி, அந்தச் சூரிய வெளிச்சம் போல, அந்நாட்டு மக்கள் புனிதமான நல்வாழ்வு பெற வேண்டும் என்ற எண்ணமே என் உள்ளத்தில் மேலோங்கி நின்றது.

விமானம் ஹாம்பர்க்கை அடைந்தது. கடைத் தெருக்கள் எல்லாம் " இந்திர லோகம் " போலக் காட்சியளித்தன. கிறிஸ்துமஸ் சமயம் நெருங்கியபடியால், கடைத்தெருக்களிலும் கடைகளிலும் ஒரே ஜனக் கூட்டம். மக்களிடையே திருவிழா உணர்ச்சி. கிறிஸ்துமஸ் சமயத்தில் ஒரு பிரதான அமெரிக்க நகரம் எவ்வளவு கலகலப்பாகவும் சுறுசுறுப்பாகவும் இருக்குமோ, அவ்வாறிருந்தது ஹாம்பர்க் நகரம்.

ஹாம்பர்க்கிலிருந்து மறுநாள் காலே ஹாலந்து தேசத்திற்குப் பயணமானேன். இரவு பதினெரு மணிக்கு ரயில் ரோட்டர்டாம் நகரை யடைந்தது. வால்ட் ரயிலடிக்கு வந்திருந்தார். இருவரும் அவருடைய வீட்டுக்குச் சென்ரேம். சூடான காப்பியுடன் காத்திருந்தார் அவர் மனேவி மாச்செல்டு. என்னே அன்புடன் வரவேற்ற சில நிமிஷங்களுக்கெல்லாம், " நீங்கள்

வால்த்தரைப்பற்றி எழுதிய விஷயங்களைப் படித்தோம். ஜெர்மானியர் தங்கள் தவறை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். பிறர்மீதுதான் பழி சுமத்துவார்கள். இதுதான் அவர்களுடைய இயற்கையான குணம்'' என்றார் மாச் செல்டு.

ஜெர்மனியைப் பற்றியும், குறிப்பாகக் கிழக்கு பெர்லினைப் பற்றியும் தெரிந்துகொள்ள அவர்கள் இருவருக்கும் ஆவல். விருப்பு, வெறுப்பு இன்றி நடந்த விஷயங்களை உள்ளபடி கேட்க வேண்டும் என்பது அவர்களுடைய விருப்பம். இரவு நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். காலையில் வால்ட்டின் குழந்தைகள் அனைவரையும் பார்த்தேன். இனிய குழந்தை சூஸான் என்னை மறக்கவில்லை. என்னைப் பார்த்ததும், ''காகா நேட்டுப்பூ'' என்று சொல்லிக் கை கொட்டி உரக்கச் சிரித்தாள்.

அன்றிரவே இங்கிலாந்துக்குப் பயணமானேன். ஹுக் ஆவ் ஹாலந்து என்ற இடத்தில் இரவு பதினொரு மணிக்குக் கப்பல் ஏறினால், மறுநாள் அதிகாலையில் இங்கிலாந்து சேரலாம். தினந்தோறும் இரண்டு கப்பல்கள் சென்றன என்றாலும், சில சமயங்களில் இடம் கிடைப்பது கஷ்டம். கப்பலில் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள படுக்கைகள்தான் உண்டு. பிரயாணிகளின் எண்ணிக்கை படுக்கைகளின் எண்ணிக்கையைக் காட்டிலும் மிக அதிகம். எனவே எல்லோருக்கும் படுக்கை வசதி கிடைக்காது. அன்றியும் படுக்கைக்காகத் தனிக் கட்டணம் செலுத்தவேண்டும். சிக்கனமாகப் பிரயாணம் செய்வோர், படுக்கையை விரும்புவதில்லை. கப்பலில் ஏராளமான சோபாக்களும், சாய்வு நாற்காலிகளும் இருந்தன. படுக்கை வசதி விரும்பாத பிரயாணிகள்,

சோபாக்களிலும் நாற்காலிகளிலும் உட்கார்ந்துப் பொழுதைப் போக்கலாம்; அல்லது தூங்கலாம்.

நீளமான பெரிய சோபா ஒன்றில் ஒரு பிரயாணி மட்டும் உட்கார்ந்திருந்தார். அவர் ஆங்கிலேயர். என்னைவிட இருமடங்கு பருமனாக இருந்தார். நானும் அதே சோபாவில் உட்கார்ந்தேன். அதை அவர் விரும்பவில்லையென்று அவர் பார்வை சொல்லிற்று. இரவில் தான்மட்டும் சோபாவில் தனியாகத் தூங்க முடியாமல் போய்விடுகிறதே என்று அவர் வருந்தியிருக்கலாம். அவர் ஒரு வியாபார ஸ்தாபனத்தின் நிர்வாகி. அவருக்குப் படுக்கை ஒன்று பதிவு செய்யப்பெற்றிருந்தது. படுக்கையறை மிகவும் வெப்பமாகவும், காற்றோட்டமில்லாமலும் இருந்தபடியால் அவர் அங்கே படுக்காமல் வெளியில் சோபாவில் உட்கார்ந்திருந்தார்.

ஆனால் என்னுடைய கதை வேறு. படுக்கைக்குக் கொடுக்கப் பணவசதி யில்லாததால், நான் வெளியில் சோபாவில் உட்கார்ந்திருந்தேன். கப்பல் நகர்ந்ததும் இருவரும் கண் அயர்ந்தோம். சில சமயங்களில் நான் விழித்தபொழுது, அவர் குறட்டை விட்டதைப் பார்த்தேன். அதேபோல நான் குறட்டை விட்டதையும் அவர் விழித்தபோது பார்த்திருக்கக்கூடும். இருவரும் ஒரே மாதிரியாகக் குறட்டை விட்டதால், ஒருவரைப்பற்றி ஒருவர் குறைசொல்ல இடமில்லாமல் போய்விட்டது.

காலை மூன்று மணிக்கு மேல் இருவருக்குமே தூக்கம் வரவில்லை. சிறிது பேச்சு ஆரம்பித்தோம். அவர் வியாபார விஷயமாக அடிக்கடி ஜெர்மனி சென்றுவருவதாகவும், அந்த முறை விமானத்தில் இடம் கிடைக்காததால் கப்பலில் செல்வதாகவும் கூறினார். ஐரோப்பியச் சேனையைச் சீக்கிரம் அமைக்கவேண்டும் என்றார்.

ருஷ்யாவின் கம்யூனிஸ்டுக் கொள்கையை வன்மையாகக் கண்டித்தார்.

"ஹிட்லரைத் தோற்கடித்தால் உலகில் அமைதி உண்டாகும் என்று கருதினீர்கள். அவ்வாறு உண்டாகியிருக்கிறதா?" என்றேன்.

"இல்லை" என்ருர்.

"ருஷ்யர்கள் கெட்டவர்கள் என்றே வைத்துக் கொள்வோம். அவர்களை எல்லாம் ஒழித்துவிட்டால் உலகில் அமைதி ஏற்படும் என்று நம்புகிறீர்களா?" என்றேன்.

"இல்லை" என்ருர்.

"அப்படியானல் உலகில் அமைதி உண்டாவதற்கு நீங்கள் கூறும் வழி என்ன?" என்று கேட்டேன்.

"ருஷ்யா ஒரே நாடு அன்று; பல நாடுகள் கொண்டது. அவற்றைத் தனித் தனியாகப் பிரித்துவிட்டால், ருஷ்யா பலமற்றுப் போய்விடும். அதுதான் வழி" என்ற தமது பிரித்தாளும் திட்டத்தை வெளியிட்டார்.

---

# மலேயா

இங்கிலாந்திலிருந்து சூஸான் என்னும் கவர்ச்சியும் வசதியுமுள்ள கப்பலில், மலேயா செல்ல எண்ணி னேன். இந்தியர் மலேயா செல்வதற்குப் புதிதாகப் பல கட்டுப்பாடுகள் தோன்றியிருந்தன.

மலேயாவுக்கு என்னை அழைத்த நண்பர், பினங்கி லுள்ள குடியேற்றப்பதிவுக் காரியாலயத்தில் ஈடுதொகை செலுத்தி, மலேயாவில் நான் இறங்குவதற்கு அனுமதி வாங்கினர். அனுமதிச் சீட்டைப் பினங்கிலுள்ள சூஸான் கப்பல் நிர்வாகத்தின் பிரதிநிதியிடம் காட்டி, அவரைக் கொண்டு, லண்டனிலுள்ள தலைமைக் காரியாலயத்துக் குத் தந்தி கொடுக்கச் செய்தார். அந்த விவரம் எனக்குப் பின்னர்தான் தெரிந்தது. நண்பர் அவ்வளவு முன் யோசனையுடன் அம்மாதிரிச் செய்திராவிட்டால், மலாய் நாட்டில் இறங்கும்பொழுது எனக்குப் பல சிரமங்கள் ஏற்பட்டிருக்கும்.

சூஸான் கப்பல் பி. அண்ட் ஓ. என்ற பிரிட்டிஷ் ஸ்தாபனத்தைச் சேர்ந்தது. சில ஆண்டுகளுக்குமுன், இவர்களுடைய கப்பல்களில் இலவசமாகப் பிரயாணம் செய்வதற்குக்கூட, பல இந்தியர்கள் விரும்பியிருக்க மாட் டார்கள். அதற்குக் காரணம் வசதிக் குறைவன்று; மரியாதைக் குறைவேயாகும்!

இந்தியா சுதந்திரமடைந்த பின்னர், இவர்களின் போக்கும் திருந்திவிட்டது. இந்தியாவுக்கு வரும் ஆங்கி லேயர் தொகை குறைவு. அதற்கு மாருக இங்கிலாந்து செல்லும் இந்தியர் தொகை அதிகம். இந்தியர்களைச்

சமமாக நடத்துவதற்கு, இந்தியச் சுதந்திரம்மட்டும் காரணம் அன்று; இந்தியரால் கிடைக்கும், இழக்க முடியாத பெரும் வருமானமும் காரணமாகும்.

மாலை மூன்று மணிக்குக் கப்பலுக்கு வந்தேன். மாலை ஆறு மணிக்குக் கப்பல் புறப்படும் என்று கூறினார்கள். எங்கும் ஒரே மூடுபனி. ஆங்கிலேயர் எதையும் குறித்த காலத்தில் செய்வதில் அக்கறை உள்ளவர்கள். ஆனால் இயற்கையே விரோதமாக இருந்தால் என்ன செய்வது? குறித்த காலத்தைவிட, பதினாறு மணி நேரம் தாமதமாகக் கப்பல் புறப்பட்டது.

சூஸான், ஐந்து ஆண்டுகளுக்குமுன் கட்டப்பெற்ற, இருபதாயிரம் டன் எடையுள்ள வசதியான கப்பல். பிரயாணத்தின்போது ஆட்டத்தைக் குறைப்பதற்கான நவீன சாதனம் (stabiliser) அதில் அமைக்கப்பெற்றிருந்தது. சுமார் ஆயிரம் பிரயாணிகளை ஏற்றிச்செல்ல வசதி இருந்தது. கப்பலில் வேலை செய்தோர் தொகை ஐந்நூறுக்குமேல்.

கப்பலில் ஏழு மாடிகள். அவற்றுக்குச் செல்ல, மின்சார 'லிப்டுகள்' உண்டு. நான்காவது மாடியில், எனக்கு இடம் கொடுத்தார்கள். எனது அறையில் மூன்று சகோதரப் பிரயாணிகள் இருந்தனர். எல்லோரும் சீனர். அவர்களில் இருவர் மாணவர், ஒருவர் வியாபாரி.

கப்பலில் இரண்டு வகுப்புக்கள் இருந்தன. ஒன்று முதலாவது வகுப்பு; மற்றொன்று 'டூரிஸ்டு' வகுப்பு. 'டூரிஸ்டு' வகுப்பில் சுமார் ஐந்நூறு பிரயாணிகள் இருந்தனர். அவர்களில் பாதிக்குமேல் இந்தியர்கள். சீன மாணவ, மாணவிகள் சிலரும், மலேயர், இந்தோ

னேஷ்யர், பாக்கிஸ்தானிகள், இலங்கையர் சிலரும், பிரயாணம் செய்தார்கள். அமெரிக்கர் நாலைந்து பேர் தான். ஆங்கிலேயரில் பெரும்பாலோர் பெண்களும் குழந் தைகளும். பெண்கள் மலேயாவில் தங்கியிருந்த தங்கள் கணவன்மாருடன் கொஞ்சநாள் தங்கி வாழ்க்கை நடத்தச் சென்றார்கள். அவர்களுக்குக் கணவன்மார்களைப் பார்க்கப் போகிறோம் என்ற மகிழ்ச்சி. அதுமட்டுமன்று. இங்கி லாந்தைவிட்டு வெளியே செல்கிறோமே என்ற மகிழ்ச்சி யும் உண்டு. யுத்தத்திற்குப் பிறகு இங்கிலாந்தில் ஏழைக் குடும்பங்கள் பட்ட அவதி சொல்லிமுடியாது.

இந்தியர்களில் பெரும்பாலோர் மாணவர்கள். இங்கி லாந்து, அமெரிக்கா, ஜெர்மனி முதலிய பல நாடுகளில் படிப்பை முடித்துத் திரும்புகிறவர்கள். ருஷ்யாவிலும், கிழக்கு ஐரோப்பாவிலும் சில மாதங்கள் சுற்றுப் பிரயா ணம் செய்து, இந்தியக் கலைக்காட்சிகளை ஏற்பாடு செய்வ தற்காகச் சென்ற இந்தியக் கலைக் குழுவின் அங்கத்தினர் சிலரும் பிரயாணம் செய்தனர்.

இந்தியர்கள் எல்லோருடனும் சமத்துவமாகவும், அன்பாகவும் கலந்து பழகினார்கள். சீட்டாட்டம், குடி, நடனம், குதிரைப் பந்தயம், விளையாட்டு, நீச்சு விளை யாட்டு, எதிலும் இந்தியர் பங்கு கொள்ளத் தவறிய தில்லை.

கப்பலில் முதல் வகுப்பில் பிரயாணம் செய்த இந்திய விமானப் படைச் சேனாதிபதி முகர்ஜியும் அவருடைய மனைவியும் எத்தகைய அதிகார தோரணையுமின்றி, எல்லா இந்தியர்களுடனும், சமத்துவமாகவும், அன்பாக வும் பழகினார்கள். இந்தியப் பிரயாணிகள் ஒன்றுகூடி, முகர்ஜியின் தலைமையில் ஒரு குழு நிறுவினார்கள். பம்பாய் சேருவதற்கு முன், கப்பலில் உள்ள இந்தியர்

களில் திறமையுள்ளவர்களைக் கொண்டு, இந்தியச் சங்கீதம், நடனம் முதலியவை நடத்துவதென்றும், அதற்கு "இந்தியக் காட்சி" என்று பெயரிடுவதென்றும் முடிவு செய்தார்கள். கப்பலில் பிரயாணம் செய்த ஆசிய நாட்டினர் அனைவரும், அதில் பங்கெடுத்துக் கொள்ள விரும்பினர். எனவே "இந்தியக் காட்சி" "ஆசியக் காட்சி"யாக மாறிற்று. கப்பல் தலைவர் உள்பட எல்லோரும் காட்சியைக் கண்டு களித்தனர்.

கப்பலில் ஒரு நாள் என்ஜின் அறை பார்க்க விரும்புகிறவர்களை அழைத்துச் சென்றார்கள். கப்பலின் மத்தியில் அது அமைக்கப்பெற்றிருந்தது. மூன்று மாடி உயரம் எவ்வளவோ அவ்வளவு உயரத்திற்கு அந்த அறை அமைந்திருந்தது, இயந்திரங்களின் தன்மைகளையும், அவை செய்யும் வேலைகளையும், அழைத்துச் சென்ற அதிகாரி விளக்கிக் கூறினர்.

கப்பலில் இந்திய உணவும் பரிமாறினர்கள். எந்த உணவு வேண்டுமானாலும் வேண்டிய அளவு சாப்பிடலாம். மூன்று மணி நேரத்துக்கு ஒரு முறை ஏதாவது உணவு அளித்தனர். கப்பலில் பிரயாணம் செய்யும் பொழுது பசி அதிகமாக இருக்கும், கடல் மயக்கமுள்ளவர்களுக்கு அன்று.

கப்பல் வேலைக்காரர்களில் ஆங்கிலேயர் பலர், இந்தியர் சிலர். இருவருக்கும் ஒரே மாதிரி வேலை. ஆனால் சம்பளம் மட்டும் ஆங்கிலேயருக்கு இந்தியரைவிட அதிகம். அதன் காரணம் என்னவென்று விசாரித்தேன். சுதந்திர இந்திய அரசாங்கத்தார் முயற்சியினால், கப்பலில் வேலைசெய்யும் இந்தியத் தொழிலாளர், மற்ற நாட்டினரைப் போலவே சம உரிமையும், ஒரே சம்பளமும், ஒரே மாதிரி வசதியும் பெறவேண்டுமென்பதை அமலுக்குக்

கொண்டுவந்திருக்கிருர்களாம். ஆனுல் அந்தக் கப்ப லில் வேலை செய்த இந்தியர்கள் கோவானியர். கோவா இந்தியாவின் ஓர் அந்நிய நாட்டின் குடியேற்றப் பகுதி. எனவே சுதந்திர இந்தியத் தொழிலாளருக்குள்ள சமத் துவம் கோவா இந்தியர்களுக்குக் கிடையாது. கோவா அரசாங்கம், அதைப்பற்றிக் கவலைப்படவே இல்லை. அரசாங்க முயற்சி எதுவும் இல்லாததால் கோவாவின் அரசியல் நிலையையும், பொருளாதார வறுமையையும் கப்பல் முதலாளிகள் தங்களுக்குச் சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டார்கள்.

அமெரிக்காவில் கல்வி பயின்ற இந்திய மாணவர் ஒருவர், தமது அமெரிக்க மனைவியுடன் பிரயாணம் செய் தார். அவர் மனைவி மிகவும் நல்லவர்; நிரம்ப அடக்க மானவர்; எல்லோரிடமும் நன்ருகப் பழகினுர். அவ ருடன் உரையாட நேர்ந்த இந்திய மாணவர்கள் எல்லோரும், இந்தியாவைப் பற்றிய விவரங்களையும், வேதாந்த விஷயங்களையும் அவருக்கு விளக்கிச் சொன் ஞர்கள். வேதாந்தத்தைப் பிறருக்கு விளக்கிச் சொல்லு வதிலே இந்திய மாணவர்கள் மிகவும் ஆர்வமுள்ள வர்கள்.

கப்பலில் பிரயாணிகள் கூடிப் பேசும் கூடத்தில், சில இந்தியத் தினசரிப் பத்திரிகைகள் காணப்பெற்றன. கப்பலில் உள்ள பிரயாணிகள் தங்களிடமுள்ள பத்திரி கைகளைப் படித்ததும், பிறருக்கு உபயோகமாக இருக்கட் டும் என்று கருதி, அங்கே கொண்டுவந்து வைப்பார்கள். இந்திய மாணவரின் அமெரிக்க மனைவி இந்தியப் பத்திரிகைகளில் காணப்பெற்ற கல்யாண விளம்பரங்களை ஒன்றுகூட விடாமல் அனைத்தையும் படித்தார்.

இந்திய மாணவர்களுடன் அவர் பேசிய பொழுது, "அமெரிக்கராகிய நாங்கள் உலக வாழ்விலும் பண விஷயத்திலும் பற்றுள்ளவர்கள். அதை ஒப்புக் கொள்ள நாங்கள் தயங்குவதில்லை. இந்தியராகிய உங்களுக்கும், உலக வாழ்க்கையிலும், பணம் சம்பாதிப்பதிலும் அமெரிக்கர்களைப் போலத்தான் ஆசை. ஆனால் நீங்கள் அதை மறைத்து, வேதாந்தம் பேசுகிறீர்கள். நீங்கள் சொல்லுவது ஒன்று; செய்வது வேறு. இந்தக் கல்யாண விளம்பரங்களைப் பாருங்கள். படித்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் நீங்கள் வரதட்சணை கேட்க வெட்கப்படவில்லையா? வரதட்சணை வாங்குவோருக்கு வேதாந்தம் எதற்கு?" என்று கேட்டார்.

அது முதல், இந்திய மாணவர்கள் அவரிடம் வேதாந்தப் பிரசங்கம் செய்வதை நிறுத்திவிட்டார்கள்!

* * *

இங்கிலாந்தைவிட்டுப் பிரயாணமான கப்பல் நேராக போர்ட் செட் சென்றது. கப்பல் ஒவ்வொரு துறை முகத்திலும் தங்கும்போது பிரயாணிகள் கரைக்குச் சென்று, அந்த ஊர்க் காட்சிப்பட அஞ்சல் அட்டைகளை வாங்கி உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் அனுப்புவது வழக்கம். பிறரை நாம் நினைவுபடுத்திக்கொள்ளவும், பிறர் நம்மை நினைக்கும்படி செய்யவும் அது ஒரு நல்ல முறை. நாம் எந்தத் துறைமுகத்துக்கு அடுத்தபடியாகச் செல்லப்போகிறோமோ, அதன் காட்சிப்பட அட்டைகளைப் பல தினுசுகளில் கப்பலில் உள்ள கடையிலேயே இரண்டு நாளைக்குமுன் வாங்கலாம். கப்பலில் நிறைய ஓய்விருப்பதால், கப்பலிலேயே அவற்றில் செய்தியும் முகவரியும் எழுதிப் பூர்த்தி செய்து கொள்ளலாம். நாம் எந்த நாட்டில் அவற்றைத் தபாலில் சேர்க்க வேண்டுமோ, அந்த நாட்டுத் தபால் தலைகள் கப்பலில்

விற்பனைக்குக் கிடைத்தன. கப்பலிலேயே உள்ள தபால் பெட்டியில் அவற்றைச் சேர்த்துவிடலாம். அதனுல் பிரயாணிகள் கரையில் இறங்கியதும், தங்கள் விருப் பப்படி ஊர் சுற்றிப் பார்க்க நேரமிருந்தது.

கப்பல் ஒரு துறைமுகத்துக்குச் செல்லுமுன் அந்த ஊர்ப்படம், நாணயசம்பந்தமான விவரங்கள், மற்றும் அவசியம் என்று கருதப்பெறும் சில விவரங்களையும் அச்சடித்து ஒவ்வொரு பிரயாணிக்கும் வழங்கினுர்கள். போர்ட் செட் துறைமுகத்தைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது, அதன் நகர எல்லையைத் தாண்டி வெளியே செல்வது ஆபத்து என்று எச்சரித்திருந்தார்கள். ஆபத்து என்பது உண்மை. ஆனுல் அந்த ஆபத்து நமக்கன்று; ஆங்கிலேயருக்குத்தான்!

போர்ட் செட், எகிப்திலுள்ள முக்கிய துறைமுகம். யுத்தத்திற்குப் பிறகு அது அபிவிருத்தி அடைந் திருந்தது. அழகான கட்டிடங்கள் பல புதிதாகக் கட்டப் பெற்றிருந்தன. பாரிஸ் நகரத்தைப் போல, வீதிகளின் அகலமான நடைபாதைகளில் நாற்காலிகளும், மேஜை களும் போட்டிருந்தார்கள். அங்கே காப்பி, குளிர்ந்த பானம், உணவு முதலியவற்றைப் பரிமாறினுர்கள். எவ்வளவு நேரம் வேண்டுமானுலும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கலாம். கேட்கும்பொழுதுதான் பட்டியல் தருவார்கள். எகிப்தின் நாணயம் பவுன். பிரிட்டிஷ் பவுனுக்கும் எகிப்திய பவுனுக்கும் ஒரே மதிப்பு,

வீதிகளிலே செல்லும்பொழுது பலர், பவுண்டன் பேனு, கடிகாரம், தோற்பை, முதலியவற்றை விற்க முயன்ருர்கள். மலிவான விலை என்பார்கள். விலையின் குறைவைக் காட்டிலும் சாமான்களின் தரம் மிகக் குறை வாக இருக்கும்.

வீதிகளில், பல இடங்களில் ராணுவச் சிப்பாய்களும் போலீசாரும் காவல் புரிந்தனர். அவர்கள் இந்தியர்களிடம் மிகப் பிரியமாக நடந்துகொண்டார்கள். சில சமயங்களில் அவர்களைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தோம். உடனே அவர்கள் ராணுவ முறைப்படி மரியாதை செய்தார்கள். மொழி தெரியாது என்ருலும் இந்தியர்களுக்கு அவசியமான உதவியைச் செய்ய முன்வந்தனர்.

துறைமுக வாயிலில், சூயஸ் கால்வாய் கம்பெனியின் அலுவலகக் கட்டிடம் இருந்தது. அது அழகும் கம்பீரமும் வாய்ந்தது. அதனைப் படம் பிடிக்க விரும்பிஞர் கப்பலில் வந்த இந்திய மாணவரும், அவருடைய அமெரிக்க மனைவியும். துறைமுகத்தில் பல இடங்களில் இரும்பு முள்வேலி அமைத்திருந்தனர். அங்கே ராணுவத்தார் காவல் புரிந்தனர். முள் வேலியைத் தாண்டிச் சென்ருல்தான் கட்டிடத்தை நன்ருகப் படம் பிடிக்க முடியும். அவ்வாறு தம்மை அனுமதிக்கும்படி, ராணுவச் சிப்பாயை மாணவர் கேட்டார்.

“உங்களுடன் இருப்பவர் யார்? பிரிட்டிஷாரா?” என்ருர் சிப்பாய்.

“இல்லை; இவர் ஓர் அமெரிக்கர்” என்ருர் மாணவர்.

“அப்படியானுல் நீங்கள் உள்ளே செல்லலாம்; பிரிட்டிஷார் தவிர வேறு யார் வேண்டுமானுலும் வரலாம்” என்ருர் சிப்பாய்,

வெளியே உள்ள விளம்பரப் பலகையில் “யாரும் உள்ளே செல்லக்கூடாது” என்று எழுதப்பெற்றிருந்தது. பிரிட்டிஷாருக்கும், எகிப்தியருக்கும் அப்பொழுதிருந்த உறவு நிலைமையை அது காட்டிற்று.

போர்ட் செட்டிலிருந்து சூயஸ் கால்வாய் வழியாகப் பிரயாணம் செய்தோம். சூயஸ் கால்வாய் வெட்டி சுமார் நூறு ஆண்டுகள் ஆகின்றன. கால்வாயின் நீளம் 100 மைல்; அகலம் 200 அடி, ஆழம் 33 அடி. செங் கடலேயும், மத்தியதரைக் கடலேயும் அது இணைக்கிறது. அதனைக் கட்டியவர் பெர்டிஞண்ட் என்ற பிரெஞ்சுக்காரர். கால்வாயில் எங்களுக்கு முன்னே ஒரு கப்பல். பின்னே இரண்டு கப்பல்கள். ஊர்வலத்தில் செல்வதுபோலக் கப்பல் மெதுவாகச் சென்றது. பிற் பகலில் கால்வாயின் வழியாகச் சென்றதால், இரு புறங்களிலும் உள்ள காட்சிகளைக் கண்டு களித்தோம். ஒரு புறத்தில் சாலைகளில் வேகமாக ஓடிய மோட்டார் களையும், ரயில் வண்டிகளையும் அடிக்கடி பார்த்தோம். பிரயாணம் மிகவும் இன்பமாக இருந்தது.

அடுத்த துறைமுகம் ஏடன். அது அரேபியாவைச் சேர்ந்தது. சுங்கத் தீர்வையில்லாத துறைமுகமாதலால், அந்நிய நாட்டுச் சாமான்கள் மலிவாகக் கிடைத்தன.

பம்பாய்த் துறைமுகம் நெருங்கிற்று. பெரும்பா லான பிரயாணிகள் பம்பாயில் இறங்குகிறவர்கள். எல்லோரும் பம்பாய் சுங்க அதிகாரிகளை வாய்கொண்ட மட்டும் திட்டிக்கொண்டே மூட்டைகட்ட ஆரம்பித்தனர்.

ஒவ்வொரு நாடும், தங்களுடைய நாட்டு மக்கள் வெளிநாடுகளில் பிரயாணம் செய்து திரும்பும்பொழுது, குறிப்பிட்ட அளவு சில சாமான்களைத் தீர்வையில்லாமல் கொண்டுவரலாம் என்று விதிகள் ஏற்படுத்தியிருக்கின் றன. இந்திய அரசாங்கமும் மற்ற நாடுகளைப்போலவே அத்தகைய விதிகளை அமைத்திருக்கிறது. சில நாடுகளைக் காட்டிலும், இந்திய அரசாங்கத்தின் விதிகள் தாராள மானவை என்றுகூடச் சொல்லலாம்.

கப்பல் துறைமுகத்தை அடைந்தது. பம்பாயி லுள்ள ஓர் அமெரிக்க பாங்கின் கிளையினரும், பம்பாயி லுள்ள ஒரு பிரிட்டிஷ் பாங்கின் கிளையினரும், கப்ப லுக்கே வந்து பிரயாணிகளின் நாணயம் மாற்றும் சௌகரியத்தைக் கவனித்தனர். எனக்கும் பத்துப் பவுன் டிராவலர் செக்கை மாற்றவேண்டி இருந்தது. "எப்படி யும் கரைக்குச் செல்வோம். ஏற்கெனவே கணக்கு வைத் திருந்த பாங்கியில் இந்தச் செக்கை மாற்றலாம். அத னுடன் அங்கு வேலை செய்யும் பழைய அன்பர் களையும் சந்திக்கலாம்" என்ற எண்ணத்துடன் எனக்கு அறிமுகமான ஓர் இந்திய பாங்குக்குச் சென்றேன். டிராவலர் செக்கை மாற்ற முக்கால் மணி நேரமாயிற்று. அதுவும் அங்குள்ள சில அதிகாரிகள் என்மீது அனு தாபம் கொண்டு, தங்கள் வேலையை விட்டுவிட்டு, பல முறை உள்ளே சென்று ஏஜண்டைக் கண்டு பேசியதால். கப்பலில் அதனை மாற்றியிருந்தால் பத்து விநாடிகளுக் குள் எனக்குப் பணம் கிடைத்திருக்கும். பெயரையும், பாஸ்போர்ட் எண்ணையும் குறித்துக் கொண்டு, உடனே பணத்தைக் கொடுத்திருப்பார்கள்.

பம்பாயில் கப்பல் இருபத்துநான்கு மணி நேரம் தங்கியது. முதல் நாள் காலை ஒன்பது மணிக்கு வந்த கப்பல், மறுநாள் காலை ஒன்பதுமணிக்குத்தான் பிரயாண மாயிற்று. கப்பலடிக்கு வந்திருந்த நண்பருடன், சாண்டா குரூஸில் உள்ள அவருடைய வீட்டுக்குச் சென்று அன் றிரவு தங்கினேன். நீண்ட நாள் கப்பல் பிரயாணத்தின் இடையே, ஓர் இரவு கரையில், அதுவும் தாய் நாட்டின் கரையில் படுத்து உறங்கியது மகிழ்ச்சியைத் தந்தது.

பம்பாயை விட்டுக் கப்பல் புறப்பட்டது. பிரயாணிகள் மிகச் சிலரே. கரையோரமாகவே கப்பல் சென்றது.

மறுநாள் மாலை கொச்சியைக் கண்டோம். கப்பலிலேயே ஒலி பெருக்கி மூலம், கரையோரங்களில் காணும் இடங்களையும், எதிரே வரும் கப்பல்களின் பெயரையும் அவை இன்ன நாட்டைச் சேர்ந்தவை என்பதையும் கூறினார்கள்.

கொழும்பில் கப்பலை அணைக்கப் பாலம் கிடையாது. சிறிய படகிலேதான் கரை சேரவேண்டும். ஏழு ஆண்டுகளுக்குப் பின் கொழும்பு சென்றேன். இந்திய நண்பர்களையும், இலங்கை நண்பர்களையும் சந்தித்து மகிழ்ந்தேன். அங்கு கப்பல் ஒன்பது மணி நேரம்தான் தங்கிற்று. அன்றிரவே பிரயாணமானோம்.

மறுநாள் காலையில், ஒருவர் எனக்குப் பின்புறமாக வந்து "அண்ணே, இந்தா மசால்வடை" என்றார். திரும்பிப் பார்த்தேன். அவர் ஒரு மலாய்க்காரர். அவரை எனக்குத் தெரியும். ஆனால் அவருக்குத் தமிழ் தெரியும் என்று எனக்குத் தெரியாது. அவர் இங்கிலாந்திலிருந்து அதே கப்பலிலேயே பிரயாணம் செய்தார். அவர் ஒரு வழக்கறிஞர் (Barrister). இங்கிலாந்து செல்லுமுன், மலாய்நாட்டில் ஒரு நீதிபதியாக இருந்தாராம். அவர் கொடுத்தது ஊசிப்போன மசால்வடைதான், என்றாலும் அவர் தமிழில் பேசி அன்புடன் கொடுத்ததால், பிரியமாகச் சாப்பிட்டேன்.

இங்கிலாந்தை விட்ட இருபத்திரண்டாவது நாள் பினாங்கு சேர்ந்தேன். மலேயாவில் மூன்று ஆண்டுகளுக்குள் எவ்வளவு மாறுதல்கள்! அந்நாட்டில் குவிந்திருந்த செல்வமெல்லாம் எங்கே போயிற்று ?

இங்கிலாந்திலும், ஐரோப்பாவிலும் உள்ள தோட்டக் கம்பெனிகளின் பங்குதாரர்களுக்குக் கொழுத்த லாபம் கிடைத்தது. தாய்நாட்டில் தொடர்புடைய சீனர்

சிலர் தங்கள் நாட்டுக்குப் பணம் அனுப்பினர். இந்தியா வுக்கு இந்தியர்கள் அனுப்பிய பணமும் கோடிக் கணக் கில் இருக்கும்!

மலேயாவின் உயிர்நாடி ரப்பரும், ஈயமும். இரண் டின் விலேயும் உச்சநிலேயை அடைந்தபின் கீழேவிழுந்து விட்டது. ரப்பர் தோட்டங்களில் கிடைத்த வருமானம் தோட்டத்தைப் பராமரிப்பதற்குக்கூடப் போதவில்லே என்று கூறினர்கள்.

மலாய் நாட்டில், ரப்பர் தோட்டத்தை நம்பியிருந்த ஓர் இந்திய வியாபாரியைச் சந்தித்தேன். பல விஷயங் களேப்பற்றிப் பேசிக்கொண்டிருந்த பொழுது அவர், "இந்தியாவின் அந்நிய நாட்டுக் கொள்கை சரியான தன்று. கொரியாவில் யுத்தம் நடந்தால் நமக்கென்ன ? எதற்காக நேரு முயற்சி எடுத்து சமாதானத்தை உண் டாக்கவேண்டும்? அவர்கள் எக்கேடும் கெட்டுச் சண்டை போட்டுக் கொண்டிருக்கட்டுமே! கொரியாவில் யுத்தம் நின்றதால் என்ன ஆயிற்று தெரியுமா? ரப்பர் விலே விழுந்துவிட்டது. அதனல் மலேயாவில் உள்ள இந்திய ருக்குப் பெரும் பாதகம் ஏற்பட்டுவிட்டது" என்று கூறினர்.

நேருவின் அந்நியநாட்டுக் கொள்கையைப் பற்றிச் சிலர் குறை கூறுவதைக் கேட்டிருக்கிறேன். ஆனல் அந்த மாதிரியான 'பரந்த நோக்கத்துடன்' ஓர் இந்தியர் குறை கூறியதைக் கேட்டது இதுதான் முதல் தடவை.

மலாய் நாட்டில் மூன்று மாதங்கள் தங்கினேன். பொருளாதாரக் கஷ்டம் பல துறைகளிலும் காணப் பட்டது. ரப்பர், ஈயம் முதலியவற்றின் விலே குறைந்ததே தவிர, தொழிலாளரின் சம்பளமும், உணவுச்



தாய்லாந்து - புத்தர் கோயில்

சாமான்களின் விலையும் குறையவே இல்லை. ரப்பரின் விலைக்குறைவு, லாபத்தைத்தான் அதிகமாகப் பாதித்ததே தவிர, மக்களுடைய தினசரி வாழ்க்கையை அதிகமாகப் பாதிக்க வில்லை என்று கூறலாம்.

மலேயா இயற்கை வளம் நிறைந்த அழகான நாடு! எங்கு பார்த்தாலும் பசுமை. நல்ல சாலை வசதிகள். தூசு என்பதே பார்க்கமுடியாது.

ஐக்கிய மலேயாவின் மக்கள் தொகை சுமார் ஐம்பது லட்சம். மலேயாவின் பூர்வக் குடிகள்—அல்லது முதலாவதாகக் குடியேறியவர்கள் மலேயர். அவர்கள் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவர்கள். சுக வாழ்வில் பிரிய முள்ளவர்கள். அரசியலிலோ அல்லது வியாபாரத் திலோ அதுவரை அதிகமான சிரத்தை காட்டவில்லை. அப்பொழுதுதான் அவர்கள் முன்னுக்கு வந்துகொண் டிருந்தனர். இந்தியாவில் இருந்து வந்த முஸ்லிம்களுக் கும், மலாய்க்காரர்களுக்கும் திருமணம் முதலிய சமூகத் தொடர்புகள் உண்டு. மலாய்க்காரரும் இந்தோனேஷ்ய ரும் ஒரே மாதிரி பழக்க வழக்கமுள்ள சகோதரர்கள். இந்தோனேஷ்யா சுதந்திரமடைந்தது மலாய்க்காரர்கள் இடையிலும் ஒரு சுதந்திர உணர்ச்சியை எழுப்பியது. ஆனால், மலாய்க்காரரில் சிலர், பிரிட்டிஷார் தங்கள் நாட்டைவிட்டுப் போகக்கூடாது என்று விரும்பினர். பிரிட்டிஷார் சென்றுவிட்டால் தங்கள் நாட்டில், தங்களை விட எண்ணிக்கையில் அதிகமாக இருக்கும் சீனர்கள் தங்களை அடக்கி ஆள்வார்களே என்ற உண்மையான பயமே இதற்குக் காரணமாகும்.

யுத்தத்திற்குப் பிறகு, சீனர்கள் அடைந்திருக்கும் முன்னேற்றம் பிரமிக்கத்தக்கது. சீன சமூகத்தில் பணக் காரர்களாக உள்ளவர்கள் ஏழைகளாக உள்ள தங்கள்

சமூக மக்களை முன்னேற்றுவதற்காகப் பல உதவிகள் செய்துவந்தனர். சீனர்களின் நன்கொடைகளாலும், அரசாங்க உதவியாலும் நடைபெற்ற பள்ளிக்கூடங்கள் பல. சிறிய ஊரிலும் அழகான கட்டிடம் எது என்று கேட்டால், பள்ளிக்கூடம் என்று சொல்லிவிடலாம். பெரும்பாலும் எல்லாப் பள்ளிக்கூடங்களும் விசாலமான இடத்தில் கட்டப்பெற்றிருந்தன. மாணவ மாணவிகள் அதிகமாக இருந்ததால் காலையில் ஒரு பிரிவினரும் மாலையில் மற்றொரு பிரிவினரும் பள்ளிக்குச் சென்று பயின்றனர். நகரங்களிலே, பள்ளிக்கூட நாட்களில் ஆயிரக்கணக்கான இளம் சீன மாணவிகளும், மாணவர்களும், தங்கள் பள்ளிக்கூடத்தில் நிர்ணயித்திருக்கும் ஒரே மாதிரியான கவர்ச்சியான உடையணிந்து, கூட்டம் கூட்டமாக பள்ளிகளுக்குச் சென்றதையும், பள்ளிகளிலிருந்து திரும்பியதையும் பார்த்தேன்.

சீனர்களில் ஆண்களைவிடப் பெண்களின் தொகை அதிகம். ஆண்களும் பெண்களும் வேலைசெய்யச் சென்றார்கள். அவர்களிலே சோம்பேறிகளைப் பார்ப்பது அரிது. உழைப்பதற்காகவே அவர்கள் பிறந்தார்களோ என்று தோன்றும். சீனர்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்து வந்தது. நல்ல வீடு, சிறிய மோட்டார், குளிர் சாதனப்பெட்டி போன்ற வசதிகளுடன், சீனர்கள் வாழ்க்கையை அனுபவிக்கக் கற்றுக்கொண்டு வந்தனர். பல தாரத்து மணத்துக்கு அவர்களிடையே தடையில்லை என்றாலும், ஒரு தார மணத்தையே இளைஞர்கள் விரும்பினர். நூற்றுக்கணக்கில், சீன மாணவ, மாணவிகள் வெளிநாடுகளுக்கு, சிறப்பாக ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளுக்குக் கல்வி பயிலச் சென்று வந்தனர். பெரும்பாலும் மேனாட்டு நடை உடை பாவனைகளிலே மோகம் இருந்தாலும்,

தங்களுடைய பழைய பழக்க வழக்கங்கள் பலவற்றைச் சீனர் இன்னும் கைவிடவில்லை.

சீனர்களில் பெரும்பான்மையோர் புத்த மதத்தினரே. அவர்களிலே கிறிஸ்துவர்களும் உண்டு. நாடு முழுதும் புத்தர் கோயில்களைக் காணலாம்; அவற்றைச் சுத்தமாக வைத்திருந்தார்கள். சில கோயில்களிலே அமைதி நிலவிற்று; தெய்விக மணம் கமழ்ந்தது.

* * *

மலேயாவின் ஐம்பது லட்சம் மக்கள் தொகையில் சுமார் ஏழு லட்சம் பேர் இந்தியர். அவர்களில் பல பிரிவுகள்! முதலாவது மலேயா இந்தியர், இந்தியா இந்தியர் என்பது.

மலேயா இந்தியர் என்போர், மலேயா நாட்டிலேயே பிறந்து, அதனையே தாய்நாடாகக் கொண்ட, மலாய் நாட்டுக் குடிகள்.

இந்தியா இந்தியர் என்போர், இந்தியாவிலிருந்து மலேயாவுக்கு பிழைப்புக்காகச் சென்ற இந்தியக் குடிகள். மலேயா இந்தியரை விட, இந்தியா இந்தியரின் தொகையே அதிகம். அவர்கள் இந்தியக் குடிகளாகவும் இருந்து, மலாய் நாட்டு அரசியலிலும் பங்குகொண்டிருந்தார்கள்!

இந்தியர்களில் பெரும்பாலோர் தமிழர்; தோட்டத் தொழிலாளர். மலேயாவில் உள்ள ஆங்கிலப் பத்திரிகைகளில் அவர்களைப்பற்றி எழுதும்பொழுது, ராமசாமி என்று குறிப்பிடுவார்கள். ராமசாமி என்றால் தோட்டத் தொழிலாளரான இந்தியர் என்று பொருள்.

இந்தியர், புதிதாக மலேயாவுக்குச் செல்லப் பல இடையூறுகள் உள்ளன. குறிப்பிட்ட தொகைக்குக்

குறையாமல் சம்பளம்பெறும் இந்தியர்தான் மலேயா வுக்குச் செல்லலாம். ஆனால் குறிப்பிட்ட அந்தப் பெருந் தொகையைச் சம்பளமாக இந்தியர் பெறுவது அரிது. எனவே இனி இந்தியர்கள் மலேயாவில் குடியேறுவது இயலாத காரியம்.

மலேயாவில் வசிக்கும் இந்தியப் பிரஜைகளுக்கு, மலேயாவின் எதிர்காலத்தில் போதுமான அக்கறை இல்லை. அவர்கள் இந்தியர்களாகவே மலேயாவில் வாழ்ந்தார்கள். இந்தியாவிலிருந்து ஆயிரக்கணக்கான பத்திரிகைகள் வாரந்தோறும் மலேயாவுக்குச் செல்கின் றன. மலேயாவில் இந்தியர் நடத்தும் எல்லாப் பத்தி ரிகைகளிலும், இந்தியச் செய்திகளே அதிகமாகவும், பிரபலமாகவும் பிரசுரிக்கப்பெற்றன. அப்பத்திரிகைகள் இந்தியப் பிரச்னைகளைக் குறித்தே அடிக்கடி தலையங்கங் களும் எழுதின.

மலேயாவில் உள்ள இந்தியரில் குறிப்பிடத்தக்க அளவு முஸ்லிம்கள் பலவிதமான வியாபாரங்களில் ஈடு பட்டு, நன்றாகப் பொருளீட்டினார்கள்.

மலேயாவில் மலேயர், சீனர், இந்தியர் தவிர யூரேஷ்யர், இந்தோனேஷ்யர், இலங்கையர் ஆகியோர் இருந்தனர். அவர்கள் மிகச் சிறிய சமூகத்தினர். ஆங்கிலேயர், ஆஸ்திரேலியர், அமெரிக்கர், டச்சுக்காரர், முதலியோரும் அங்கு வசித்தனர்.

பினாங்கு ஒரு தீவு. சுற்றி வந்தால் நாற்பது மைலிருக்கும். மலேயாவில் பெரும்பாலான ஊர்களில் கடைத் தெருக்கள் ஒரேமாதிரியாக இருந்தன. எல்லாம் ஒரு மாடிக் கட்டிடங்கள்தான். கீழ் வீட்டில் கடை. மேல் மாடியில் குடும்பம்.

பினுங்கில் சில கஜ தூரத்துக்கு ரப்பரால் சாலே அமைத்திருந்தார்கள்.

அயர் அத்தாம் என்ற இடத்திலுள்ள அழகான புத்தர் கோயிலும், தண்ணீர் மலேயில் உள்ள ஸ்ரீ தண்டாயுதபாணி கோயிலும் அங்கே பிரபலமானவை. பெரிய மசூதிகளும், மாதா கோயில்களும் இருந்தன. பினுங்கில் உள்ள மலே ரயில் அத்தனே பிரயாணிகளேயும் வசீகரித்தது. அதைப்போலவே, பினுங்கில் அமைந்திருந்த அற்புதமான பெரிய தோட்டமும் வசீகரித்தது, உலகத்தில், நல்ல குடி தண்ணீர் கிடைக்கும் அதிர்ஷ்டமுள்ள நகரங்களில் ஒன்று பினுங்கு. அங்கிருந்து சிங்கப்பூர் சுமார் ஐந்நூறு மைல். பாதி வழியில் உள்ளது கோலாலம்பூர். பினுங்கிலிருந்து கோலாலம்பூருக்குச் சென்றேன். ரயிலில் மூன்ருவது வகுப்பு மிகவும் வசதியாக இருந்தது. ரயில் கட்டணம் நம் நாட்டைவிட அதிகம்—வேகம் நம் நாட்டைவிடக் குறைவு. ரயிலிலே அறிவிப்புக்களே நான்கு மொழிகளில் எழுதியிருந்தார்கள் ; ஆங்கிலம், தமிழ், சீனம், மலாய். கோலாலம்பூர் சென்றபொழுது, தைப்பிங் வழியாகச் சென்றேன். அது ஒரு மலேப்பிரதேசம். எப்பொழுதும் குளிர்ச்சியாக இருக்கும். தைப்பிங் என்ருல் சீன மொழியில் அமைதி என்று பொருள்.

கோலாலம்பூர் தமிழரின் கோட்டை. அங்கு தமிழ்க் கலேவிழா ஒன்று நடைபெற்றுக்கொண்டிருந்தது. நிகழ்ச்சிகள் மிகவும் நன்ருக இருந்தன. இளம் சிறுமிகள் பாடியதும், நடனமாடியதும், சபையோரை மகிழ்வித்தன.

## சிங்கப்பூர்

இருபத்தேழு மைல் நீளமும் பதினுன்கு மைல் அகலமும் கொண்ட தனித் தீவு சிங்கப்பூர். மலேயாவில்

ஜோகூர்பாரு என்ற ஊருக்கும் சிங்கப்பூருக்கும் இடையே ஒரு பாலம் கட்டியிருக்கிறார்கள். அதில் ரயிலும், மோட்டார்களும் சென்றன. சிங்கப்பூரின் மக்கள் தொகை பன்னிரண்டு லட்சம். சீனர் மட்டும் சுமார் ஒன்பது லட்சம். மலாய்க்காரரும் இந்தியரும் இரண்டரை லட்சம். மற்ற எல்லாச் சமூகத்தினரும் ஐம்பதாயிரம்.

நாளுக்கு நாள் சிங்கப்பூர் அபிவிருத்தியடைந்து வந்தது. மூன்று ஆண்டுகளுக்குள்ளாக எத்தனை புதுக் கட்டிடங்கள்! பதினெட்டு மாடிக் கட்டிடம், இருபத் தொரு மாடிக் கட்டிடம், இருபத்து மூன்று மாடிக் கட்டிடம்!

அரசியலில் சிங்கப்பூர் வேகமாக முன்னேறி வந்தது. நகர சபையிலும் சட்ட சபையிலும் தேர்ந்தெடுக்கப் பெற்ற அங்கத்தினர்களே பெரும்பான்மையினராக இருந்தனர். சீனர், மலேயர், இந்தியர், ஆங்கிலேயர் முதலிய அங்கத்தினர்கள் கூடி, நகரசபை விஷயங்களை விவாதித்தனர். சட்ட சபையில் புதிய சட்டங்களை இயற் றினர். ஐக்கிய மலேயாவுடன் சிங்கப்பூர் சேர விரும்ப வில்லை. அப்படிச் சேருவது சிங்கப்பூரின் நலனைப் பெரிதும் பாதிக்கும் என்று அஞ்சினர்.

சிங்கப்பூர் பெரிய வியாபார ஸ்தலம். அங்கு உற் பத்தியாவது ஒன்றுமில்லை. மலேயாவின் ரப்பர், ஈயம், அன்னுசிப் பழம் முதலியவற்றை ஏற்றுமதி செய்தார் கள். இறக்குமதி செய்த சாமான்கள்தான் ஏராளம். ஒருமுறை, கப்பலடியிலுள்ள கிடங்கு ஒன்றுக்குச் சென் றேன். சென்னையிலிருந்து வந்திருந்த புத்தகங்கள் கொண்ட பெரிய மரப்பெட்டியைக் கண்டுபிடிக்க மூன்று நாளாயிற்று. அப்பொழுது, கிடங்குகளின் எண்ணிக்கையையும் அவற்றில் வந்திறங்கியிருந்த

பெட்டிகளின் எண்ணிக்கையையும் கண்டு அதிச யித்தேன்.

சிங்கப்பூரின் வியாபாரம், வாங்குவதும் விற்பதும் தான். முக்கியமான வியாபார நிலையங்கள் எல்லாம், பிரசித்திபெற்ற ராபிள்ஸ் ஸ்கொயர் என்ற இடத்தில் இருந்தன. சண்டைக் கப்பல், ஆஸ்திரேலியாவிலிருந்து கங்காரு முதல், இங்கிலாந்து, அமெரிக்கா, ஜெர்மனி, செக்கோஸ்லோவக்கியா, ஜப்பான், ஹாங்காங் ஆகிய நாட்டுச் சாமான்கள்வரை எது வேண்டுமானாலும் அங்கே கிடைத்தன. பெரும்பாலும் பேரம் கிடையாது. ஒரே விலைதான்!

அங்கு முப்பத்துநான்கு பேருக்கு ஒரு மோட்டார், ஏழு பேருக்கு ஒரு சைக்கிள் இருப்பதாகக் கூறினார்கள். எங்கு பார்த்தாலும் வாடகை மோட்டார்கள் ஓடிக் கொண்டே இருந்தன. கைவிரலை உயர்த்தினால் போதும்; ஒரு வாடகை மோட்டார் அருகில் வந்து நிற்கும். மோட் டார் நிறுத்த இடம் கிடைப்பதுதான் கஷ்டம். ஒருமுறை ஒரு நண்பருக்கு, ராபிள்ஸ் ஸ்கொயரிலுள்ள ஒரு புத்தகக் கடையில், ஒரு புத்தகம் வாங்க வேண்டியிருந் தது. வாங்கவேண்டிய புத்தகம் என்னவென்று அவ ருக்குத் தெரியும். அது கடையிலே எந்த இடத்தில் வைக்கப்பெற்றிருந்த தென்பதும் தெரியும். கடைக் குள் சென்று, அதனை எடுத்து, அதற்குப் பணம் கொடுக்க மூன்று நிமிஷத்திற்குமேல் ஆகாது. ஆனால் மோட்டாரை வீதியில் நிறுத்திவிட்டால், அந்த மூன்று நிமிஷத்துக்குள் ஐம்பது மோட்டார்களுக்கு மேல், பின்னால் வந்து நின்றுவிடும்! நண்பர் மோட்டார்காரர் சங்கத்தைச் சேர்ந்தவர். சங்கத்தைச் சேர்ந்த ஊழியர் சிலர், ராபிள்ஸ் ஸ்கொயரில் எப்பொழுதும் இருந் தார்கள். அவர்களுக்கு மோட்டார் ஓட்டத் தெரியும்.

மோட்டார் சங்க ஊழியர் என்பதைத் தெரிவிக்க ஒருவித மான சட்டையும், அடையாளமும் அணிந்திருந்தனர். சங்கத்தைச் சேர்ந்த எல்லா மோட்டார்களுக்கும் ஓர் அடையாளம் உண்டு. சங்கத்தைச் சேர்ந்த மோட்டார் களை நிறுத்திவைக்க, அதன் ஊழியர்கள் உதவி செய்த னர். மோட்டாரை நிறுத்த இடமில்லையானால், ஊழியர் கள், மோட்டார் சொந்தக்காரரை அவர்கள் விரும்பும் கடைக்குள் சாமான் வாங்க அனுப்பிவிட்டு, தாங்கள் மோட்டாரில் ஏறி, ராபிள்ஸ் ஸ்கொயரின் நான்கு வீதி களிலும் சுற்றிச் சுற்றிப் பவனி வந்தார்கள். மோட்டார் சொந்தக்காரர்கள் சாமானை வாங்கிக்கொண்டு வெளியே வந்ததும் காத்துநின்றார்கள். தங்கள் மோட்டாரைப் பார்த்ததும் நிறுத்தி ஏறிக்கொண்டு ஊழியர்களை அனுப்பிவிட்டார்கள்!

சிங்கப்பூரில் இரண்டு பெரிய புத்தகக் கடைகள் இருந்தன. இரண்டும் குளிர் சாதன வசதி உள்ளவை. அவ்வசதி சிங்கப்பூரில் ஒரு வரப்பிரசாதம்.

புதிய கட்டிடங்களில் உள்ள காரியாலயங்களும், படக்காட்சிச் சாலைகளும், சில உணவுச்சாலைகளும், பெரிய ஹோட்டல்களில் சில அறைகளும், சில தனிப் பட்ட வீடுகளும் சில முடிவெட்டும் நிலையங்களும் குளிர் சாதன வசதியுடன் இருந்தன.

சிங்கப்பூரில் இரண்டு சர்வகலாசாலைகள்! ஒன்று மலேயா சர்வகலாசாலை. அங்கே சுமார் ஆயிரம் மாண வர்கள். மற்றொன்று சீனர்களின் முயற்சியால், சீனர் களாலே, எல்லோருக்கும் பயன்படும்படி அமைக்கப் பெற்றிருந்த நான்யாங் சர்வகலாசாலை.

சிங்கப்பூரில் நிற வித்தியாசமில்லை. யார் வேண்டு மானாலும் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். சிங்கப்

பூரில் பல நாட்டு மக்கள் வசித்தபோதிலும் அவர்கள் அன்னியோன்னியமாக வாழ்ந்தார்கள். அவர்கள் அனை வருக்கும் பொதுவான மொழி ஆங்கிலம்.

அங்கு மலேரியா, காலரா, வைசூரி முதலிய நோய் கள் கிடையா. சீதோஷ்ண நிலையின் காரணமாகவும், அதிக ஜனங்கள் ஒன்றாக வசிப்பதின் காரணமாகவும் க்ஷயரோகம் இருந்தது. அந்த வியாதி உள்ளவர்களுக்கு அரசாங்கம் இலவச வைத்தியம் செய்தது.

சிங்கப்பூரில் சீனர்கள் வசித்த பல பகுதிகள் வசதி யில்லாதவை. குடிசைகளை அகற்றி, நல்ல கட்டிடங் களைக் கட்டி வந்தார்கள். அரசாங்க உதவி பெற்ற சிங்கப்பூர் நகர அபிவிருத்தி ஸ்தாபனம் அந்த வகையில் நல்ல வேலை செய்தது. ஓர் ஆண்டில் மட்டும் அதன் முயற்சியால் இருபத்தையாயிரம் பேர்களுக்குப் புதிய வீட்டு வசதி கிடைத்தது. தனிப்பட்டவர்கள் கட்டும் வீடுகளின் தொகையும் மிக அதிகமாகி வந்தது. சிங்கப் பூரில் எப்பொழுதும் புதிய வீடுகள் கட்டப்பெறுவதைப் பார்க்கலாம்.

அங்கு ஒரு வாரத்தில் இறந்தவர் தொகையைக் காட்டிலும் பிறந்தவர் தொகை அறுநூற்றைம்பது அதிகம். அவ்வாறு வாரத்துக்கு அறுநூற்றைம்பது பேர் பெருகி வந்தால், அவர்களுக்கு எல்லாம் பள்ளிக் கூடங்கள் கட்டுவதும், வீடுகள் கட்டுவதும் பெரும் பிரச்னைகள். சிங்கப்பூரில் வேலையில்லாத் திண்டாட்டமே யில்லை எனக் கேள்விப்பட்டேன்.

கவர்ச்சியான படக் காட்சிச்சாலைகள் அங்கே இருந்தன. புதியதாகக் கட்டப்பெற்ற கட்டிடமொன்றில், மாடியில் காட்சிச்சாலை; கீழே உள்ள இடம் முழுதும் மோட்டார்கள் நிறுத்துவதற்காக.

'நியூ வொர்ல்ட்', 'கிரேட் வொர்ல்ட்' என்பன நிரந்தரமான கேளிக்கை நிலையங்கள், அவை ஆண்டு முழுதும் நடைபெற்றன. சூது விளையாட்டு, சிறு பந்தயங்கள், நாடகம், நாட்டியம், முதலிய பல கேளிக்கைகள் நடந்தன.

சிங்கப்பூரில் ஆங்கிலேயர், சீனர், இந்தியர் ஆகியோர் ஆங்கிலத் தினசரிப் பத்திரிகை நடத்தினர். சில சீனத் தினசரிப் பத்திரிகைகளும், தமிழ்த் தினசரிப் பத்திரிகையொன்றும் நடைபெற்றுவந்தது.

ஆண்டுதோறும், பங்குனி உத்திரத்தின்போது, தமிழர் பெரியதொரு திருவிழா நடத்தினர். தமிழர் சிலர் உடம்பிலும், நாக்கிலும் வேல் குத்திக்கொண்டு காவடி எடுத்தார்கள். பல சமூகத்தார் வாழும் அந்நாட்டிலே அதனைப் பலர் அநாகரிகமாகக் கருதினர். ஆண்டுதோறும் அந்த வேல் காவடியைப் படம்பிடித்து சீனர்களால் நடத்தப்பெற்ற ஆங்கிலப் பத்திரிகைகளில் மனித முள்குத்தி (Human Pin Cushion) என்ற ஏளனமான தலைப்புடன் வெளியிட்டுவந்தனர்.

சிங்கப்பூரில் ராமகிருஷ்ண மிஷனில் அனாதைக் குழந்தைகளுக்காக ஆசிரமம் நடத்திவந்தனர்.

காந்தியடிகள் நினைவாக இந்தியர்கள் பெரிய மண்டபம் ஒன்றும் கட்டியுள்ளனர்.

---

# தாய்லாந்து

பினங்கிலிருந்து, தாய்லாந்தின் தலைநகரான பாங்காக் நகருக்கு ரயிலில் பிரயாணமானேன்.

பினங்கில் ரயில் நிலையம் கிடையாது. ரயில் இலாகாக் காரியாலயங்கள்தாம் இருந்தன. ஆனால் பினங்கு ரயில் நிலையம் என்ற அறிவிப்புப் பலகைமட்டும் இருந்தது,

பினங்கிலிருந்து, எதிர்க்கரையிலுள்ள பிறை என்ற இடத்துக்குச் சிறு கப்பலில் செல்லவேண்டும். கப்பல் பிரயாணம் சுமார் அரை மணி நேரமாகும்; பிறையிலிருந்து, வாரத்துக்கு மூன்று நாள் பாங்காக் நகருக்கு ரயில் சென்றது. ரயிலில் இரண்டே வகுப்புக்கள்தான். ரயில் வண்டிகள் சௌகரியமாகவும், பார்வைக்கு அழகாகவும் இருந்தன. இருபத்தேழுமணி நேரத்தில் சுமார் எழுநூறு மைல் பிரயாணம். அதற்கு இரண்டாவது வகுப்புக் கட்டணம் நாற்பது ரூபாய்தான்! காலை ஒன்பது மணிக்குப் பிரயாணமானேன். கூட்டம் அதிகமில்லை. பகல் ஒன்றரை மணிக்குத் தாய்லாந்து எல்லையை அடைந்தபொழுது, ரயிலிலுள்ள பிரயாணிகளை எண்ணிவிடலாம். சுங்கப் பரிசோதனை ரயிலிலேயே நடந்தது. பாஸ்போர்ட் அதிகாரிகளைமட்டும் அவர்கள் தங்கியிருந்த ரயில் நிலையக் கட்டிடத்தில் சென்று பார்க்க வேண்டியிருந்தது.

பகல் நான்கு மணிக்கெல்லாம் ஒரு பெரிய ஊரை அடைந்தோம். நல்ல மழை. ஐந்நூறு பிரயாணிகளுக்கு மேல் ரயிலுக்குக் காத்துநின்றனர். அவர்கள் எல்லோரும்

ஏறிக்கொண்டனர். அம்மாதிரி இரண்டு மூன்று ஊர்களில், நூற்றுக்கணக்கான பிரயாணிகள் ஏறினர். எங்களுடைய பெட்டியில் சுமார் அறுபதுபேர் உட்கார இடம் அமைத்திருந்தார்கள். ஆனால் அதிலிருந்த பிரயாணிகளின் தொகை இருமடங்கு இருக்கும். தலை நகரில் நடைபெற்ற திருவிழாவிற்காக, மிகக் குறைந்த கட்டணத்தில் போகவரப் பிரயாணச் சீட்டு வழங்கியதே அப்பெருங் கூட்டத்துக்குக் காரணமாகும். உட்கார்ந்த இடத்திலிருந்து வெளியே எழுந்துசென்று வருவது என்பது எளிதன்று. மிகப் பிரயாசைப்பட்டு ஒரு முறை சென்றேன். போகும் வழியில் ஒரு பெரிய கூடை இருந்தது. செல்வதற்கு இடையூருக இருக்கிறதே என்று கருதினேன். சிறிது நேரத்திற்கு முன்னர்தான் ரயிலில் ஏறிய ஓர் அம்மையாருடைய கூடை அது. கூடையை வழியிலிருந்து எடுத்துவைக்க விரும்பினுர். அது கனமான கூடை. அக்கூடையை எடுத்து வைக்க நான் உதவினேன். செல்வதற்கு வழி ஏற்பட்டதே என்று எனக்கு மகிழ்ச்சி. அம்மையார் என்னைப்பார்த்து நன்றியறிதலுடன் நமஸ்காரம் செய்தார்.

தாய்லாந்து மக்கள் வந்தனம் கூறுவதையும், நன்றி செலுத்துவதையும் பலமுறை கண்டேன். உள்ளம் குளிர, மலர்ந்த முகத்துடன், அடக்கத்துடன் கரம் குவித்து, அவர்கள் வந்தனம் கூறுவதோ நன்றி செலுத்துவதோ அழகிய காட்சியாகும்.

வழி நெடுகக் கிடைத்த உணவுப் பொருள்கள் இனியவை! அது மட்டுமன்று. சுத்தமானவை! சயாமியர்களின் (தாய்லாந்துக்குச் சயாம் என்ற பெயரும் உண்டு) ஒவ்வொரு காரியத்திலும் அவர்களுடைய கலைத் திறனைப் பார்க்கலாம்!

பசும் இலைகளால் செய்யப்பெற்ற தொன்னைகளில் உணவுப்பொருளை வைத்துவிற்றனர். மாம்பழத்தை அவர்கள் நறுக்கி வைத்திருந்த அழகே தனி! இனிய கரும்பைச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கிச் சிறு குச்சி களில் ஒவ்வொன்ருகக் குத்தி, அந்தக் குச்சிகளை பந்து போன்ற ஒரு மரத்துண்டில் சொருகிவைத்திருந்தார்கள். அது அழகிய பூச்செண்டுபோலத் தோன்றியது! எந்தப் பொருளையுமே கவர்ச்சியாக, சுலபமாகச் சாப்பிடத்தக்க முறையில் அமைத்து விற்ருர்கள். கலை உணர்ச்சி அந்த நாட்டு மக்களின் வாழ்க்கையில் ஒன்ருகக் கலந்து விட்டது.

சயாமியருக்கு ஐஸ் மிகப் பிரியம். இரவு பகல் எந் நேரத்திலும், ரயில் நிலையங்களில் விற்கும் பொருள் களில், பலாச்சொளை ஆனுலும் சரி, இனிய நுங்குத் துண்டுகளானுலும் சரி ஐஸ் கட்டிகளை அதில் போட் டிருந்தார்கள். நிறைய மோர் விற்றனர்.

ரயிலில் நடைபாதைகளிலும், வழியிலும் நெருக்கி உட்கார்ந்து கொண்டிருந்த மக்கள் அமைதியாகவும், ஒழுங்காகவும் நடந்துகொண்டது எனக்கு ஓர் அதிசயக் காட்சியாக இருந்தது. நள்ளிரவில் இருவர் உரக்கப் பேசும் குரல் கேட்டது. எல்லோரும் உட்கார்ந்தோ அல்லது சாய்ந்துகொண்டோ தூங்கினுர்கள். சிலர் விழித்துக் கொண்டிருந்தார்கள். உரக்கப் பேசுவது யார் என்று பார்த்தேன். அவர்கள் இருவரும் இந்தியர்!

மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்குப் பாங்காக் சேர்ந்தேன். பாங்காக் என்ற பெயரில் ரயில் நிலையம் கிடையாது. நகரத்தையடுத்து ஓடும் ஆற்றின் எதிர்க் கரையில் ரயில் நின்றுவிடுகிறது.

பாங்காக் நகரத்துக்குப் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் சென்றிருக்கிறேன். ஆனால் அந்த அனுபவங்கள் தற்பொழுது ஒன்றுக்கும் பயனில்லை. நல்ல வேளையாக, இந்திய நண்பர்கள் ரயில் நிலையத்துக்கு வந்திருந்தனர்.

வெயில் அதிகமாக இருந்தது. பாங்காக்கில் வீட்டு வாடகையும், வாழ்க்கைச் செலவும் மிக அதிகம் என்று நண்பர்கள் கூறினர். எல்லாவற்றைக் காட்டிலும் பாங்காக்கில் கொசுதான் மிக அதிகம் என்று அன்றிரவு தெரிந்து கொண்டேன். அங்கு சாப்பாடு இல்லாமல் கூட இருக்கலாம்; ஆனால் கொசுவலை இல்லாமல் இருக்க முடியாது !

நான்கு நாட்கள் ஊர் பார்க்கும் யாத்திரிகனாக அங்கு தங்கினேன். இரண்டு லட்சம் சதுரமைல் நிலப் பரப்புள்ள தாய்லாந்தின் மக்கள் தொகை ஒரு கோடியே எண்பது லட்சம். தலைநகரான பாங்காக்கில் பத்து லட்சம் மக்களுக்குமேல் வசித்தனர்.

பாங்காக்கில் எங்கு பார்த்தாலும் புத்தர் கோயில்களே. தாய்லாந்தில் மொத்தம் 18,416 கோயில்களும், மடாலயங்களும் இருக்கின்றனவாம். அந்நாட்டு மக்களின் எண்ணிக்கையைவிட, அந்நாட்டிலுள்ள புத்த விக்கிரகங்களின் எண்ணிக்கை அதிகம். பாங்காக்கில் மட்டும் முந்நூறு புத்தர் கோயில்களுக்கு மேலிருப்பதாக அறிந்தேன். அவற்றில் மரகத புத்தர் ஆலயமும், பள்ளி கொண்ட புத்தர் ஆலயமும் பெரியவை. மரகத புத்தர் ஆலயத்தின் சுற்றுப் பிராகாரங்களில், இராமாயணக் கதையை அற்புதச் சித்திரங்களாக வரைந்திருக்கின்றனர். இராமாயணக் கதையும், சித்திரங்களும் நமது நாட்டில் வழங்குவதினின்றும் சிறிது மாறுபட்டவை.

ஏராளமான நல்ல திரைப்படக் காட்சிச்சாலைகள் இருந்தன. பெரும்பாலும் அமெரிக்கப் படங்களையே திரையிட்டனர். சயாம் மொழியில் தயாரிக்கப்பெற்ற படங்கள் பதினாறு மில்லிமீட்டர் என்னும் சிறிய அளவிலேயே இருந்தன.

சயாமிய நாடகம் ஒன்றுக்குச் சென்றேன். பெரும்பாலும் புராண சம்பந்தமான நாடகங்களே. ஆனால் அன்று நடந்தது சமூக நாடகம். நாடகக் கொட்டகை பெரிது. சுமார் ஆயிரம் பேர் இருந்தார்கள். ஆண்களையும், பெண்களையும் தனித்தனிப் பகுதியாகப் பிரித்து, இரண்டுக்குமிடையே திரை போடவில்லை. கலந்து ஒன்றாக உட்கார்ந்திருந்தார்கள். நடிகர்கள் மேடையில் தோன்றினார்கள். ஆனால் சங்கீத வாத்தியக் கோஷ்டியாரும், பாடகர்களும் மேடைக்கு வெளியே ஓர் இடத்தில் அமர்ந்திருந்தனர். நடிகர்கள் பாடவில்லை; நடிப்பதும், பேசுவதும், நாட்டியம் ஆடுவதும்தான். பெரும்பாலான நாடகங்கள் பழைய சயாம் அரசர்களால் எழுதப்பெற்றவை என்று கேள்வியுற்றேன். அன்றைய நாடகத்தின் நடிக நடிகையர், உயர்தரக் கல்லூரிகளில் பயிலும் மாணவ மாணவிகள் என்று கூறினார்கள். நாடகம் நன்றாக இருந்தது. மொழி தெரியாவிட்டாலும் அதைப் பார்க்க மகிழ்ச்சியாய் இருந்தது. நடிகர்கள் திறமையாக நடித்தனர். அடிக்கடி ஜனங்கள் சிரித்ததால் நாடகத்தில் நகைச்சுவை மலிந்திருந்தது என்று அறிந்தேன். அந்தச் சிரிப்பும் ஓர் அளவுக்கு உட்பட்டதுதான். அளவுக்கு மீறி ஆரவாரம் செய்வதோ உரக்கப் பேசுவதோ நாடகக் கொட்டகையில் கிடையாது. நாடகம் முடிந்ததும் அவ்வளவு பேரும் சில விநாடிகளில் அமைதியாகக் கலைந்தனர். நாடகத்தில் காணப்பெற்ற

கலையையும், பண்பாட்டையும், நாடகம் காணவந்த மக்களிடம் காணலாம்.

'கார்னிவல்' என்பது மக்கள் கூடி உல்லாசமாகப் பொழுது போக்குவது. அங்கே நாடகம், சங்கீதக் கச்சேரிகள், சிறு போட்டிகள் நடைபெறும். போலீசார் நடத்திய கார்னிவலுக்கு நண்பர்கள் அழைத்துச் சென்றார்கள். ஏராளமான கூட்டம்; நிகழ்ச்சிகள் ஒன்றும் கவர்ச்சியாக இல்லை. பெரும்பாலான சயாமிய ஆண்களும் பெண்களும் மேனாட்டு முறையிலேயே உடைதரித்திருந்தனர்.

அமெரிக்க நாட்டில் உள்ள 'கொக்கோ கோலா' பானங்கள் சயாம் நாட்டில் எங்கும் கிடைத்தன. கொக்கோ கோலாவின் ரகத்தைச் சேர்ந்த 'பெப்சி கோலா', 'ஸெவன் அப்' என்ற வகைகளும் அங்கே ஏராளம். அமெரிக்காவின் ஒருவகை நடனம் (Square Dance) அந்நாட்டில் தீவிரமாகப் பரவி வந்தது. சிறிய நகரங்களில்கூட அதற்காகக் கட்டிடங்கள் கட்டப் பெற்றிருந்தன.

கீழை நாடுகளிலே முதன்முதலாக டிராம் வண்டிகள் பாங்காக்கில்தான் போடப்பெற்றன என்று கூறினார்கள். உலகத்திலுள்ள சிறந்த மோட்டார்களை அங்கு காணலாம். சைகிள் ரிக்ஷாக்கள் அங்கு ஏராளம். நாட்டின் பல பகுதிகளுக்கு ஆற்றின் மூலமாகப் போக்குவரத்து நடைபெற்றது.

தபால் நிலையம் பெரிய கட்டிடம். அங்கு ஒவ்வொரு தபாற்காரரும் தபால்தலைகள் விற்றனர் என்றும் அதற்கு அவர்களுக்குக் கழிவுத் தொகை உண்டு என்றும் கூறினார்கள்.

சயாம் நாட்டின் நாணயத்திற்குத் 'திக்கல்' என்று பெயர். அதன் மதிப்பு சுமார் நான்கணு. பாங்காக்கில் அமெரிக்க டாலர் உள்பட எந்த நாட்டுப் பணத்தை வேண்டுமானுலும் வாங்கலாம். 'பாங்க் ஆப் அமெரிக்கா'வின் கிளை ஒன்று அங்கிருந்தது. உள் நாட்டுப் பாங்குகள் பல. இந்தியப் பாங்குகளில் ஒன்றுதான் அங்கே யிருந்தது.

இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதி காரியாலயம் ஒன்று அங்கிருந்தது. சயாமில் உள்ள இந்தியர்களில் பஞ்சாபிகளின் தொகை அதிகம். பெரும்பாலான இந்தியர் கூலி வேலை செய்தனர். இந்தியர்களிலே வியாபாரிகளும் சிலர் உண்டு. அவர்களிலே, காரைக்காலிலிருந்து சயாம் நாட்டில் குடியேறிய மரைக்காயர் குடும்பத்தார் விருந்தோம்பலில் மிகச் சிறந்தவர்கள். அவர்கள் அந்நாட்டிலேயே மணம் செய்துகொண்டு அங்கேயே தங்கிவிட்டனர்.

பாங்காக்கில் அழகான மாரியம்மன் கோயில் ஒன்று உண்டு. அதனைக் கட்டுவதற்குக் காரணமாக இருந்தவர் வைத்தியலிங்கப் படையாச்சி எனக் கேள்வியுற்றேன்.

தமிழ் நாட்டிலிருந்து சென்ற பிரபல வடமொழி அறிஞரான காலஞ்சென்ற சாஸ்திரியார், சயாமில் சுமார் இருபது ஆண்டுகள் தங்கி, அங்கு சம்ஸ்கிருதம் கற்பித்தார். அவர் அந்த நாட்டு அரசாங்கத்துக்கு மொழி, மதம் முதலிய விஷயங்களில் ஆலோசனை கூறுபவராக இருந்தார்.

இரண்டாவது உலக யுத்தத்தின்போது, சயாமுக்கும், பர்மாவுக்கும் இடையே ரயில் போடுவதற்காக, ஜப்பானியர் நூற்றுக்கணக்கான இந்தியரைக் கொண்டு

வந்தனர். ரயில் பாதை போடும் வேலை பூர்த்தியாக வில்லை. அதில் இறந்தோர் தொகை ஏராளம். அதனை சாவு ரயில்பாதை (Death Railway) என்று கூறுவார்கள். அவர்களில் சாகாதவர்கள் பாங்காக்கிலேயே தங்கிவிட்ட னர். அவர்கள் அனைவருக்கும் நல்ல வேலையோ அல் லது சாப்பாடோ கிடைக்கவில்லை. அவர்களில் பெரும் பாலோர் இழிவான நிலையில் இருந்ததாக அறிந்தேன்.

நாட்டின் குடியேற்றச் சட்டதிட்டங்கள் வரவரக் கடுமையாகி வந்தன.

ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் ஆதரவில், ஆப்கனிஸ்தானம் முதல் ஜப்பான், இந்தோனேஷ்யா வரையிலும் உள்ள பதினெட்டு ஆசிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கான திட்டங்களைக் கண் காணிக்கும் மத்தியக் காரியாலயத்தை அங்கு அமைத் திருந்தார்கள். இதனை 'இகாபே' (ECAFE) என்று சொல்லுவார்கள். அப்போது சென்னையைச் சேர்ந்த டாக்டர் லோகநாதன் அதன் தலைவராக இருந்தார். அவரைத் தவிர சுமார் பன்னிரண்டு இந்தியர்கள் அங்கு அதிகாரிகளாக இருந்தனர். அதன் அதிகாரிகள் அனைவரும் பதினெட்டு ஆசிய நாடுகளிலிருந்து, அவை ஐக்கிய நாடுகள் சபைக்குச் செலுத்தும் சந்தாத் தொகைக்குத் தக்கபடியும், திறமைக்குத் தகுந்தாற் போலவும் தேர்ந்தெடுக்கப் பெற்றவர்கள். ஆசியாவி லுள்ள சிறந்த அறிஞர்களில் சிலர் அந்த ஸ்தாபனத் தில் பணியாற்றினார்கள் என்று அறிந்தேன்.

தாய்லாந்தில் நான்கு நாள் தங்கி, அந்த நாட்டைப் பற்றித் தப்பும் தவறுமாக எழுதாமலிருக்க வேண்டு மென்பதற்காக, பாங்காக்கில் சில ஆண்டுகளாக வசித்து

வரும் இந்திய அன்பர் ஒருவரிடம் சில குறிப்புக்களை எழுதி வாங்கிக்கொண்டேன். அவற்றில் சில :—

ஆசிய நாட்டில், அன்னியர் ஆட்சிக்கு ஒருபொழுதும் உட்படாத ஒரே சுதந்திர நாடு தாய்லாந்து.

தாய்லாந்து மக்கள், ஒவ்வொரு நாளும் மகிழ்ச்சியோடு வாழ்வதற்கு என்ன தேவையோ அதைத்தான் செய்வார்கள்.

ஒவ்வொரு நாளும் மகிழ்ச்சியோடு இருந்தால் அதைப்போல ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு வருஷமும் மகிழ்ச்சியாக இருக்கும். பொதுவாக இவர்கள் சுலபமான கவலையற்ற வாழ்க்கை நடத்துகிறார்கள். இதற்கு இந்நாட்டில் விளையும் அபரிமிதமான உணவுப் பொருளே காரணம். 'நீருள்ள இடத்தில் மீன் இருக்கும், நிலமுள்ள இடத்தில் நெல் இருக்கும்' என்பது பழமொழி.

இவர்கள் வரவுக்கு மீறிச் செலவு செய்வார்கள். சம்பாதிப்பதற்கு முன்னமேயே செலவு செய்கிறார்கள் என்றும் கூறலாம். உதாரணமாக எங்கள் வீட்டு வேலைக்காரிக்கு மாதம் இருநூறு திக்கல் சம்பளம். இதில் நூற்றைம்பது திக்கல் தலையலங்காரத்துக்குச் செலவு செய்வாள். மீதிப் பணம் ஆடைக்குச் சென்றுவிடும். சம்பளம் வாங்கிய இரண்டாவது நாள் கையில் பணமிராது.

வீட்டுக்கு வேண்டிய நாற்காலி, சோபா, முதலிய சாமான்களுக்கும், மோட்டார் முதலிய வாகனங்களுக்கும் அதிகமாகச் செலவு செய்வார்கள். மோட்டாரிலும், உடையிலும் இவ்வளவு கவனம் செலுத்தும் இவர்கள், தங்களுடைய வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்வதில்லை. தினந்தோறும் நிறையச் சாப்பிடுகிறார்கள். ஒரு நாளில் முக்கியமான தொழில் இதுதான்!

மக்கள் வாழ்க்கையில் உண்டாகும் உயர்வு தாழ்வு களைப் பற்றிப் பொதுவாகக் கவலைப்படுவதில்லை. இதற்கு இவர்களுடைய மதப் பழக்கவழக்கமே காரண மாகும். ஒவ்வொருவனும், தன்னுடைய ஆரம்ப வாழ்க் கையில் கொஞ்ச காலம் புத்த சந்நியாசியாகக் காலம் கழிக்கவேண்டும். இதனுல் இவர்களுக்கு ஓரளவு பற் றற்ற தன்மை ஏற்படுகிறது.

சம்ஸ்கிருத மொழிக்குச் செல்வாக்கு அதிகம். இவர்கள் மொழி சம்ஸ்கிருதத்திலிருந்து தோன்றியது. இவர்கள் பெயர்கள் அனைத்தும் இந்தியப் பெயர்களே. புத்த மதத்தோடு, இந்தியாவிலிருந்து பல பழக்க வழக் கங்களும் இங்கே வந்திருக்கின்றன.

அரசியலில் தாய்லாந்து ஜனநாயகம் அன்று. அமெரிக்கரின் அந்நியநாட்டுக் கொள்கையால் இந்நாடு மேற்கத்திய வல்லரசுகளுக்கு ஒரு தளமாக அமைந்து விட்டது.

பொதுவாக தாய்லாந்துக்காரர்கள் நல்லராஜதந்திரி கள். ஜப்பானியர் படையெடுத்தபொழுது அவர்களுக்கு நண்பர்களாக இருந்தார்கள். இப்பொழுது இவர்கள் அமெரிக்காவுக்கு நண்பர்கள்! கம்யூனிஸ்ட் சீனுவால் அபாயம் உண்டாகும் என்ற பயம்தான் இவர்களை அமெரிக்காவின் பக்கம் இழுத்துச் சென்றது.

அரசாங்க உத்தியோகங்களுக்குச் சம்பளம் மிகக் குறைவு.

இந்நாட்டில் பெண்களுக்கு முக்கியத்துவம் அதிகம். பலருக்குப் பெரும் சொத்துக்கள் இருக்கின்றன. கல் யாணச் சட்டங்கள் மிகவும் சுலபம். ஒருவரை ஒருவர் கட்டாயமாக நம்பி இருக்க வேண்டுவதில்லை. விவாக

ரத்து எளிது. பிறக்கும் குழந்தைகள் எல்லாம் தாயின் பெயரிலேயே பதிவு செய்யப்பெறும். பணக்காரருக்குப் பல மனைவிகள் உண்டு. மனைவியின் எண்ணிக்கையைப் பொறுத்ததே அவர்களின் மதிப்பு. ஐரோப்பாவில் பாரிசைப் போலவே கீழை நாடுகளுக்குப் பாங்காக் கேளிக்கை ஸ்தலம். சில ஆண்டுகளுக்குமுன் இளம் பெண்களை குறைந்த விலைக்கு அடிமைகளாக விற்றனர்.

ஆசியாவிலே உயர்ந்த வாழ்க்கைத்தரமுள்ள நாடு தாய்லாந்து.

தாய்லாந்து எஞ்சினியர்கள் மிகத் திறமைசாலிகள். ஒரே இரவில் வீடு கட்டி முடிப்பார்கள்! இத்துறையில் இந்தியா இவர்களைப் பின்பற்ற வேண்டும்.

பண்பாடு, பெருந்தன்மை, ஒழுங்குமுறை இவற்றிலே மிகவும் உயர்ந்த நிலையை அடைந்த உலகத்தில் உள்ள சிறந்த மக்களிலே, தாய்லாந்து மக்களும் ஒருவர்.

---

# பர்மா

பாங்காக் விமான நிலையம் பெரிது. தாய்லாந்து நாட்டினர் நடத்திய தாய் ஏர்வேஸின் விமானத்தில் இரங்கூன் சென்றேன். வழியில் பெரும் பகுதி மலைப் பிரதேசம். மனிதர்கள் நடந்தோ அல்லது வாகனங் களிலோ செல்லமுடியாத பகுதிகளைப் பார்க்கும்பொழுது தான் விமானப் பிரயாணத்தின் சௌகரியத்தை உணரு கிறோம். கப்பல் வழியே இரங்கூன் செல்வதானால் ஆறு நாட்களுக்குக் குறையாது. விமானத்தில் இரண்டே மணி நேரம்தான். விமானம் ஓட்டியவரும், மற்ற வேலைக் காரர்களும் சயாமியர்கள். அவர்கள் அன்பாகவும் மரியாதையாகவும் நடந்துகொண்டார்கள்.

இரங்கூனை நெருங்கினோம். பொன்னிறமுள்ள சுவேதகான் பகோடா காட்சியளித்தது. காலை வெயில் அதன் பொன்னிறமுள்ள ஸ்தூபிகள்மீது பிரகாசித்தது அற்புதமான காட்சியாக இருந்தது.

மிங்லாடன் என்பது விமான நிலையத்தின் பெயர். கீழை நாடுகளில் உள்ள சிறந்த விமான நிலையங்களில் ஒன்றாக அதனை உருவாக்க முயன்றார்கள். சுங்கப் பரி சோதனையாளர், குடியேற்றப் பதிவு அதிகாரிகள் அனை வரும் பர்மியர். அவர்கள் எனக்கு எவ்விதமான சிரம மும் கொடுக்கவில்லை.

விமான நிலையத்தில் நண்பர்களை எதிர்பார்த்தேன். ஒருவரையும் காணோம். பின்னர் இரங்கூனுக்கு டெலி போன் செய்ய எண்ணினேன். டெலிபோன் பழுதாகி விட்டது என்று கூறினார்கள். இரங்கூன் எனக்குப்

பழைய ஊர். ஆனால் அங்கு சென்று பன்னிரண்டு ஆண்டுகளாகி விட்டன. தாய் ஏர்வேய்ஸ் ஸ்தாபனத்தாரின் பஸ்ஸிலேயே, நகரத்துக்குச் சென்றேன். விமான நிலையத்திலிருந்து நகரம் சுமார் பத்து மைல். யுத்தத்தால் ஏற்பட்ட சேதங்களின் அடையாளங்கள் அப்பொழுது காணப்பெற்றன. தெருக்கள் மேடுபள்ளங்களுடன் மோசமாக இருந்தன.

ஒரு வாரத்துக்குமுன் மலேயாவிலிருந்து விமானத் தபாலில் எழுதிய கடிதம், மிங்லாடன் விமான நிலையத்தில் நான் இறங்கிய பின்னரே என் நண்பர்களுக்குக் கிடைத்தது. ஒரு நண்பரின் காரியாலயம் ஒரு கட்டிடத்தின் நான்காவது மாடியிலிருந்தது. அதற்கு 'லிப்ட்' இருந்தது. ஆனால் யுத்த காலத்தில் அது சேதமடைந்து விட்டது. லிப்ட் இருந்த இடமும் செப்பனிடப்படாமல் இருந்தது. மாடிப் படிகளும் பாழடைந்து கிடந்தன. இரங்கூனில் தபால்கள் ஒழுங்காக விநியோகிக்கப் பெறுவதில்லை என்று கேள்விப்பட்டேன். தபால்காரர்கள் பல மாடிகள் ஏறி இறங்கச் சோம்பலுற்றுக் கடிதங்களைக் கிழித்து எறிந்து விடுவார்களாம். எனவே, பல மாடியுள்ள கட்டிடங்களில் பலர், கட்டிடத்தின் கீழ்வீட்டு வாயிலிலேயே தனித்தனி தபால் பெட்டிகளை வைத்திருந்தார்கள். அவற்றில் தபால்காரர்கள் அந்தந்தப் பெட்டி விலாசதாரரின் கடிதங்களைப் போட்டுச் சென்றனர். மலேயாவிலிருந்து ஒரு வாரத்துக்குமுன் எழுதிய விமானத் தபால், ஏன் தாமதமாகக் கிடைத்தது என்று நண்பரைக் கேட்டேன்.

"தண்ணீர்த் திருநாள் நேற்றுத்தான் முடிந்தது. அந்தத் திருநாளுக்காக, தபால் நிலையத்துக்கு ஒரு வாரம் விடுமுறை" என்றார்.

தண்ணீர்த் திருநாள் என்பது பர்மியரின் தேசீயத் திருநாட்களில் ஒன்று. மழை வருவதற்கு வருண பகவானை வேண்டி, அதைக் கொண்டாடினார்கள். பர்மா வில் ஆண்களும், பெண்களும் தங்கள் மீதும், வீதியில் செல்பவர்கள் மீதும் தண்ணீரை ஊற்றினார்கள்; அல்லது குழாய் வழியாகத் தண்ணீரைப் பீச்சினார்கள். அது நல்ல தண்ணீர். எந்தவிதமான வர்ணமும் கலந்ததன்று. வீதிகளில் நெருப்பணைப்பதற்காக வைத்திருந்த தண் ணீர்க் குழாய்களை யெல்லாம் நகரசபையார் அத்திரு நாளில் பொதுமக்கள் உபயோகத்திற்குத் திறந்து விடுவது வழக்கம். ஒருவர்மீது பலர் ஒரே சமயத்தில் தண் ணீர் ஊற்றினார்கள். முன்பின் தெரியாத ஆண்களும், பெண்களும் குழந்தைகளும் மலர்ந்த முகத்துடன் ஒருவர் மீது தண்ணீர் ஊற்றியபோது, ஆடைகள் நனைந்து விட்ட போதிலும் அவர்களுடைய மகிழ்ச்சியில் அவரும் கலந்து கொள்வார். உற்சாகம் மிகுந்த பர்மிய மக்கள், ஆண்களும் பெண்களும் திருநாளைப் பெருமகிழ்ச்சி யோடு கொண்டாடினார்கள்.

பர்மாவின் நிலப்பரப்பு சுமார் இரண்டு லட்சத்து அறுபதாயிரம் சதுரமைல். பர்மாவின் மக்கள் தொகை ஒரு கோடியே எண்பது லட்சம். தலைநகரான இரங் கூனில் மட்டும் ஏழு லட்சத்துக் கதிகமான மக்கள் வசித் தார்கள். பர்மாவின் முக்கிய நதி ஐராவதி. அதில் தொள்ளாயிரம் மைல் தூரம் கப்பல் போக்குவரத்து உண்டு.

இரங்கூன் ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஒரு துறைமுகம். கடலுக்கும் இரங்கூனுக்கும் இடையில் உள்ள தூரம் இருபத்தோரு மைல். இரங்கூன் ரயில் நிலையம் பெரிது. அதனைப் பர்மிய முறையில் மிக்க வனப்புடன் புதிதாகக் கட்டியிருந்தார்கள். ஆனால்

ரயில்களின் எண்ணிக்கையும் அவை செல்லும் தூரமும் முன்னைவிடக் குறைவு.

பர்மா முழுதும் பர்மா அரசாங்கத்தின்கீழ் வர வில்லை. இடையிடையே சில பகுதிகள் இன்னும் "கலகக் காரர்" வசமே இருந்தன. இரங்கூனிலிருந்து பல நகரங் களுக்கு விமானத்தில்தான் செல்லவேண்டும். பர்மா அரசாங்கமே விமானப் போக்குவரத்தை நடத்தியது.

பஸ்கள் எல்லாம் சிறியவை. அவற்றில் ஏறி இறங்குவதே உடற்பயிற்சி செய்வதுபோலிருந்தது. பஸ்களை வேகமாகவும், முரட்டுத்தனமாகவும் ஓட்டுவதில் பேர்பெற்றவர் பர்மியர்.

பர்மிய நாட்டின் கலையழகு அற்புதமான சுவேத கான் பகோடாவே. அது யுத்தத்தில் அழியாதது, புத்தர் பிரானின் அருளேயாகும். ஊதுவத்தியைக் கொளுத்திப் பூச்செண்டுகளை வைத்து, பர்மியர் புத்தர்பிரானை வணங்கினர்கள். சுவேதகான் பகோடாவின் உயரம் முந்நூற்று இருபத்தாறு அடி. உலகிலேயே அதுதான் பெரிய பகோடா. அங்கே உள்ள புத்த விக்கிரகத்தின் உயரம் அறுபத்தைந்து அடி.

இரங்கூனுக்கு அருகே பக்கோ என்ற ஊரில் உள்ள புத்தர் சிலையின் உயரம் நூற்றைம்பது அடி.

இரங்கூனிலிருந்து சில மைல் தூரத்தில், புதிய புத்தர் கோயில் ஒன்றை அரசாங்கத்தார் நிர்மாணித் திருந்தார்கள். கோயிலுக்கருகில் பெரிய மண்டபம் கட்டி யிருந்தார்கள். அது வெளித் தோற்றத்துக்கு ஒரு சிறு குன்று போலத் தோன்றிற்று. ஆனல் பிரமாண்டமான மண்டபம்; இரண்டாயிரம் பேர்களுக்கு மேல் உட்கார லாம். நவீன வசதிகளெல்லாம் அமைத்திருந்தார்கள்.

அதற்கருகே நூற்றுக்கணக்கான மக்கள் தங்குவதற்குப் பல விடுதிகள் கட்டியிருந்தார்கள். பௌத்த மத வளர்ச்சிக்கு மகாநாடுகள் கூட்டப்பெற்றபோது, உலகின் பல பாகங்களிலும் உள்ள பௌத்த அறிஞர்கள் விடுதிகளில் தங்கி மண்டபத்தில் கூடி ஆராய்ச்சி செய்தார்கள்.

பர்மாவில் பெரும்பாலான மக்கள் பௌத்தர்கள். எனவே அரசாங்கம் பௌத்த மத ஸ்தாபனங்களில் சிரத்தை கொண்டுள்ளது. பர்மாவில் மதச் சுதந்திரம் உண்டு. இந்து, முஸ்லிம், கிறிஸ்துவ மத ஸ்தாபனங்களுக்கும் அரசாங்கம் பொருளுதவி செய்து வந்தது.

பர்மாவின் நாணயம் கியாத் (KYAT) என்பது. ரூபாய் என்றே எல்லோரும் சொல்லுவார்கள். நூறு காசு கொண்டது ஒரு ரூபாய். இந்தியாவின் ரூபாய்க்கும் பர்மாவின் ரூபாய்க்கும் சட்டப்படி மதிப்பு ஒன்றே ஆனால் பர்மாவிலிருந்து ரூபாய் எடுத்துச் செல்வது. இயலாத காரியம். அப்படி எடுத்துச் சென்றாலும் வெளி நாடுகளில் அவற்றுக்கு மதிப்புக் கிடையாது. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின்னர் ஒவ்வொரு நாடும் தங்கள் நாணயச் செலாவணியைக் கடுமையாகக் கட்டுப் படுத்தியதன் காரணமாக கள்ளச்சந்தை ஏற்பட்டது. அது பெரும்பாலான நாடுகளில் உண்டு.

பர்மாவில், பர்மிய மொழிப் பத்திரிகைகளும், ஆங்கிலம், தமிழ் முதலிய மொழிப் பத்திரிகைகளும் வெளியாயின. இந்தியாவில் வெளியான பத்திரிகைகளில் பல விமானத்தில் பர்மாவுக்கு வந்தன.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்வரை பர்மா, இந்தியாவுடன் இணைக்கப்பெற்றிருந்தது. இயற்கை வளமுள்ள பர்மா நாட்டின் முக்கிய பொருள்களான

மரம், நெல், மண்ணெண்ணெய் ஆகிய மூன்றும் பிரிட்டிஷார் வசமே இருந்தன. நூற்றுக்கணக்கான மைல் கப்பல் போகும் வசதியுள்ள ஐராவதி நதியிலே ஓடிய கப்பல்கள் அனைத்தும் ஒரு காலத்தில் பிரிட்டிஷ் வியாபார ஸ்தாபனத்திடமே இருந்தது. இந்தியா சுதந்திரம் பெற்றுவிடுமென்றும் அப்பொழுது பர்மா தங்கள் கையைவிட்டுப் போய்விடுமென்றும் கருதிய பிரிட்டிஷார் பர்மாவை இந்தியாவிலிருந்து பிரித்தனர். ஆனால் காலத்தின் வேகத்தால் ஏற்பட்ட சம்பவங்களால் இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்னரே பர்மா சுதந்திர நாடாகிவிட்டது. அதுமட்டுமன்று; பர்மா காமன் வெல்த்திலும் சேரவில்லை!

பர்மாவை வளப்படுத்தியதில் இந்தியர் பங்கைக் குறைவாக மதிப்பிடக்கூடாது. அதைப்போலவே பர்மாவில் இந்தியர் சம்பாதித்த பணத்தையும் குறைவாக மதிப்பிடக்கூடாது.

பர்மாவிலே வாழ்ந்த இந்தியர்கள் பர்மிய மக்களுடன் கலந்து பழகவில்லை. தனித்தே வாழ்ந்து வந்தார்கள். பர்மாவில் லேவாதேவி செய்த இந்தியர்களுக்கு அவர்கள் கொடுத்த கடன்களுக்காக விரும்பாமலேயே நிலத்தை எடுத்துக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. நிலத்திலும் நல்ல வருமானம் கிடைத்தது. பர்மா பிரிவினை வந்த சமயத்தில், அந்த நிலங்களை நல்ல விலைக்கு விற்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. அப்பொழுது இந்தியர்கள் விலைக்கு விற்க விரும்பவில்லை. சாசுவதமாகப் பர்மாவில் வியாபாரம் செய்து லாபத்தை இந்தியாவுக்கு அனுப்பிக் கொண்டிருக்கவே விரும்பினர். யுத்தம் பல மாறுதல்களை உண்டாக்கிற்று. பலர் காட்டிலும் மேட்டிலும் மலையிலும் நடந்து உயிர் தப்பினர். சிலர் வழியில் மாண்டனர். தற்பொழுது பர்மாவில் உள்ள

அரசாங்கம், நிலத்தை எல்லாம் தேசிய உடைமை ஆக்கிவிட்டது. இந்தியருக்குச் சொந்தமாயிருந்த நிலங்களுக்கு ஈடு செய்ய, பர்மா அரசாங்கம் விரும்புகிறது. ஆனால் திட்டவட்டமாக ஒன்றும் செய்யப் பெறவில்லை.

மற்றத் தென்கிழக்கு ஆசிய நாடுகளைப்போல பர்மாவில் அதிகமான சீனர்கள் இல்லை.

தற்பொழுதுள்ள பர்மா பிரதமர் தாக்கின் நூ எல்லோராலும் விரும்பப்பெறும் உத்தமர். அவருடைய அரசாங்கத்தைத் தவிர, எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பெறும் வேறு அரசாங்கத்தை பர்மாவில் அமைப்பது கஷ்டம்.

இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையைப் பூரணமாக நம்பிக் கடைப்பிடிக்கும் ஆசிய நாடுகளில் பர்மாவும் ஒன்று.

அந்நியர் உதவியை மிகச் சிறிதளவே பர்மா ஏற்றது. தன் கையே தனக்குதவி என்று நிற்கும் அந்த நாட்டை யாரும் பாராட்டாமலிருக்க முடியாது.

---

# முடிவுரை

இரங்கூனிலிருந்து விமானத்தில் கல்கத்தா சேர்ந்தேன். அப்பொழுது இரவு மணி இரண்டரை. தாய் நாடு சேர்ந்தோம் என்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. இந்தியச் சுங்க அதிகாரி அன்பாகவும் கண்ணியமாகவும் நடந்துகொண்டார். அது எனது மகிழ்ச்சியை அதிகப் படுத்திற்று.

மூன்ருண்டுகளுக்கு மேலாகப் பல நாடுகளில் சுற்றி யலைந்த நினைவுகள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்ருக மனக் கண்களில் தோன்றி மறைந்தன.

உலகத்திலுள்ள முக்கியமான பிரச்னைகளில் ஒன்று நிறவேற்றுமை. இது வெள்ளையருக்கும், கறுப்பு நிறத்தவருக்கும் உள்ள வேற்றுமையின் தன்மையை விளக்குகின்றது. ஆனல் சில நாடுகளில் ஒரே நிறத்தினருக்குள் எவ்வளவோ இழிவான வேற்றுமைகள் இருக்கின்றன.

மனித சமூகத்தின் வளர்ச்சிக்கு இடையூருக நிற்கும் இந்தத் தீமைகள், யுத்தத்திற்குப்பின் சிறிது சிறிதாகக் குறைந்து வருகிறது என்றே கூறலாம்.

ஒவ்வொருவருக்கும் தாய்மொழிப் பற்றும், தாய் நாட்டுப் பற்றும் இருக்க வேண்டியது அவசியம். ஆனல் அந்தப் ‘பற்று’ ‘வெறி’யாக மாறிவிடக்கூடாது. அன்றியும் அது சமுதாய வளர்ச்சியைத் தடை செய்யவும் கூடாது.

மனித சமூகம் ஒன்றே; மனிதருக்குள்ள பெரும் பாலான பிரச்னைகள் ஒன்றே. எங்கும் காணப்பெறும் புனிதமான மனித உணர்ச்சி ஒன்றே.

“இரத்தத்தில் அனைவரும் சகோதரர்களே” என்பது வடமொழியில் உள்ள ஒரு திருவாசகம்.

“நான் ஓர் அதீனியன் அல்லன்; ஒரு கிரேக்கன் அல்லன்; ஆனால் உலகப் பிரஜையே ஆவேன்” என்றார் ஸோக்ரதர் என்னும் கிரேக்க அறிஞர், தமது மரணப் படுக்கையில் இருந்தபடியே.

“டியன் சியா வாய் குங்” என்பது சீனத் தந்தை சன் யாட் சென்னின் திருமொழி. அதன் பொருள், “ஆகாயத்திற்குக் கீழே அனைவரும் ஒன்றே.”

“ஒருவன் தனது நாட்டைப்பற்றி யன்று, தனது (மனித) இனத்தைப்பற்றிப் பெருமை கொள்ள வேண்டும்” என்பது காந்தியடிகளின் மொழியமுதம்.

இந்த உயர்ந்த கருத்துக்கள் பொதிந்துள்ள பண்டைக்காலத் தமிழ்ப் பேரறிஞரின் அருளுரை:

“யாதும் ஊரே; யாவரும் கேளிர்”

---